இரு, மத்₃யாஜீ – என்னை ஆராதனம் செய்துகொண்டிருப்பவனாயும் (இரு), மாம் - என்னை, நமஸ்குரு - நமஸ்காரம் செய், (இப்படிச் செய்துகொண்டிருந்தாயே யானால்) மாமேவ – என்னையே, ஏஷ்யஸி - அடையப் போகிறாய், ஸத்யம் - இது உண்மை, தே – உனக்கு, ப்ரதிஜாநே - ப்ரதிஜ்ஞை செய்கிறேன், மே - எனக்கு, ப்ரிய: - இஷ்டனாக, அஸி - ஆகிறாயல்லவா. 65

பா] வேதாந்தங்களில் * 'நான் ஸூர்யனுடைய வர்ணம் போன்ற வர்ணத்தையுடையவனாயும் ப்ரக்ருதிக்கு மேலான இடத்தில் இருப்பவனாயுமிருக்கிற இந்த மஹா புருஷனை அறிகிறேன், அவனை இப்படித் தெரிந்துகொண்டவன் இந்த ஜன்மத்திலேயே மோக்ஷத்தை அடைந்தவனாகிறான். மோக்ஷத்திற்கு வேறு வழியில்லை' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவைகளில் விதிக்கப்பட்டதாயும் வேதனம், த்யானம், உபாஸநம்,

---

தா] 'உபாஸநா' என்பது ப்ரயோஜனத்திற்கு நேரில் உபாயமாக இருப்பதினால் முக்யதமமாகிய அங்கியின் ஸ்வரூபத்தைச் சொல்லுகிறதென்று தெரிவிப்பதற்காக அந்த அங்கியின் ஸ்வரூபத்தை முதலில் ப்ரமாணங்களைக் கொண்டு நிரூபிக்கிறார்—'வேதாந்தங்களில்' என்றாரம்பித்து. இவ்விடத்தில் புருஷஸூக்த வாக்யத்தை எடுத்திருப்பது மற்ற உபநிஷத்துக்கள் இதை அனுஸரித்தவைகள் என்று தெரிவிப்பதற்காகவும், 'வேறுவழியில்லை' என்பதினால் இதினால் உண்டாக்கப்படுகிற வேறொரு உபாயம் நடுவில் இருக்கிறதோ என்கிற ஸந்தேஹத்தை விலக்குவதற்காகவும், இந்தக் கீதாஶாஸ்த்ரத்தில் 1 'ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸந்நிவிஷ்டோ மத்த: ஸ்ம்ருதிர்ஜ்ஞாநமபோஹநஞ்ச' என்றுசொல்லியிருக்கிற வாஸுதேவன் இந்த உபநிஷத் வாக்யத்தில் சொல்லப்படுகிறபடியினாலே 'உபாஸநா' என்று விதிக்கப்படுகிற த்யானம் மஹா புருஷனைப்பற்றிய த்யானம் என்று தெரிவிப்பதற்காகவும். இந்த வாக்யத்தில் 'வேதநா (அறிவது)' அல்லவோ சொல்லப்பட்டது, பக்தி சொல்லப்படவில்லையே என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'த்யாநம், உபாஸநம், முதலிய பதங்களினால் சொல்லப்படுகிற' என்று. 'முதலிய' என்னும் பதத்தினால் அந்தந்த ஸ்ம்ருதிகளில் சொல்லப்பட்ட 'ஸக்தியோக' முதலிய பதங்களும் சேர்த்துக்கொள்ளப்பட்டன. ஒரே ஸந்தர்ப்பத்தில் சொல்லப்படுகிற த்யானம், உபாஸநம் என்கிற பதங்களினால் வேதனமே விஶேஷித்துச் சொல்லப்படுகிறது. அப்படிச் சொல்லாவிடில் அல்பகா

---

* புருஷஸூக்தம். 1 பகவத்கீதை-15-18.

முதலிய பதங்களினால் சொல்லப்படுகிறதாயும் நேரில் பார்ப்பதைப்போல விசதமாக இருப்பதாயும் மிகவும் ப்ரியமாயுமிருக்கிற த்யானம் இவ்விடத்

ர்யம் பெரிய கார்யம் இவை இரண்டையும், ஒரு பலத்திற்காக இதையாவது அதையாவது செய்ய வேண்டும் என்று விகல்பமாகச் சொல்லுவது பொருந்தா தாகையினால் த்யானம் முதலியவைகளை விதித்திருப்பது வ்யர்த்தமாய்ப் போகவேண்டி வரும் என்று தாத்பர்யம். வேதநம், உபாஸநம், இவைகளைச் சொல்லுகிற பதங்களை ஆரம்பத்திலும் முடிவிலும் கலந்து சொல்லி யிருப்பதைக் காண்பதினால் (அதாவது வேதநம் என்னும் பதத்தினா லாரம்பித்து உபாஸநம் என்னும் பதந்தினால் முடிப்பதையும், உபாஸநம் என்னும் பதத்தினால் ஆரம்பித்து வேதநம் என்னும் பதத்தினால் முடிப்பதையும் இப்படிக் கலந்து ப்ரயோகித்திருப்பதை ஶ்ருதிவாக்யங்களில் கண்டிருப்பதினால்) வேதனமென்பது உபாஸநம் என்று ஶாரீரகபாஷ்யம் முதலிய க்ரந்தங்களில் வ்யக்தமாய் நிரூபிக்கப்பட் டிருக்கிறது. மேலும் 1 'அவன் பார்க்கத்தக்கவன் கேழ்க்கத் தக்கவன், மனனம் செய்யத்தக்கவன், த்யானம் செய்யத்தக்கவன்' என்றர்த்த முள்ள வாக்யத்தைச் சொல்லி, கீழ்ச்சொல்லிய பார்ப்பது முதலியவைகளை அனுவாதம் செய்கிற மற்றொரு ஶ்ருதிவாக்யம் 2 'ஆத்மாவைப் பற்றிய பார்வையினாலும் கேழ்ப்பதினாலும் மனனம் செய்வதினாலும் விஜ்ஞானத்தினாலும்' என்று 'விஜ்ஞாந' என்னும் பதத்தினால் த்யானத்தை அனுவாதம் செய்கிறது. இப்படியே பராபரவஸ்துவாகிய அந்தப் பகவான் பார்க்கப்பட்டிருக்கும் பொழுது என்றர்த்தமுள்ள வாக்கியத்தினால் சொல்லப்படுகிற பார்ப்பது நேராக ப்ரத்யக்ஷரூபமல்ல, முன்பு சொல்லியபடி அல்பகார்யம் பெரிய கார்யம் முதலியவைகளுக்கு விகல்பம் பொருந்தா தாகையினாலேயே. அதிகாரிகள் வெவ்வேறாகையினால் விகல்பம் ஸம்பவிக்கலாம் என்பதுமில்லை, அப்படி யேற்படுத்துவதற்கு ப்ரமாண மில்லாமையினால். ஒன்று வழியாகவும் மற்றொன்று அதின் வழியாக உபாயமாகிறது என்று கல்பிப்பதும் முடியாது, இடைவிடாத த்யானம் செய்வதும் நேரில் பார்ப்பதும் ஒருவித வ்யத்யாஸ மில்லாமல் நேரில் உபாய மென்று ஶ்ருதியில் சொல்லி யிருக்கிற படியினால். ஆகையினால் இவைஇரண்டும் ஒரே அர்த்தத்தைச் சொல்லுகிற தென்று சொல்ல வேண்டிய தவஶ்யமாகையினாலே ஒன்றை ஔபசாரிக மென்று சொல்லாமல் அது ஸம்பவிக்காதாகையினால் ப்ரயோஜன மில்லாமல் ஔபசாரிகமாகச் சொல்லுவது பொருந்தா தாகையினாலும் த்யானத்தைச் சொல்லுகிற பதத்

1 ப்ரஹ்மாரண்யகம் 6-5-6. 2 ப்ரஹ்மாரண்யகம் 2-4-5.

தில் 'உபாஸ்தே' என்றாரம்பித்து விதிக்கப்படுகிறது. அதிகமாக என் டனித்தில் ப்ரீதியுடையவனாய் என்னிடத்தில் அதிகமான ப்ரீதியுடைய னவகையினாலே தானும் மிகவும் ப்ரியமானதாயுமிருக்கிற த்யானத்தின்

---

தினால் ப்ரத்யக்ஷமாகப் பார்ப்பதை ஔபசாரிகமாகச் சொல்லில் ஒரு வித மேன்மையும் ஸித்திக்கா தாகையினாலும் த்யானத்தை ப்ரத்யக்ஷத்தைச் சொல்லுகிற பதத்தினால் உபசாரமாகச் சொல்லிலேலாவெனில் ப்ரத்யக்ஷத்தைப் போல விசதமாக இருக்கவேண்டுமென்கிற விசேஷத்தை விதிக்கிற படியினாலே ப்ரயோஜனத்தோடு கூடியதாகையினாலும் 1 'ஸ்வப்நதீ ஸமம்' என்றிவை முதலிய வசனங்களில் சொல்லப்படுகிற விதமாயிருக்கும் தன்மையையுடைய த்யானமே 2 'அவன்பார்க்கப்பட்டிருக்கும் பொழுது' என்றும், 3 'அவனை நேரில்பார்த்து' என்றும், 4 'அவன் பார்க்கத் தக்கவன்' என்றும் அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவைகளினால் விதிக்கப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'நேரில் பார்ப்பதைப் போல விசதமாக இருப்பதாயும்' என்று. 'த்யானம்' என்பதற்கு மனதை ஒரே வஸ்துவினிடத்திலேயே அதிகக் காலம் செலுத்துவது என்றர்த்தம். இந்த த்யானம் என்னும் பதத்தினால் இதனாலுண்டாகிற எண்ணெயின் தாரையைப் போல் இடைவிடாமல் நினைத்துக்கொண்டிருப்பது லக்ஷணையாகச்சொல்லப்படுகிறது. வேதாந்தங்களில் சொல்லப்பட்ட வேதநம் என்று பிரித்துக்கொண்டு த்யானம் உபாஸநம் என்று தனிவாக்யமாகவும் பாடமாகும். அப்பொழுது அந்த வேதநம் என்பது விசேஷ்யம். வேதநம், த்யாநம், உபாஸநம், என்று ஒரே வாக்யமாகப் பாடமாக இருக்கும் பொழுது த்யானம் என்பது விசேஷ்யம் இதுவே பக்தியாக இருக்க வேண்டுமென்பதைச்சொல்லுகிறார்—'மிகவும் ப்ரியமாயு மிருக்கிற' என்று. 'இவ்விடத்தில்' என்பதற்கு நேரில் மோக்ஷத்தின் உபாயத்தை உபதேசிக்கும் பொழுது என்றர்த்தம். வேதாந்தங்களில் விதிக்கப்பட்டிருந்த போதிலும் அர்ஜுநனால் அறிந்துகொள்ளப் படாமையினால் அவனைக் குறித்து 'உபாஸ்வ' என்பது விதிக்கப்படுகிறது தான் என்று சொல்லுகிறார் 'விதிக்கப்படுகிறது' என்று. 'மத்பக்த:' என்னும் பதத்தின் அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'அதிகமாக என்னிடத்தில் ப்ரீதியுடையவன்' என்று. எவனுக்கு நான் அதிகமாக ப்ரீதி செய்யக்கூடிய விஷயமா யிருக்கிறேனோ அவன் 'அத்யர்த்தப்ரிய:' என்று சொல்லப் படுகிறான்.

---

1 கனவுகண்டதுபோலிருக்கிற புத்தியினாலறியத்தகுந்தவர்.
2 முண்டகோபநிஷத்-2-2-9 3 கடோபநிஷத்-1-3-15.
4 ப்ரஹதாரண்யகம்-6-5-6.

துடர்ச்சியைச்செய் என்றர்த்தம். 'மத்யாஜீ' என்கிற இடத்திலும் 'மாம்' என்பது சேர்த்துக்கொள்ளப்படுகிறது 'யஜநம்' ஆவது தேவதையை ஆராதனம் செய்தல். மிகவும் ப்ரியமாகிய என்னுடைய ஆராதனத்தைச் செய்துகொண்டிரு ஆராதனமாவது பரிபூர்ணமான கைங்கர்யம். என்னை நமஸ்காரம் செய் நமஸ்காரமாவது வணங்குதல், அதாவது மிகவும் ப்ரிய மாக இருக்கிற என்னிடத்தில் மிகுந்த வணக்கத்தைச் செய் என்றர்த்தம்.

---

1 'ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோऽத்யர்த்தமஹம்' என்றல்லவோ சொல்லப்பட்டது. இந்த ஶ்லோகத்தில் விதிக்கப்படுகிற அவஶ்யம் செய்யவேண்டிய கார்யத்தில் இந்த விஶேஷணம் சேரவேண்டும் என்கிற அபிப்ராயத்தினால் கர்த்தாவிற்கு விஶேஷணமாகச் சொல்லி இருக்கிறது என்று சொல்லுகிறார்—'என்னிடத்தில் அதிக...ப்ரியமான தாயுமிருக்கிற' என்று. 'மத்யாஜீ மாம் நமஸ்குரு' என்கிற இரண்டு பதங்களினாலும் அங்கியைச் சொல்லியிருப்பதினால் அதற்கு மிகவும் அந்தரங்கமாகிய அங்கங்கள் குறிக்கப்படுகின்றன என்று தெரிவிப்ப தற்காகச் சொல்லுகிறார்—'மத்யாஜீ என்கிற இடத்திலும்' என்றாரம் பித்து. 'யாஜீ' என்னும் பதத்தினால் இவ்விடத்தில் அபிப்ராயத்தி லில்லாத ஜ்யோதிஷ்டோமம் முதலியவைகள் தோன்றுகின்றனவே அதை விலக்குவதற்காக தாதுவின் வ்யுத்பத்தியை ஜ்ஞாபகப்படுத்து கிறார்—'யஜநம் ஆவது' என்றாரம்பித்து. ஏற்பட்ட அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'மிகவும் ப்ரியமாகிய' என்றாரம்பித்து. பக்தியில் சேர்ந் ததாகையினால் ஸ்வரூபத்திற்குத் தகுந்ததென்று தெரிவிப்பதற்காக வும் இது மிகவும் ஸாரதமம் என்றேற்படுவதற்காகவும் ஸாரமான அர் த்தத்தை விதிக்கிற பாஞ்சராத்திர ஶாஸ்த்ரம் முதலியவைகளினால் விதிக்கப்படுகிற விதத்தை ஜ்ஞாபகப்படுத்துகிறார்—'ஆராதனமாவது' என்றாரம்பித்து. மனதின் ஒருவித வ்யாபாரத்தில் முடிவுபெறுவதற் காகச் சொல்லுகிறார்—'நமஸ்காரமாவது வணங்குதல்' என்று. இத்தால் கீழேவிழுந்து நமஸ்காரம் செய்வது மாத்திரத்தைச் சொல்லுகிறது என்பது விலக்கப்பட்டது. நமஸ்காரம் மூன்றுவிதமாக அல்லவோ ஶாஸ்த்ரங்களில் சொல்லப்படுகிறது. 'மாம்' என்னும் பதத்தை இந்த இடத்திலும் சேர்த்துக்கொள்ளுவதினால் ஏற்பட்டதாகிய இதின் அபி ப்ராயத்தைச்சொல்லுகிறார்—'அதாவது மிகவும் ப்ரியமாயிருக்கிற' என்று. தானும் தன்னைச்சேர்ந்த வஸ்துக்களெல்லாமும் பகவானுக்கு ஶேஷ பூதமே என்றனுஸந்தானம் செய்வதினால் அதிகமாக வணக்கமுண்டா

---

1 பகவத்கீதை-7-17.

இப்படிச்செய்துகொண்டிருந்து என்னையே அடையப்போகிறாய். இதுஉண்மையென்று உனக்கு ப்ரதிஜ்ஞை செய்கிறேன். ஸந்தோஷத்திற்காக மாத்திரம் சொன்னதல்ல. எந்தக் காரணத்தினால் நீ எனக்கு மிகவும் ப்ரியனாகிறாயோ†'ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோऽத்யர்த்தமஹம் ஸ ச மம ப்ரிய:' என்று முன்பே சொல்லப்பட்டதல்லவா. எவனுக்கு என்னிடத்தில் அதிகமான ப்ரீதி இருக்கிறதோ அவனிடத்தில் எனக்கும் அதிகமான ப்ரீதி உண்டா

*கிறது என்று தாத்பர்யம். 'இப்படிச் செய்துகொண்டிருந்து' என்பதினால் கீழ்ச் சொல்லியபடி அதிக ப்ரீதியையுடையவனாயிருக்கை முதலியவைகளை அநுவாதம் செய்கிறது என்பது மாத்திரம் தாத்பர்யம். அதில்லாமல் தன்னிடத்தில் தானிருந்துகொண்டிருப்பது முதலியது தாத்பர்யமில்லை. 'என்னையே' என்கிற அவதாரணத்தினால் நடுவில் வேறொரு தாமதமுமில்லை என்பது சொல்லப்படுகிறது. 'உண்மை' என்பது ப்ரதிஜ்ஞைக்கு விசேஷணமே ஒழிய அது ப்ரதிஜ்ஞை செய்யப்படுகிறதல்ல. 1 'வாஸ்தோஷ்பதியே! நம்மை நீ தெரிந்துகொள்' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவைகளிலேபோலே வேறொருகதியும் இல்லாமையைப்பற்றிய 'ப்ரதி' என்னும் உபஸர்க்கம் ஒரு அர்த்தத்தையும் சொல்லுகிற தல்ல என்பதை நிராகரிக்கிறார்—'ப்ரதிஜ்ஞை செய்கிறேன்' என்று 2 'த்யௌ: பதேத் ப்ருதிவீ ஶீர்யேத ஹிமவாந் ஶகலீபவேத் ! ஶுஷ்யேத் தோயநிதி: க்ருஷ்ணே ந மே மோகம் வசோ பவேத்' என்றிவை முதலிய பகவானுடைய வார்த்தையையனுஸரித்துத் தாத்பர்யத்தைச் சொல்லுகிறார்— 'ஸந்தோஷத்திற்காக மாத்திரம் சொன்னதல்ல' என்று. இவ்விடத்தில் ப்ரியமான வார்த்தையாகையினால் ஸந்தோஷத்தை உண்டு பண்ணக் கூடிய அர்த்தவாதம் இது என்பது ஸந்தேஹிக்க வேண்டியதில்லை என்றர்த்தம். இப்படி இருந்துகொண்டிருப்பவனுக்குத் தன்னை அடைகிற விஷயத்தில் தன்னுடைய ப்ரீதியாகிற நடுவில் உண்டாகக் கூடிய வ்யாபாரத்தைச் சொல்லிக்கொண்டு ஸந்தோஷத்திற்காக மாத்திரம் சொன்னதென்கிற ஸந்தேஹம் நிராகரிக்கப்படுகிறது 'ப்ரியோऽஸி மே' என்பதினால், என்று*

† பகவத்கீதை-7-17. 1 யஜுர்வேதம்-3-4.

2 பாரதம்-உத்யோகபர்வம்-31-48. க்ருஷ்ணே-த்ரௌபதியே, த்யௌ: - ஆகாசம், பதேத்-கீழேவிழும், ப்ருதிவீ-பூமி, ஶீர்யேத்-வெடித்துவிடும், ஹிமவாந்—ஹிமவத் பர்வதம், ஶகலீபவேத் - சூர்ணமாய்விடும், தோயநிதி: - ஸமுத்திரம், ஶுஷ்யேத்-உலர்ந்துவிடும், மே-என்னுடைய, வச:-வார்த்தை, மோகம்-வ்யர்த்தமாக, நபவேத்-ஆகாது.

கிறது. ஆகையினால் அவனுடைய பிரிவைப் பொறுக்காதவனாகிய நான் அவனை என்னை அடைவிக்கிறேன். ஆகையினால் என்னையே அடையப் போகிறாய் என்று ப்ரதிஜ்ஞை செய்தது உண்மையே. 65

𑌸𑌰𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑌾𑌨𑍍 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌜𑍍𑌯
𑌮𑌾𑌮𑍇𑌕𑌂 𑌶𑌰𑌣𑌂 𑌵𑍍𑌰𑌜 ।
𑌅𑌹𑌂 𑌤𑍍𑌵𑌾 𑌸𑌰𑍍𑌵𑌪𑌾𑌪𑍇𑌭𑍍𑌯𑍋
𑌮𑍋𑌕𑍍𑌷𑌯𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌮𑌾 𑌶𑍁𑌚𑌃 ॥ 66

[இது பாஷ்யத்தின் முதல் யோஜனையை அனுஸரித்தது.]

ப - ரை] 𑌸𑌰𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑌾𑌨𑍍 - கர்மயோகம், ஜ்ஞானயோகம், பக்தியோகங்களாகிய எல்லாத் தர்மங்களையும், 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌜𑍍𑌯 - கீழ்ச்சொல்லிய விதமாக ஸாத்விக த்யாகம் செய்துவிட்டு, அதாவது அவைகளைச் செய்துகொண்டே அவைகளின் கர்த்ருத்வம், பலம், முதலியவைகளை விட்டுவிட்டு, 𑌏𑌕𑌂 - ஒருவனாகிய, 𑌮𑌾𑌂 - என்னை, 𑌶𑌰𑌣𑌂 - ரக்ஷிப்பவனாக, அதாவது

சொல்லுகிறார்—'எந்தக் காரணத்தினால்' என்றாரம்பித்து. இனி உண்டாக வேண்டியதாகிய ஜ்ஞானியாக இருக்கையை ஸித்தமாக வைத்துக் கொண்டு '𑌪𑍍𑌰𑌿𑌯𑍋𑌽𑌸𑌿' என்று அதின் ப்ரயோஜனத்தைச் சொல்லி இருக்கிறது என்கிற அபிப்ராயத்தினால் [1]'𑌪𑍍𑌰𑌿𑌯𑍋 𑌹𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑍋𑌽𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌂' என்று பொதுவாகிய முன் சொல்லிய காரணத்தைச் சொல்லியிருக்கிறது. இத்தால் '𑌹𑌿𑌤𑌂' என்னும் பதம் இது கீழ்ச்சொல்லப்பட்டதென்பதைக் காட்டுகிறது என்பது தெரிவிக்கப்பட்டது. கீழ்ச்சொன்ன அர்த்தம் ஸம்பவிக்காது என்கிற ஸந்தேஹத்தைப் பரிஹரிப்பதற்காக லோகத்தில் கண்டறியப்பட்டதையும் பகவானுடைய அபிப்ராயத்தையும் அனுஸரித்து உதாஹரிக்கப்பட்ட வசனத்தின் அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'எவனுக்கு என்னிடத்தில்' என்றாரம்பித்து. அதினாலேற்பட்ட அர்த்தத்தைச்சொல்லுகிறார்—'ஆகையினால் அவனுடைய பிரிவை' என்றாரம்பித்து. கார்யத்தைக் காரணத்தோடு சேர்த்து அர்த்தம் சொல்லுகிறார்—'ஆகையினால் என்னையே' என்றாரம்பித்து. 65

1 பகவத்கீதை-7-17

அந்தக் கர்மங்களினால் ஆராதிக்கப்பட்டு அவைகளின் பலங்களைக் கொடுப்பவனாக, வ்ரஜ - அனுஸந்தானம் செய், அஹம் - நான், த்வா - (இப்படிச் செய்து கொண்டிருக்கிற) உன்னை, ஸர்வபாபேப்ய: - எல்லாப் பாபங்களிலிருந்தும், மோக்ஷயிஷ்யாமி - விடுவிக்கிறேன், மாசுச: — துக்கப்படாதே.

[இது பாஷ்யத்தின் இரண்டாம் யோஜனையை அனுஸரித்தது.]

ப - ரை] ஸர்வதர்மாந் - எல்லாத் தர்மங்களையும், பரித்யஜ்ய - விட்டு விட்டிருக்கிற நீ, அன்றிக்கே கீழ்ச்சொல்லிய கர்மயோகம் முதலிய எல்லாத் தர்மங்களையும் விட்டிருக்கிற நீ, ஏகம் - ஒருவனாகிய, மாம் - என்னை, சரணம் - உபாயமாக, வ்ரஜ - அடை, அஹம் - நான், த்வா - உன்னை, ஸர்வபாபேப்ய: - எல்லாப் பாபங்களிலிருந்தும், அதாவது என்னிடத்தில் பக்தி செய்வதற்குத் தடையான எல்லாப் பாபங்களிலிருந்தும், மோக்ஷயிஷ்யாமி - விடுவிக்கிறேன், மாசுச: - துக்கப்படாதே 66

பா] கர்மயோகம் ஜ்ஞானயோகம், பக்தி யோகங்களாகிய, உயர்ந்த ப்ரயோஜனமாகிய மோக்ஷத்திற்கு ஸாதனங்களாகிய தர்மங்களை எனக்காராதனமாக மிகுந்த ப்ரீதியுடன் அவரவர்கள் அதிகாரத்திற்குத் தக்கபடிச் செய்து

தா] இப்படி விஸ்தாரமாகவும் சுருக்கமாகவும் சொல்லப்பட்ட கர்மயோகம் முதலிய மூன்றுவித யோகங்களுக்கும் பொதுவாகிய மிகவும் ஸாரமான அனுஸந்தானத்தை எடுத்துக் காட்டி அதினாலேயே 1 'மாமேவைஷ்யஸி' என்று கீழ்ச்சொல்லப்பட்ட இஷ்டத்தை அடைவதற்குத் தடங்கல்களாகிய அநிஷ்டங்களின் நிவ்ருத்தி உண்டாகிறது என்று சொல்லப்படுகிறது—இந்த ஸ்லோகத்தினால். இதையே சொல்லுகிறார்—'கர்மயோகம்' என்றாரம்பித்து. 'ஸர்வ' என்னும் பதத்தினால் கீழ் ப்ரஸ்தாவிக்கப்பட்ட மூன்று விதமான யோகமும் பொதுவாகச் சொல்லப்படுகிறது. கர்மயோகம் முதலியவைகள் தைர்யத்திற்குக் காரணங்களாகையினால் 'தர்ம' என்னும் பதத்திற்கு அர்த்தமாகின்றன என்று சொல்லுகிறார்—'உயர்ந்த ப்ரயோஜனமாகிய' என்றாரம்பித்து. ஆங்காங்கு ஸம்பவிப்பதைப் போல பரம்பரையாகவும் நேராகவும் என்று சேர்த்துக்கொள்ளவும். அவைகள் மோக்ஷத்திற்கு ஸாதனமாக இருப்பதற்குக் காரணத்தைச் சொல்லுகிறார்—'எனக்காராதனமாக' என்று. மற்ற மூன்றுவிதப் புருஷார்த்தங்களில் ஆசை இல்லாமைக்குக் காரணத்தைச் சொல்லுகிறார்—'மிகுந்த ப்ரீதியுடன்' என்று.

1 பகவத்கீதை - 18-65 2 பகவத்கீதை - 18-63

கொண்டே கீழ்ச் சொல்லிய விதமாக அவைகளின் பலம், அந்தக் கர்மங்கள், அவைகளில் கர்த்ருத்வம் முதலியவைகளை விட்டுவிடுவதினால் அவைகளை விட்டு என்னொருவனையே கர்த்தாவாகவும், ஆராதிக்கப்படு

டுமெபவஸித்யாகஉபாய' என்று கீழ்ச்சொல்லியதை அநுஸரித்துச் சொல்லுகிறார்—'அவரவர்கள் அதிகாரத்திற்குத் தக்கபடி' என்று. முறையே இவை எல்லாம் இவனுக்கு அநுஷ்டிக்க வேண்டியதாகும் என்று தாத்பர்யம். 'செய்து கொண்டே' என்பதினால் ஸ்வரூபத்தை விட்டுவிடுவது முதலிய பக்ஷங்கள் தாமஸமாயிருக்கை முதலிய காரணங்களினால் முன்னமேயே நிராகரிக்கப்பட்டன என்பது ஜ்ஞாபகப்படுத்தப்பட்டது. 'பரித்யஜ்ய' என்னும் பதத்தின் தாத்பர்யத்திலேற்பட்ட அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'கீழ்ச்சொல்லிய விதமாக' என்றாரம்பித்து. இந்த அத்யாயத்தின் ஆரம்பத்தில் நிரூபிக்கப்பட்டிருக்கும் விதமாக என்றர்த்தம். கர்மங்களை விடுவதாவது அந்தக் கர்மங்கள் தனக்குச் சேஷபூதங்கள் என்கிற அபிமானத்தை விடுவது. பக்தி யோகத்திலும் ஐஶ்வர்யம் முதலிய மற்றப் பலங்கள் விடத்தக்கவைகளே. மோக்ஷமென்று பேருடைய பலமும் எல்லாவற்றிற்கும் சேஷியாகிய பகவானுக்குச் சேஷபூதம் என்கிற புத்தியினால் தனக்குச் சேஷமென்கிற புத்தி பரிஹரிக்கத் தக்கது. 'முதலியவைகளை' என்பதினால் சட்டைகளைப் போலிருக்கிற இந்திரன் முதலிய தேவதைகள் ஆராதிக்கப்படுகிறார்கள் என்கிற அபிமானமும் சேர்த்துக்கொள்ளப் படுகிறது. மேலும் அந்தக் கர்மத்தைப் பற்றிய கர்த்ருத்வம் தனக்குச் சேஷம் என்கிற புத்தியும் 'முதலியவைகளை' என்னும் பதத்தினால் சேர்த்துக் கொள்ளப்படுகிறது. 'விட்டு விடுவதினால் அவைகளை விட்டு' என்பதினால் கர்மங்களை விடுவதாவது அந்தக் கர்மத்தைப் பற்றிய இவைகளை விட்டு விடுவது தான் என்று பொதுவான பதத்திற்கு விசேஷமான அர்த்தம் சொல்லப்பட்டது. மற்ற இடத்தில் தன்னிடத்தில் கர்த்ருத்வமும் அதை விட வேறாகிய இந்திரன் முதலியவர்களிடத்தில் உபாஸிக்கத்தகுந்தவனாயிருக்கையும், இவை இரண்டையும் விட வேறாகிய ஸ்வர்க்கம் முதலியவைகளில் அடையத் தகுந்த ப்ரயோஜனமாயிருக்கையும் இவை எல்லாவற்றையும்விட வேறாகிய கர்மத்தில் உபாயமாக இருக்கையும் உண்டென்றபிமானித்துக்கொண்டல்லவோ வேதாந்தம்தெரியாதவர்கள்ப்ரவ்ருத்திக்கிறார்கள். அப்படி உன்றால் அநுஸந்திக்கத்தக்கதல்ல. இவை எல்லாவற்றையும் ஒருவனாகிய என்னிடத்திலேயே அநுஸந்தானம் செய் என்று 'மாமேகம் ஶரணம் வ்ரஜ' என்பதின் அபிப்ராயம். இதையே சொல்லுகிறார்—'என்னொருவனையே' என்றாரம்பித்து.

கிறவனாகவும், அவைகளினால் அடைய வேண்டிய ப்ரயோஜனமாகவும், உபாயமாகவும் அனுஸந்தானம் செய். இதுவே எல்லாத்தர்மங்களினு

இவ்விடத்தில் கர்த்ருத்வம் முதலிய நாலுவித அர்த்தத்திலும் தனித் தனியாகவாவது இவை எல்லாம் சேர்ந்து ஒருவிதக் காரணத்தினாலாவது 'ஶரண' என்னும் பதத்திற்கு அர்த்தமாக இருப்பது ஸம்பவிக்காதாகையினால் கர்த்ருத்வம் முதலியது 'ஏகம்' என்பதினால் அபிப்ராயத்தில் கொள்ளப்பட்டதென்று அனுவாதம் செய்யப்பட்டது. 'உபாயமாகவும்' என்பதோவெனில் 'ஶரண' என்னும் பதத்தின் அர்த்தத்தைச்சொல்லி இருக்கிறது. 'கர்த்தாவாகவும்' என்பதற்கு கர்த்தாவாகிய ஜீவனையும் ஏவுகிறவனாகவும், அவனுக்கந்தர்யாமியாகவும், அனுமதிகொடுக்கிறவனாகவுமிருக்கிற என்றர்த்தம். இவைகளை அனுஸந்தானம் செய்வதினால் தானே கர்த்தா என்கிற அபிமானத்தை விடுதல் ஏற்படுகிறது. கர்மங்கள் வேறுதேவதைகளுக்குச் சேஷபூதங்கள், தனக்குச் சேஷபூதங்கள் என்கிற புத்தியை விடுவதற்காகச் சொல்லுகிறார்—'ஆராதிக்கப்படுகிறவனாகவும்' என்று. 1 'அஹம் ஹி ஸர்வ யஜ்ஞாநாம் போக்தா ச', 2 'ஸ்வகர்மணா தமப்யர்ச்ய' என்றிவை முதலியது முன்பேசொல்லப்பட்டதல்லவா. 'அடையவேண்டிய ப்ரயோஜனமாகவும்' என்பதுடன் நேராகவும் பரம்பரையாகவும் என்று சேர்த்துக் கொள்ளவேண்டியது. இத்தால் ஸ்வர்க்கம் முதலிய பலங்களை விடுதல் ஏற்படுகிறது. மூன்றுவித த்யாகங்களையும் செய்யவேண்டியதற்காக அனுவதிக்கப்பட்ட மூன்றுவித ஆகாரம் சொல்லப்பட்டது. இவ்விடத்தில் 'ஶரண' என்னும் பதத்தினால் விதிக்கப்படுகிற அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'உபாயமாகவும்' என்று. அந்தப் பகவானேயல்லவோ எல்லா ஶாஸ்த்ரங்களிலும், ப்ரீதியடைந்தவனாய்க்கொண்டு பலத்தைக் கொடுக்கிறான் என்று சொல்லப்படுகிறது, என்று முன்னமேயே நிஶ்சயிக்கப்பட்டது. தன்னால் செய்யப்படுகிற அழியக்கூடியவைகளாகிய யாகம்,உபாஸநம், முதலிய கார்யங்களில் காலாந்தரத்தில் வரப்போகிற பலத்திற்கு ஸாதனமிவை என்கிற புத்தியை விட்டுவிட்டுத்தானே எப்பொழுதும் ஸித்தனையும், நித்யமாக இருப்பவனையும், எல்லாம் தெரிந்தவனையும், ஸத்ய ஸங்கல்பனையுமிருக்கை, மிகவும் உதாரனாக இருக்கை முதலிய குணங்களையுடையவனையும் ஶாஸ்த்ரார்த்தங்கள் எல்லாவற்றினாலும் ஆராதிக்கப்படுகிறவனையுமிருக்கிற எனனிடத்தில்

1 பகவத்கீதை - 9-24

2 பகவத்கீதை - 18-46

டையவும் ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்படுகிற த்யாகம் என்பது *'நிஶ்சயம் ஶ்ருணு மே தத்ர த்யாகே பரதஸத்தம । த்யாகோ ஹி புருஷவ்யாக்ர த்ரிவித: ஸம்ப்ரகீர்த்தித: ॥' என்றாரம்பித்து † 'ஸங்கம் த்யக்த்வா பலம் சைவ ஸ த்யாக: ஸாத்த்விகோ மத: । ந ஹி தேஹப்ருதா ஶக்யம் த்யக்தும் கர்மாண்யஶேஷத: ॥ யஸ்து கர்மபலத்யாகீ ஸ த்யாகீத்யபிதீயதே' என்கிற வரையிலும் இந்த அத்யாயத்தின் முதலிலேயே நன்றாய் நிரூபிக்கப்பட்டது இப்படிச் செய்துகொண்டிருக்கிற உன்னை என்னை அடைவதற்குத் தடையாகவும் அநாதிகாலமாகச் சேர்க்கப்பட்டதாயும் எண்ணிறந்ததாயுமிருக்கிற செய்யத்தகாத கார்யத்தைச் செய்வது, செய்ய வேண்டிய கார்

---

*இவனே பலத்தைக்கொடுக்கிறவன் என்றநுஸந்தானம் செய், என்று தாத்பர்யம். கர்மங்களின் ஸ்வரூபத்தை விட்டுவிடுவது முதலிய பக்ஷங்களில் இந்த ஸந்தர்ப்பம் பொருந்தாது என்று சொல்லுகிறார்—'இதுவே' என்றாரம்பித்து. 'நன்றாய் நிரூபிக்கப்பட்டது' என்பதற்குக் கருத்தாவது—இந்த ஶ்லோகத்தின் அர்த்தத்தை மேலெழுந்தபடியே பார்ப்பதினாலும் கபட யுக்திகளினாலும் வர்ணாஶ்ரம தர்மங்களின் ஸ்வரூபத்தையே விட்டுவிடவேண்டும் என்றிவை முதலிய பக்ஷங்கள் எப்படி உண்டாகாதோ அவ்விதமாக நிரூபிக்கப்பட்டது—என்பது. 'நான்' என்பதற்குக்கீழ்ச்சொல்லிய விதமாக ஆராதிக்கப்பட்டவனும் பலத்தைக் கொடுப்பதற்குபயோகமான ஸர்வஜ்ஞனாக இருக்கை, ஸர்வசக்தியாக இருக்கை, மிகுந்த கருணையுடையவனாயிருக்கை முதலிய குணங்களின் கூட்டங்களையுடைய நான் என்று தாத்பர்யம். இவ்விடத்தில் 'த்வா' என்று சொல்லியிருப்பது உபாயத்தை அநுஷ்டித்தவனாக இருக்கும் தசையோடு கூடினவனைச் சொல்லுகிறது என்று சொல்லுகிறார்—'இப்படிச் செய்துகொண்டிருக்கிற உன்னை' என்று. நேரான உபாயத்தையும் 'ஸர்வபாபேப்ய:' என்னும் பதத்தினால்சொல்லியிருப்பதினாலும், 1 'மாமேவைஷ்யஸி' என்று கீழ்ச்சொல்லி யிருப்பதினாலும், 'என்னை அடைவதற்குத் தடையாகவும்' என்று சொல்லப்பட்டது. இவ்விடத்தில் தடங்கல்கள் நிவ்ருத்திப்பதே உபாயத்தினால் உண்டாக்கப்படுகிறது. தன்னுடைய ஸ்வரூபம் உள்ளபடி ப்ரகாசிப்பதாகிய பகவானை யடைவதோவெனில் தானாகவே உண்டாய் விடும் என்றபிப்ராயம். இவ்விடத்தில் 'ஸர்வ'

---

* பகவத்கீதை - 18 - 4. † பகவத்கீதை - 18 - 11

1 பகவத்கீதை - 18-65

யத்தைச் செய்யாமலிருப்பது, ஆகிய எல்லாப் பாபங்களிலிருந்தும் விடுவிக்கிறேன். வ்யஸனப்படாதே.

---

*என்னும் பதத்தின் தாத்பர்யத்தைச் சொல்லுகிறார்—‘அநாதிகாலமாக’ என்றாரம்பித்து.*

*மூன்று விதமான யோகங்களையும் பற்றி நிரூபணம் செய்தபிறகு எல்லாவற்றிற்கும் குஹ்யதமமாகிய ஶாஸ்த்ரஸாரார்த்தமும் தனித்துக் காட்டப்பட்ட பிறகு இவைகளுக்கு மேல் மூன்று யோகங்களுக்கும் பொதுவாயும் முன்னால் விஸ்தாரமாக நிரூபிக்கப்பட்டதாயுமிருக்கிற அநுஸந்தானத்தையே மறுபடியும் இவ்விடத்தில் சொல்லுவதில் என்ன ப்ரயோஜனம்? இந்த ஶ்லோகம் வேறு அர்த்தத்தைச் சொல்லுகிறதுமல்ல, அப்படித் தோன்றாமையினாலும் ஸங்க்ரஹத்தில் அப்படிச் சொல்லப்படாமையினாலும். இந்தச் ஶாஸ்த்ரத்தின் ஆரம்பத்திலேயே பாஷ்யத்தில் 1 ‘தமுவாச’ என்கிற ஶ்லோகத்தின் வ்யாக்யானத்தில் ‘பரமாத்மாவின் உண்மையை அடைவதற்குபாயமாகிய கர்மயோகம், ஜ்ஞானயோகம், பக்தியோகம் இவைகளைப்பற்றிய 2 ‘ந த்வேவாஹம் ஜாது நாஸம்’ என்றாரம்பித்து ‘அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா ஶுச:’ என்கிற வரையிலுமுள்ள வார்த்தையைச் சொன்னார் என்றர்த்தம், என்று சொல்லப்பட்டது. மேலும் இவ்விடத்தில் ‘மா ஶுச:’ என்பது முதலில் உண்டாகியதாகிய இடமில்லாத இடத்தில் உண்டான ப்ரீதி முதலியவைகளைக் காரணமாகவுடைய துக்கத்தைப் போக்குவதற்காகவல்ல, அது முழுமையும் முன்பே போக்கடிக்கப்பட்டபடியினால். ஆகையினால் 3 ‘மா ஶுச: ஸம்பதம் தைவீமபிஜாதோஸி பாண்டவ’ என்கிற இடத்தில் அடுத்த ஸமீபமே ப்ரஸ்தாவிக்கப்பட்டதைக் காரணமாகவுடைய துக்கத்தைப் போக்கடிப்பதற்காக, என்பது எப்படி ஒப்புக்கொள்ளப்பட்டதோ அப்படியே இவ்விடத்திலும் சொல்லுவது உசிதம். ஸூக்ஷ்மமான புத்தியுடையவனாயும் க்ஷத்ரியனாயும் தர்மத்தை அநுஷ்டானம் செய்பவர்களுக்குள் முதன்மையாயுமிருக்கிற அர்ஜுநனுக்கு ஸர்வஜ்ஞனால் சொல்லப்பட்ட உபாயங்களைப்பற்றித் தெரிந்துகொள்ளாமையினாலாவது, தான் தகாதவன் என்பதினாலாவது, முக்கியமான பாகத்தைப்பற்றிய நிஶ்சயமில்லாமையினாலாவது, இந்தத் துக்கம் உண்டாகவில்லை. பலத்தைப்பற்றிய ஸந்தேஹமும் 4 ‘மாமேவ*

---

1 பகவத்கீதை- 2  2 பகவத்கீதை - 2-12

3 பகவத்கீதை - 16 - 5  4 பகவத்கீதை - 18,65

அதுவுமன்றிக்கே எல்லாப் பாபங்களிலிருந்து விடுபட்டவனை யும் பகவானிடத்தில் மிகுந்த ப்ரீதியுடையவனாய் இருக்கிற புருஷனால் பக்தியோகம் செய்யத் தக்கதாகையினாலும் அதை ஆரம்பிப்பதற்குத் தடங்கலான பாபங்கள் எண்ணிறந்தவைகளாகையினாலும் அதற்கு ப்ராயஶ்சித்தங்களாகிய அல்பகாலங்களில் செய்யப்பட்ட தர்மங்களி

---

வேஷ்வபி' என்பவை முதலியவைகளினால் முழுமையும் நிவ்ருத்தி செய்யப்பட்டது. ஆகையினால் மிகுதியாயிருக்கிறபடியினால் வெகு நீண்டகாலம் இடைவிடாமல் ப்ரீதியுடன் அநுஷ்டிக்கத்தக்கதாகிய உபாயம் செய்யமுடியாமையினாலாவது, பலம் தாமதப்பட்டுக்கிடைக் கும் என்பதினாலாவது இந்தத் துக்கம் ஸம்பவிக்கலாமாகையினால் அப் படிப்பட்ட துக்கத்தை இந்த ஶ்லோகம் போக்கடிக்கிறதாக இருக்க வேண்டும் என்கிற எண்ணத்தினால் கீழ்ச்சொல்லிய அர்த்தத்தில் த்ரு ப்தி இல்லாமையினால் இங்கு உசிதமாயும் 'த்யாஜ' என்னும் பதத் திற்கு ஸ்வாரஸ்யமான அர்த்தத்தோடு கூடியதாயுமிருக்கிற வேறு அர் த்தத்தைச்சொல்லுகிறார்—'அதுவுமன்றிக்கே' என்றாரம்பித்து. அதில் 'எல்லாப்பாபங்களிலிருந்து விடுபட்டவனையும்' என்பது உபாயத்திற்கு விரோதிகளாகிய எல்லாப்பாபங்களையும் குறிக்கிறது. பாபம்நிவ்ருத்திப் பதினால் பகவானிடத்தில் மிகுந்த ப்ரீதி உண்டாகிறது. [1]'நராணாம் க்ஷீணபாபாநாம் க்ருஷ்ணே பக்தி: ப்ரஜாயதே' என்றல்லவோ சொல்லப்படுகிறது [2]'விக்நாயுதேந கோவிந்தே ந்ருணாம் பக்திர் நிவார்யதே' என்றிவை முதலியவைகளை நினைத்துக்கொண்டு சொல்லுகிறார்—'அதை ஆரம்பிப்பதற்குத்தடங்கலான' என்றாரம்பித்து. [1]'ஜந்மாந்தர ஸஹஸ்ரேஷு' என்றிவை முதலியவைகளை அநு ஸரித்து 'அல்பகாலங்களில் செய்யப்பட்ட' என்றாரம்பித்துச் சொல்லப் பட்டது. இந்தப பாடத்தில் அவ்வளவு தாமதத்தைப் பொறுக்காமை சொல்லப்பட்டது. 'அபரிமிதகாலக்ருதை:' என்று பாடமானால் 'அபி' என்னும் பதம் சேர்த்துக் கொள்ளத்தக்கது. அளவிறந்த காலங்களில் செய்யப்பட்ட போதிலும் என்றர்த்தம். இத்தால் இந்த

---

1 லகு விஷ்ணு ஸ்ம்ருதி - (அனேகம் ஆயிரம் ஜன்மங்களில் செய்த புண் ணிய கர்மங்களினால்) க்ஷீணபாபாநாம் - போக்கடிக்கப்பட்ட பாபங்களையுடைய, நராணாம் - மனிதர்களுக்கு, க்ருஷ்ணே - க்ருஷ்ணனிடத்தில், பக்தி:—பக்தி,ப்ர ஜாயதே - உண்டாகிறது.

2 ந்ருணாம் - மனிதர்களுக்கு, கோவிந்தே - பகவானிடத்தில், பக்தி:— பக்தியானது, விக்நாயுதேந-அனேக விக்னங்களினால், நிவார்யதே - தடுக்கப்படு கிறது.

ஞல் அந்தப் பாபங்கள் நிவ்ருத்தி செய்யக்கூடாததாகையினாலும் தனக்குப் பக்தியோகத்தை ஆரம்பிக்க யோக்யதை இல்லை என்பதை ஆலோசித்துத் துக்கப்படுகிற அர்ஜுநனுடைய துக்கத்தைப் போக்கடித்துக்கொண்டு ஸ்ரீபகவான் சொல்லுகிறார்—'ஸவ-ஃ யமெ-ஃாநுவரிக-ஃ ஜூஸாவெகும் ஸாரணம் வ்ரஜ' என்று. பக்தியோகத்தை ஆரம்பிப்பதற்குத் தடங்கலாயும் அநாதிகாலமாகச் சேர்க்கப்பட்டதாயும் அநேகவிதங்களாயும் எண்ணிறந்தவைகளாயுமிருக்கிற பாபங்களுக்குத் தகுந்தபடி அவைகளுக்கு ப்ராயஸ்சித்தங்களாகிய க்ருச்ரம், சாந்த்ராயணம், கூஸ்மாண்டம், வைஸ்வாநரம், வ்ராதபதி, பவித்ரேஷ்டி, த்ரிவ்ருத், அக்னிஷ்டோமம், முதலியவைகளாகிய அனேகவிதங்களாயும் எண்ணிறந்தவைகளாயும்

---

உபாயம் ஸம்பாதிக்கமுடியாது என்பது தெரிவிக்கப்பட்டது. 'துக்கத்தைப்போக்கடித்துக்கொண்டு' என்பதற்கு துக்கத்தைப்போக்கடிப்பதற்காக என்றர்த்தம். 'உநந்ாஸவ உஜூக்கா' என்று கீழ் ஸ்லோகத்தில் பக்தியோகம் ப்ரஸ்தாவிக்கப்பட்டபடியினால் அதை ஆரம்பிப்பதற்கு விரோதிகளாகையினாலே துக்கத்திற்குக் காரணங்களாயிருக்கிற பாபங்களைச் சொல்லுகிறது இவ்விடத்தில் 'ஸவ-ஃவாவ' என்னும் பதம். அந்தந்தப்பாபங்களை நிவ்ருத்தி செய்வதற்குக் காரணங்களாகச் சொல்லப்பட்ட தர்மங்களின் கூட்டங்களைச்சொல்லுகிறது 'ஸவ-ஃயமெ-ஃநு' என்னும் பதம். 'எந்தச் ஸாஸ்த்ரங்களைச்சுருக்கி சொல்லியிருக்கிறதோ அந்தத்தர்மத்தினால் பாபத்தைப் போக்கடித்துக்கொள்ளுகிறான்' என்றர்த்தமுள்ள ஸ்ருதிவாக்யம் பன்மையாகச் சொல்லி இருப்பதினாலும், 'ஸவ-ஃ' என்னும் பதத்தினாலும் பாபங்களிலும் தர்மங்களிலும் அவைகள் அநேக விதங்களென்பதும் எண்ணிறந்தவைகள் என்பதும் தெரிவிக்கப்படுகிறது. இதையே சொல்லுகிறார்—'பக்தியோகத்தை ஆரம்பிப்பதற்குத் தடங்கலாயும்' என்றாரம்பித்து. 'க்ருச்ரம், சாந்த்ராயணம்' என்றாரம்பித்துப் பாபத்தைப் போக்கடிக்கக் கூடியவைகள் என்றேப்புக்கொள்ளப்பட்டவைகளைச் சொல்லியிருக்கிறது. 'அக்னிஷ்டோமம்' முதலியவைகளும் அவைகளுக்கு உபயோகங்கள் வெவ்வேறாக இருப்பதினால் அனேகவிதமான பலங்களுக்கு ஸாதனங்கள் என்பது முன்பே சொல்லப்பட்டது. 'முதலியவைகளாகிய' என்னும் பதத்தினால் கர்மயோகங்களின் உட்பிரிவாக 1 'தெைவதெவாவெரயஜூ' என்றிவை முதலியவைகளினால் முன்பு நிரூபிக்கப்பட்டவைகளும் நிரூபிக்கப்படாதவைகளும் சேர்த்துக்கொள்ளப்படுகின்றன. இப்படியே ஜ்ஞான

---

1 தைத்திரீயம் - 2.

அல்பகாலம் ஜீவித்திருக்கிற உன்னால் அனுஷ்டிக்க முடியாதவைகளு

---

யோகமும் 'முதலியவைகளாகிய' என்னும் பதத்தினால் சேர்த்துக் கொள்ளப்படுகிறது. அதுவும் பக்தியோகத்தை ஆரம்பிப்பதற்கு விரோதியாகிய பாபத்தைப் போக்கடிக்கிறதென்று முன்பே நிரூபிக் கப்பட்டிருப்பதினால். 'அல்பகாலம் ஜீவித்திருக்கிற' என்பது ஒரு ஶரீரத்தை அபிப்ராயத்தில் கொண்டிருக்கிறது. மிகவும் செய்யமுடியாத கார்யங்களை அனுஷ்டானம் செய்வதினாலுண்டாகிய அநேகம் ஜன்மங்களில் செய்த புண்ணிய கர்மங்களின் ஸித்தியினால் உண்டாகக் கூடியது பக்தியோகம் என்கிற நிஶ்சயத்தினாலல்லவோ அர்ஜுநனுக்குத் துக்கமுண்டாயிருக்கிறது. 'ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய' என்று இந்த யோஜனையில் ஸ்வரூபத்தை விட்டு விடுவதே சொல்லப் படுகிறது. இதனாலே நித்ய நைமித்திகக் கர்மங்களுக்கு லோபம் வரவேண்டியதில்லை, அனுஷ்டிக்க முடியாத ப்ராயஶ்சித்தம் முதலியவைகளைப்பற்றியதென்று சொல்லியிருக்கிறபடியினால. இதே அபிப்ராயத்தினால் நித்ய நைமித்திக கர்மங்களிலும் எவைகள் அனுஷ்டிக்க முடியாதவைகளோ அவைகளைப்பற்றி விட்டுவிடு என்று விதிக்கலாமாகையினாலும், ஶக்தியுள்ளவனைக் குறித்தே ஶாஸ்த்ரங்கள் ப்ரவ்ருத்திக்கின்றனவாகையினாலே அஶக்தன் செய்யாவிடில் தோஷமில்லாமையினாலும், அனுகல்பத்தை மாத்திரம் அனுஷ்டிக்க ஶக்தி இருக்கும் பக்ஷத்தில் அதுவே அனுஷ்டிக்கத் தக்கதாகையினாலும், இவ்விடத்தில் முக்கியமான கல்பத்தை அனுஷ்டிக்க ஶக்தி இல்லாதவனைக் குறித்து எல்லாவித முக்கிய கல்பங்களுக்கும் அனுகல்பமாகப் பகவானிடத்தில் ப்ரபத்தி ஒன்றையே விதிக்கிறபடியினாலும், ஶக்தியுள்ளவன் ஶக்தி இல்லாதவன் முதலிய அதிகாரி வெவ்வேறாகையினாலும், முக்கிய கல்பம், அனுகல்பம், இவைகளுக்கு விஶேஷமான பலங்கள் ஸம்பவிக்கலாமாகையினாலும். ஆகையினாலேயே அல்பகார்யங்கள் பெரிய கார்யங்கள் இவைகளிரண்டையும் விகல்பமாகச் சொல்லுவது பொருந்தாது என்கிற ஆக்ஷேபத்திற்கும் இடமில்லை. எப்படி 1 'ப்ரணவம் வா த்ரிஸஹஸ்ரம் ஸஹஸ்ரம் வா விஷ்ணுஸஹஸ்ரம்' என்றும், 2 'ஸ்நா

---

1 ப்ரணவத்தை மூன்றுதரம் சொல்லவேண்டும். பகவானையாவது ஸ்மரிக்க வேண்டும்.

2 மாந்த்ரிகஸ்நாநம், பௌமஸ்நாநம், ஆக்நேய ஸ்நானம், வாயவ்ய ஸ்நானம் திவ்யஸ்நானம், வாருணஸ்நானம், மானஸ ஸ்நானம், என்று ஸ்நானம் ஏழுவிதமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

தூம் ஸஸம் தயாக்நேயம் வாயவ்யம் திவ்யமேவ ச| வாருணம் மானஸம்சேதி ஸ்நாநம் ஸப்தவிதம் ஸ்ம்ருதம்||' என்று சொல்லப்படு கிற பகவானை நினைப்பதே தலைமுழுகுவது முதலிய ஸ்நானங்களைச் செய்யச்சக்தி இல்லாதவனுக்கு அதின் பலத்தைக் கொடுப்பதாக விதிக்கப்படுகிறதோ, அப்படியே இவ்விடத்திலுமாகையினால் ஒருவிதத் தோஷமுமில்லை. இவ்விடத்தில் செய்யமுடியாமையினாலும்வெகுகாலம் செய்யக்கூடியதாயிருக்கிறபடியினாலும் அல்பசக்தியுடையவனாயும் அல்பகாலம் ஜீவித்திருப்பவனாயுமிருக்கிற புருஷனால் செய்யமுடியாத தர்மங்களினுடைய—ஏற்கனவே ஏற்பட்டிருக்கிற த்யாகமே (விட்டு விடுவதே) பகவானொருவனையே உபாயமாக வரிக்கவேண்டுமென்று விதித்திருப்பதற்கு உபகாரமாக விதிப்பதைப்போல அநுவாதம் செய்யப்படுகிறது. எப்படி த்யானத்திற்குபகாரமாக இருப்பதினால் தன்னிஷ்டத்தினாலேயே ஏற்பட்டவைகளான கேழ்ப்பதும் மனனம் செய்வதும் 1 'கேழ்க்கத்தகுந்தவன் மனனம் செய்யத்தக்கவன்' என்கிற வாக்யங்களினால் அநுவாதம் செய்யப்படுகிறதோ அதைப்போல. அவனொருவனையே உபாயமாக வரிக்கவேண்டுமென்று விதித்திருப்பதும் அவனைத்தவிர மற்ற உபாயங்களை விட்டிருப்பதோடு சேர்ந்திருக்கிறது. இத்தால் அந்தப் பலத்திற்கு ஸாதனமாக விதிக்கப்பட்டிருக்கிற இதர தேவதைகளைப்பற்றிய தர்மங்களையும் பகவானிடத்திலும் மற்றத் தர்மங்களையும் விட்டுவிடுவது சேர்த்துக்கொள்ளப்படுகிறது. இப்படி இதர தேவதைகளைப்பற்றிய தர்மங்களைச் செய்யக்கூடாதென்று மறுப்பது தானாகவே ஏற்பட்டிருக்கும்பொழுது அந்த அர்த்தம் ஸித்திப்பதற்காக இவ்விடத்தில் 2 வ்யதிகரண ஸமாஸம் ஒப்புக்கொள்ளத்தக்கதல்ல, என்கிற அபிப்ராயத்தினால் 'எல்லாத்தர்மங்களையும்' என்று சொல்லப்பட்டது. தர்மங்களை யனுஷ்டிப்பதில் ஶக்தியுள்ளவனைக்குறித்து அவைகளைச்செய்யக்கூடாதென்று மறுத்தால் மற்ற ஶாஸ்த்ரங்கள் வ்யர்த்தமாக வேண்டிவரும். ஶக்தியில்லாதவனைக்குறித்தோவெனில் அவன் ஶக்தியில்லாமையினால் ஏற்கனவே செய்யாமையினால்ஶாஸ்த்ரத்தில் விதிக்கவேண்டியதில்லை? என்னில்இது உசிதமல்ல, ஶக்தி இல்லாதவனைக் குறித்தே ப்ரம்மாஸ்த்ரத்தின் கட்டு

1 ப்ருஹதாரண்யகம் - 6 - 5 - 6.

2 ஸர்வேஷாம் கர்மா:—எல்லாத் தேவதைகளையும் பற்றிய கர்மங்கள் என்பது.

முதலியவைகளைப்போல வேறு உபாயத்தை அங்கீகரிப்பது இதற்குவிரோதி என்று தெரிவிப்பதற்காகச்சொல்லவேண்டியதாகையினால். இதுவுமன்றிக்கே எந்தப் பலத்திற்காகச் ஶரணாகதி செய்யப்பட்டதோ அந்தப் பலத்தைக்குறித்துவேறு உபாயங்களை அனுஷ்டிக்கக்கூடிய ஶக்தி பிற்பாடு சில காரணங்களினால் ஸம்பவித்தபோதிலும் அந்தப் பலத்திற்காக அதை அங்கீகரிப்பது செய்யக்கூடாது என்று தெரிவிப்பதினால் இது ப்ரயோஜனத்தோடு கூடியதே. இவ்விடத்தில் 'அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி' என்று பலம் பகவானொருவனாலேயே உண்டாக்கக்கூடியது என்பது சொல்லப்படுகிறபடியினால் அவனொருவனிடத்திலேயே ப்ரபத்தி ஒன்றே பலத்திற்கு ஸாதனமாக அனுஷ்டிக்கவேண்டியதாக விதிக்கப்படுகிறது. எல்லாத் தர்மங்களையும் விட்டுவிடுவதோவெனில் ஒரே வாக்யத்தில் சொல்லப்பட்டிருப்பதினால் அதற்கங்கமாக ஏற்பட்டது. 1 'ஃபலவத்ஸந்நிதாவஃபலம் ததங்கம்' என்கிற ந்யாயத்தினால், அதில் முன்பே ஏற்பட்டிருக்கிற த்யாகத்தைச் சொல்லும்பக்ஷத்தில் அதிகாரத்தில் சேர்ந்து விடுகிறது. அப்படிக்கில்லாவிடில் லிங்கத்தினால் அவனொருவனையே ஶரணமாக அடைவதற்குபயோகமான ரூபத்தைச் சொல்லுகிறது. அவனொருவனே உபாயம் என்கிற நிஶ்சயம் அவனைத் தவிர வேறொரு உபாயத்தை அனுஷ்டிப்பதற்கோடு விருத்தமானது. ஆகையினால் நெல்லைக் குத்துவது யாகத்திற்கு வேண்டியதாகிய அரிசியாக வேண்டியதற்குபயோகமாகும் வரையில் முடிவு பெறுகிறதைப்போல அவனொருவனைக் குறித்து ப்ரபத்தி செய்வதற்கு விரோதியான தர்மங்களைவிட்டுவிடவேண்டும் என்பதில் முடிவு பெறுகிறபடியினால் அந்தப் பலத்திற்குபாயங்களல்லாமலும் அதற்கு விரோதிகளல்லாமலுமிருக்கிற நித்ய கர்மம் முதலியவைகளை விட்டுவிடுவது இதற்கு ஒத்தாசையாக வேண்டியதில்லையாகையினால் வர்ணாஶ்ரமங்களைக்குறித்து ஸ்வதந்த்ர விதிகளினால் ஏற்பட்ட தர்மங்கள் முன்போலவே இருக்கின்றன. அவைகளும் ப்ரபத்திக்கு அங்கங்களுமல்ல அங்கிகளுமல்ல, அப்படி ஶாஸ்த்ரத்தில் விதிக்கப்படாமையினாலும், ஶக்தி இல்லாதவனைக்குறித்து செய்யமுடியாத நித்ய நைமித்திக கர்மங்களை அங்கமாகவுடைய ப்ரபத்தியை விதிப்பது பொருந்தாதாகையினாலும், அப்படி ப்ரபத்திக்கு அங்கமாக இல்லாமலிருந்தபோதிலும் வேறொருபலத்திற்காகவாவது

1 மீமாம்ஸாந்யாயம ப்ரயோஜனத்திற்குபாயமாகச் சொல்லப்படுகிற ஒரு கர்மத்தின் ஸமீபத்தில் பலத்திற்கு உபயோகமாகவல்லாமல் சொல்லப்படுகிற கர்மம் அதற்கங்கம்.

வர்ணாஶ்ரமங்களுக்காகவாவது யஜ்ஞம் முதலியவைகளை அனுஷ்டிப்பது உசிதமாகையினாலும், 'ஸர்வ'என்னும் பதத்தினால் சொல்லப்பட்டிருக்கிற அர்த்தத்திற்கு எதிர்நடையாக 'ஏகம்' என்கிறவிடத்தில் 'ஏக' என்னும் பதம் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையினால் பகவானிடத்தில் ப்ரபத்தி ஒன்றே எல்லாவற்றிற்கும் ப்ராயஶ்சித்தமாகும் என்று சொல்லப்பட்டதாகிறது. ஶரணாகதியின் ஸ்வபாவத்தினால் அதைத்தவிர மற்ற உபாயத்தை விட்டுவிடுவதேற்படும் அப்படியே 1 'அநந்ய ஸாத்யே ஸ்வாபீஷ்டே மஹாவிஶ்வாஸ பூர்வகம்। ததேகோபாயதா யாச்ஞா ப்ரபத்தி: ஶரணாகதி:॥' என்று லக்ஷணம் சொல்லியிருக்கிறார்கள். இவ்விடத்தில் 'ஶரண' என்னும் பதம் உபாயம் என்னுமர்த்தத்தைச் சொல்லுகிறது. அப்படியே ப்ரபத்தி ப்ரகரணத்தில் 2 'உபாயே க்ருஹரக்ஷித்ரோ: ஶப்த: ஶரணமித்யயம்। வர்ததே ஸாம்ப்ரதம் த்வேஷ உபாயார்த்தைகவாசக:'

1 பரதமுனி வாக்யம். ஸ்வாபீஷ்டே—தன்னுடைய இஷ்டபலமானது, அநந்யஸாத்யே - வேறொரு உபாயத்தினாலும் ஸாதிக்கமுடியாமலிருக்கும்பொழுது, மஹா விஶ்வாஸபூர்வகம்-மஹா விஶ்வாஸத்தை முன்னிட்டுக்கொண்டு, ததேகோபாயதாயாச்ஞா - அவனொருவனே உபாயமாக வேண்டுமென்று யாசிப்பது, ப்ரபத்தி:—ப்ரபத்தி, அதுதான் ஶரணாகதி.

2 அஹிர்புத்ந்ய ஸம்ஹிதை - 36-38. அயம் - இந்த, ஶரணமிதி - ஶரணம் என்கிற, சப்த:-பதம், உபாயே - உபாயம் என்கிற அர்த்தத்திலும், க்ருஹரக்ஷித்ரோ:—வீடு, காப்பாற்றுகிறவன், என்கிற அர்த்தங்களிலும், வர்த்ததே - இருக்கிறது, அதாவது இந்த மூன்று வித அர்த்தங்களையும் சொல்லுகிறது. ஸாம்ப்ரதம் து - இப்பொழுதோவெனில், இவ்விடத்தில் இப்பொழுது என்பதினால் இந்த ஸந்தர்ப்பம் த்வயம் என்னும் மந்த்ரத்திற்கு வ்யாக்யானம் செய்துகொண்டு வரும் ஸந்தர்ப்பமாகையினால் த்வயத்தில் என்னும் அர்த்தத்தைச் சொல்லுகிறது, ஆகையினால் ஶரணாகதியைச் சொல்லும் எல்லா இடங்களிலும் என்று தாத்பர்யம், ஏஷ:—இந்தப்பதம், உபாயார்த்தைகவாசக:—உபாயம் என்கிற ஒரு அர்த்தத்தையே சொல்லுகிறது, என்றர்த்தம். இவ்விடத்தில் சிலர் 'ஏக' என்னும் பதத்தின் அர்த்தமாகிய ஏகத்வம் 'ஸாத்யஸ்ய யதுபாயஸ்ய ஸாதநாந்தரநிரபேக்ஷத்வம் ஸம்பந்தாந்தரநிஷேதோ வா' இதி ஸங்க்ரஹேண வர்ணயந்தி। தத்ர உபாயஸ்ய நிரபேக்ஷத்வ விஶிஷ்டாயாஉபாயத்வ ஸாதநாந்தரநிரபேக்ஷத்வ... ஸம்பந்தாந்தரநிஷேத... ஶரணஶப்த உக்திவைய:। இதின் கருத்தாவது - உபாயார்த்தைகவாசக:-என்கிற இடத்திலிருக்

கும் 'ஏக' என்னும் பதத்திற்கு ஏகத்வம் (ஒன்ருக இருக்கை) அர்த்தம். அது 'ஏஷ:' என்னும் பதத்தின் அர்த்தமாகிய ஶரணஶப்தத்தில் கீழ்ச் சொல்லிய ஸம்பந்தத்திஞல் அந்வயிக்கிறது. கீழ்ச்சொல்லிய ஸம்பந்தத்தின் கருத்தாவது—உபாயமாக இருக்கும் ஸ்வபாவம் அனேகமாக இருந்தால் இதினிடத்திலிருக்கும் உபாயமாகும் தன்மையைத் தவிர மற்ருென்றைச் சொல்லாது—என்பது, என்று சொல்லி இதற்கு 'பசுனையஜேத' என்கிற இடத்தில் அனேக பசுக்களைக்கொண்டு ஒரு யாகம் செய்தால் அது ஸரியான யாகமில்லாமையிஞல் அத்ருஷ்டம் உண்டாகிறதில்லை. ஆகையிஞல் 'பசுனு' என்கிற பதத்திலிருக்கும் ஒருமையின் அர்த்தமாகிய ஏகத்வம் (ஒன்ருக இருக்கை) பசுவினிடத்தில் கீழ்ச் சொல்லியதைப்போல அந்வயிக்கிறது என்று உதாஹரணம் சொல்லியிருக்கிருர்கள். இது யோசிக்கத்தகுந்த விஷயம். ஏனெனில் இவ்விடத்தில் 'பசுனையஜேத' என்கிற இடத்தை உதாஹரணமாக வைத்துக்கொண்டு 'பசுனு' என்கிற பதத்திலிருக்கும் ஒருமைக்கு ஒன்று என்றர்த்தம். ஆகையிஞல் அந்த ஒன்றென்கிற பதம் பசு என்னும் பதத்தோடு சேர்ந்து ஒரு பசுவைக்கொண்டு யாகம் செய்ய வேண்டும் என்றர்த்தமாகிறபடியிஞல் அனேகம் பசுக்களைக்கொண்டு ஒரு யாகத்தைச் செய்தால் அத்ருஷ்டம் உண்டாகாது என்று மீமாம்ஸகர்களின் கொள்கை. இதை உதாஹரணமாக வைத்துக்கொண்டு இவ்விடத்தில் 'ஏக' என்னும் பதம் 'ஏஷ:' என்னும் பதத்தோடு அந்வயிக்கிறது என்று நினைத்து அதற்கொருவிதமான ஸம்பந்தத்தைக் கட்டியிருப்பது மிகவும் அனுசிதம். அவ்விடத்தில் 'பசு' என்னும் பதத்திலேயே ஒருமை இருக்கிறபடியிஞல் அந்த ஒருமையின் அர்த்தமாகிய ஒன்றென்பது 'பசு' என்னும் பதத்தோடு சேரவேண்டியது 'ப்ரத்யயாநாம் ப்ரக்ருத்யர்த்தான்வித ஸ்வார்த்த போதகத்வம்' என்கிற ந்யாயத்தை அனுஸரித்ததாக இருக்கிறது. இவ்விடத்தில் 'உபாயார்த்தைக வாசக:' என்கிற ஸமஸ்தபதத்தின் நடுவிலிருக்கிற 'ஏக' என்னும் பதத்தின் அர்த்தமாகிய ஒன்று என்பது (ஏகத்வம்) 'ஏஷ': என்னும் பதத்தின் அர்த்தமாகிய ஶரணஶப்தத்தில் அந்வயிக்க வேண்டுமென்கிற நிர்ப்பந்தமுமில்லை. அப்படி அந்வயிப்பதில் ப்ரயோஜனமுமில்லை, ந்யாயமுமில்லை. உபாயம் என்கிற அர்த்தம் ஒன்றையே சொல்லுகிறது என்று நேரிலேயே சொல்லியிருப்பதிஞல் 'உபாயத்வ வ்யதிரிக்தார்த்த வ்யவச்சேதகத்வ விசிஷ்ட உபாயத்வ ப்ரதிபாதகம்' என்றே நேரில் அர்த்தமாகிறது. அதாவது உபாயத்வம் தவிர வேறு அர்த்தத்தைச் சொல்லுகிறதில்லை. உபாயத்வம் என்கிற ஒரே அர்த்தத்தைச் சொல்லுகிறது என்று ஸ்பஷ்டமாகவே சொல்லப்பட்டிருக்கிறது. மேலும் இவ்வளவு ஶ்ரமப்பட்டு அர்த்தம் சொன்னதற்கு தாத்பர்யம் என்னவென்று யோசிப்போம். பகவானே உபாயம் என்று சொல்லுவதிஞல் கொஞ்சம் கொஞ்சமாக ப்ரபத்தி உபாயமல்ல என்று சொல்லுவதில் தாத்பர்யமாயிருக்கலாம். அதுவும் தங்கள் பூர்வாசார்யர்களின் க்ரந்தங்களைப் பரிசயம் செய்யாததிஞல் உண்டான குற்றமென்று சொல்லலாம். எப்படி என்னில் 36,000-படி முதல் ஸ்ரீயப்பதியில் 'இவ் விரோதி நிவ்ருத்திக்கும் புருஷார்த்த ஸித்திக்கும் உபாயம் ஏதென்னில் த்ரைவர்ணிகாதிகாரமான பக்தியும் அகிஞ்சனுதிகாரிகமான ப்ரபத்தியும் என்றிண்ரடி

றே வேதாந்த ஸித்தமான உபாயம், இதில் ப்ரபத்தியே உபாயமென்று தமக்கு ஸித்தாந்தம் என்னும் ஆகாரம் தோற்ற உபாயவேஷத்தை அருளிச்செய்தார்.' என்னும வாக்யமிருக்கிறது. அர்த்த பஞ்சகம் என்னும் ரஹஸ்யத்தில் கர்மயோகம், ஜ்ஞானயோகம்,பக்தியோகம்,ப்ரபத்தி, ஆசார்யநிஷ்டை ஆக உபாயம் ஐந்து என்றருளிச்செய்யப்பட்டிருக்கிறது. 'வீடுமின் முற்றவும்' என்னும் திருவாய்மொழியின் ப்ரவேசத்தில் 'நாநாஶப்தாதி ஹேயாத்வஶ ந ஸஜேந ஸம்ஸ்விதே ஸம்ஸ்க்ருதாகாரயோ:' என்று வேதாந்த ஸித்தோபாயம் த்விவிதமாகையினாலே எந்த உபாயத்தை இத்திருவாய்மொழி சொல்லுகிறதென்ன இத்திருவாய்மொழி தன்னை (இத்யாதி)இத்தால்பரபக்தியுபாயத்தைச்சொல்லுகிற தென்றபடி' என்கிற வாக்யஙகள் காணப்படுகின்றன. 'உலகமுண்ட' திருவாய்மொழியின் ப்ரவேசத்தில் 36,000படியில்'இனித்தான் ஶரணாகதி பல ப்ரதையாமிடத்தில் ஶரண்யன்பக்கலிலே பண்ணவும் வேணும் தானதிகாரியாகவும் வேணும்' என்றருளிச்செய்யப்பட்டிருக்கிறது. 'நெறியெல்லாமெடுத் துரைத்த' என்பதற்கு வ்யாக்யானம் செய்யுமிடத்திலும் கர்மயோகம் முதலாக ப்ரபத்திவரையிலுமுள்ள உபாயங்களை யெல்லாம் என்று அர்த்தம் செய்யப்பட்டிருக்கிறது. இப்படியே இன்னும் அனேக ரஹஸ்யங்களில் பல இடங்களிலும் ப்ரபத்தி உபாயமென்று விசதமாக அருளிச் செய்யப்பட்டிருக்கிறது. இந்தத் தங்கள் ஆசார்யர்களினுடைய ஸ்ரீஸூக்திகளை அறியாமையாலே 'ப்ரபத்யனுபாயத்வ விசாரம்' எழுதுகிறவர்களும், 'ஶரணஶப்தார்த்த விசாரம்' எழுதுகிறவர்களுமாக இருக்கிறார்கள். ஆகையினால் இதைக்கொண்டு ப்ரபத்தி உபாயமில்லை என்று சொல்லுவது முடியாது. அந்த ஸம்பந்தத்தில் அந்த ஆத்தமுமேற்படாது. உபாயத்வம் என்கிற ஒருவித ஸ்வபாவத்தையுடைய வஸ்துவைத் தவிர மற்ற வஸ்துவைச் சொல்லுகிறதில்லை என்பது மாத்திரம் அதினாலேற்படுமே ஒழிய உபாயத்வம் என்கிற ஸ்வபாவத்தையுடைய ப்ரபத்தியை அதினால் விலக்க முடியாது. மேலும் அதிலேயே ரக்ஷகனாக இருக்கையும் உபாயமாக இருக்கையும் ஒன்றாக இருந்தால் ரக்ஷகன் என்னும் அர்த்தத்தைச் சொல்லுகிறதல்ல என்று விலக்கி உபாயமென்னும் அர்த்தத்தைச் சொல்லுகிறதென்று தனித்துச் சொல்லியிருப்பது பொருந்தாது. கீழ்ச்சொன்ன ஸம்பந்தமும் ஒவ்வாது என்று சொல்லப்பட்டிருக்கிறது. இவை இரண்டும் ஒன்றென்று சொல்லுகிறவர்களுக்கு இது தூஷணமாகுமே ஒழிய நம் தேசிகனுடைய ஸித்தாந்தத்தில் இது கொஞ்சமேனும் ஒட்டாதாகையினால் 'ஸ்வஹஸ்தோத்க்ஷிப்தேந: ஸ்வகஜம்பாலப்ருஷதா ஸ்வதேஹம் ஸம்லிம்பந் ஜஹஸி ஜகதாம் ந கதமஸௌ விபுதஜந:।' என்று ஸ்ரீதேசிகன் தாமே அருளிச் செய்திருக்கிறபடியே தன் கையினால் சேற்றை எடுத்து ஆகாசத்தில் பூச எத்தனித்து வீசி எறியும் பொழுது அது தன் மேலேயே விழுந்து தானே தன் ஶரீரத்தைச் சேறுக்கிக் கொள்ளுவது போலத் தானே தன்னைப் பரிஹாஸத்திற்குப் பாத்திரனாக்கிக்கொள்ளுகிறான். இவ்விடத்திலேயே தாத்பர்ய சந்த்ரிகையில் 'உபாயமாக இருக்கையாவது கருணை முதலிய குணஙகளோடு கூடிய பகவான் உபாயஙகளின் ஸ்தானத்திலிருந்துகொண்டு

ஸித்திப்பதற்காக மிகுந்த கருணையுடையவனும் ஒருவித வ்யத்யாஸங்களையும் யோசிக்காமல் எல்லா லோகங்களுக்கும் ஶரண்யனும் தன்னை

---

கஃ॥' என்று சொல்லப்பட்டது 1 'ஶரணம் ஗ுஹரக்ஷித்ரோ: உபாயெவ நிமஷ்ஹிதெ' என்றும் சொல்லுகிறார்கள். உபாயமாக இருக்கையாவது கருணை முதலிய குணங்களோடு கூடிய பகவான் உபாயத்தின் ஸ்தானத்திலிருந்துகொண்டு அதின் கார்யத்தைத் தான் செய்கிறபடியினால் என்கிற அபிப்ராயத்தினால் 'மிகுந்த கருணையுடையவனும்' என்றிவை முதலிய குணங்களைச் சொல்லியிருக்கிறது. 'ஸகூ' என்பது வேறொரு ஒத்தாசை வேண்டியதில்லை என்பதைச் சொல்லுகிறதாகவுமாம். அது ஸித்திப்பதற்காகவும் 'ஶரம்' என்பதினால் அபிப்ராயத்தில் கொள்ளப்பட்டவைகளாகக் கருணை முதலிய குணங்களைச் சொல்லி இருக்கிறது. 'மிகுந்த கருணையுடையவனும்' என்பதற்கு 2 'வயாஹுஉவி காகுஸ்தஃ க்ருபயா வயுவாலயத்' என்றிவை முதலியவைகளினால் க்ருபை அதிகமென்பதும் அதனால் ஶரண்யன் என்பது மேற்பட்டது என்று தாத்பர்யம். அந்தக் கருணைக்குச் சுருக்கமில்லை என்று சொல்லுகிறார்—'ஒருவித வ்யத்யாஸங்களையும்' என்றாரம்பித்து. 3 'எல்லாவற்றிற்கும் யஜமானனும் நியமிக்கிறவனும் எல்லாவற்றிற்கும் ரக்ஷகனும் ஸுஹ்ருத்தாயுமிருக்கிற' என்றர்த்தமுள்ள வாக்யமும் ஶ்ருதியில் சொல்லப்படுகிறது. 4 'ஸவு லொக ஶரணாய' என்று ராவணன் தம்பியின்

---

அதின் கார்யத்தைத் தான் செய்கிறபடியினால்' என்றருளிச் செய்யப்பட்டிருக்கிறது. அதினால் உபாயத்தின் ஸ்தானத்தில் நிற்கையாகிற ஒரு விஶேஷம் ரக்ஷகனாக இருக்கையை விட வேறாகச் சொல்லப்பட்டிருக்கிறபடியினால். இனி இவ்விஷயத்தில் சொல்லவேண்டிய விஸ்தாரங்கள் நிக்ஷேப ரக்ஷை, பதத்ராணம், முதலிய நம்முடைய க்ரந்தங்களில் கண்டு கொள்ளுவது.

1 நிகண்டு-ஶரணம் என்னும் பதம் உபாயம், வீடு, ரக்ஷிக்கிறவன், என்னும் அர்த்தங்களில் சொல்லப்படுகிறது.

2 ராமாயணம்-சுந்திரகாண்டம் - 38-34-காகுத்ஸ்த:—ஸ்ரீராமன், வதார்ஹமபி-கொல்லத்தகுந்ததாயிருந்த போதிலும் (அந்தக்காகத்தை), க்ருபயா - க்ருபையினால், பர்யபாலயத் - காப்பாற்றினார்.

3 ஶ்வேதாஶ்வதரம் - 3-17

4 ராமாயணம் - யுத்தகாண்டம் - 17-15. எல்லா லோகங்களுக்கும் ரக்ஷகனாயிருக்கிற.

அடைந்தவர்களிடத்தில் வாத்ஸல்யத்திற்கு ஸமுத்ரமாயுமிருக்கிற என்னொருவனையே ஶரணமாக அடை. நான் உன்னைக் கீழ்ச்சொல்லியவிதமான பக்தியோகத்தை ஆரம்பிப்பதற்குத் தடங்கல்களாகிய எல்லாப் பாபங்களிலிருந்தும் விடுவிக்கிறேன். நீ துக்கப்படாதே. 66

---

வார்த்தையுமிருக்கிறது. 1 'விபீஷணோ வா ஸுக்ரீவ யதிவா ராவண: ஸ்வயம்' என்கிற தன்னுடைய வார்த்தையுமிருக்கிறது என்று தாத்பர்யம். 'வ்யத்யாஸங்கள்' என்னும் பதம் இவ்விடத்தில் ஜாதி, வர்ணம், வித்யை, நன்னடத்தை, குணங்கள், ஸம்ஸ்காரங்கள், முன் செய்ததாகவாவது, இனிச் செய்யப்போகிறதாகவாவதிருக்கிற உபகாரம் முதலியவைகளைச் சொல்லுகிறது. கீழ்ச்சொல்லியவைகளை விட்டுப் பிரியாததான மற்றொரு குணத்தைச் சொல்லுகிறார்—'தன்னை அடைந்தவர்களிடத்தில்' என்றாரம்பித்து. 2 'விதித: ஸ ஹி தர்மஜ்ஞ: ஶரணாகதவத்ஸல:' என்றல்லவோ சொல்லப்பட்டது. 3 'தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத்' என்றிவை முதலிய இடங்களில் சொல்லியிருக்கிறபடி தோஷங்களை அநாதரவு செய்வதற்காகவாத்ஸல்யத்தைச் சொல்லி இருக்கிறது. நடப்பதைச் சொல்லுகிற தாதுக்களெல்லாம் அறிவதைச் சொல்லுவதாக ப்ரயோகிக்கப்பட்டிருப்பதினால் 'வ்ரஜ' என்னும் பதம் முன் யோசனையில் அநுஸந்தானம் மாத்திரத்தைச் சொல்லுவதாக வ்யாக்யானம் செய்யப்பட்டது. இந்த யோசனையிலேயே வெனில் ரக்ஷிக்கப்போகிறான் என்கிற மஹா விஶ்வாஸத்தை முன்னிட்டுக்கொண்டு மற்ற அங்கங்களோடு கூடிய நிஶ்சயமாகிற ஒருவித விஶேஷமான புத்தியைச் சொல்லுகிற பதத்தினால வ்யாக்யானம் செய்கிறார்—'ஶரணமாக அடை' என்று. 'நான் உன்னை' என்பதற்கு எல்லாந் தெரிந்தவனாயும் எல்லாவிதச் ஶக்தியையுடையவனாயுமிருக்கிற நான் அல்பம் தெரிந்தவனாயும் அல்ப ஶக்தியுடையவனாயுமிருக்கிற உன்னை என்றர்த்தம். 'ஸர்வ' என்பதற்கு ஒன்றாயும் ஸூலப

---

1 ராமாயணம் - யுத்தகாண்டம்-17-36. ஸுக்ரீவ - ஓ ஸுக்ரீவ, (இவன்) விபீஷணோவா-விபீஷணனாயிருந்த போதிலும், யதிவாராவணஸ்வயம்—ராவணனாக இருந்தபோதிலும் (அழைத்துக்கொண்டுவா).

2 ராமாயணம்-சுந்திரகாண்டம்-21-19. ஸ:—அந்த ஸ்ரீராமன், தர்மஜ்ஞ:- தர்மங்களை அறிந்தவராகவும், ஶரணாகதவத்ஸல:-தன்னை அடைந்தவர்களிடத்தில் ப்ரீதியையுடையவராகவும், விதித:ஹி - (எல்லாராலும்) அறியப்பட்டவரல்லவா.

3 ராமாயணம்-யுத்தகாண்டம்-18-3-தஸ்ய - அந்த ஶரணாகதி செய்தவனுக்கு தோஷ:-பாபம், ஸ்யாத்யத்யபி-இருந்தாலும் இருக்கட்டும்.

மாய்ச் செய்யக்கூடியதாயுமிருக்கிற உபாயத்தினால் தாமதமில்லாமல் ஸகல பலங்களும் ஸித்தித்து விடுகிறபடியினால் எண்ணிறந்தவைக ளாயும் செய்யமுடியாதவைகளாயும் தாமதப்பட்டுப் பலத்தை உண் டாக்கக்கூடியவைகளாயும் தனித்தனியே ஒவ்வொரு பாபத்தையும் போக்கடிக்கக்கூடியதாயுமிருக்கிற தர்மங்களினால் இப்பொழுதே பக்தி யோகத்தை ஆரம்பிக்கத் தகுந்த யோக்யதையை ஸம்பாதிப்பது முடி யாது என்பதினாலுண்டாகிய துக்கத்தை யடையாதே. என்றர்த்தம் இப் படிச் சிலவித இஷ்டபலங்களுக்கும் ஸாதனமாகப் பகவச் சாஸ்த்ரம் முதலியவைகளில் ப்ரஸித்தமாகச் சொல்லப்பட்டிருக்கிற பகவானிடத் தில் ப்ரபத்தி இவ்விடத்தில் கீழே ப்ரஸ்தாவிக்கப்பட்ட பக்தியோகத் தை ஆரம்பிப்பதற்கு விரோதியாகிய பாபங்களை நிவ்ருத்தி செய்வதா கிய ஒரு உதாஹரணத்தில் காட்டப்பட்டது.

1 𑌯𑌃 𑌸𑍍𑌵𑌦𑍁𑌷𑍍𑌕𑌰𑍇𑌣 𑌶𑍋𑌚𑍇𑌤𑍍
𑌯𑍇𑌨 𑌯𑍇𑌨𑍇𑌷𑍍𑌟 𑌹𑍇𑌤𑍁𑌨𑌾 ।
𑌸 𑌸 𑌤𑌸𑍍𑌯𑌾𑌹𑌮𑍇𑌵𑍇𑌤𑌿
𑌚𑌰𑌮𑌶𑍍𑌲𑍋𑌕 𑌸𑌙𑍍𑌗𑍍𑌰𑌹𑌃 ॥

ஆகையினாலேயே இவ்விடத்திலிருக்கிற பாஷ்யத்திற்கும் சர ணாகதி கத்யத்திற்கும் விரோதமில்லை என்று தாத்பர்யம். இந்த ஶ்லோகத்தில் 'மந்மநா பவ' என்கிற ஶ்லோகத்தினால் கர்மயோக நிஷ்டைகள் எல்லாவற்றிற்கும் முக்யமான ரஹஸ்யமாகிய பக வானையே சரணமாகவுடையவனா யிருக்கையை நிகமனம் செய்து பிறகு இப்பொழுது கர்மயோக நிஷ்டைக்குப் பலமாகிய எல்லா வேதாந்தங்களுக்கும் ஸாரமாய் விதிக்கப்பட்டிருக்கிற தத்துவ ஜ்ஞா னம் சொல்லவேண்டியதாகையினால் அதைச் சொல்லுகிறார் — 'ஸர்வ தர்மாந்' என்கிற ஶ்லோகத்தினால் என்று சங்கராசார்யரால் அர்த்தம்

1 தாத்பர்ய சந்த்ரிகைக் காரராகிய ஸ்ரீமந் நிகமாந்த தேசிகன் அருளிச்செய் தது. ய:-எவன், ஸ்வதுஷ்கரேண-தன்னால் செய்யமுடியாததாகிய, யேநயேந- எந்தெந்த, இஷ்டஹேதுநா - இஷ்டபலத்திற்குக் காரணமாகிய உபாயத்தினால், ஶோசேத்-துக்கிப்பனோ, ஸஸ:தஸ்ய-அவனுக்குஅந்தந்தஉபாயம்,அஹமேவ-நானே, இதி-என்று, சரமஶ்லோக ஸங்க்ரஹ:-சரமஶ்லோகத்தின் ஸாரமான அர்த்தம்.

சொல்லப்பட்டது. இதுவும் 1 'ஸர்வார்தாந் விபரீதாம்ஶ்ச' என்கிறதற்கு ஒரு உதாஹரணம். ஏனெனில் கர்மயோகநிஷ்டையைவிட வேறாக பக்தியோக நிஷ்டை கீழ் ஶ்லோகத்தில் காட்டப்பட்டிருப்பதினாலும், இந்த ஶ்லோகத்திலேயே 'ஶரணம் வ்ரஜ' என்று நேரில சொல்லியிருக்கிறபடியினாலும் முன் ஶ்லோகத்தில் பகவானையே ஶரணமாக வுடையவனாயிருக்கையை உபஸம்ஹாரம் செய்திருக்கிறது பொருந்தவில்லை யாகையினால். மேலும் இந்த ஶ்லோகத்தில் 'மாமேகம்' என்பதற்கு எல்லாவற்றிற்கு மாத்மாவாயும் எல்லாவற்றிற்கும் ஸமானனாயும் எல்லா ப்ராணிகளிடத்திலு மிருப்பவனாயும் ஈஶ்வரனாயுமிருக்கிற என்னை நானே அவன் என்று சரணமாக வடை, என்னைவிட வேறொருவரில்லை என்று தெரிந்துகொள், என்றர்த்தம் என்று சொல்லப்பட்டதே. இந்த விஷயத்தில் பதங்களுக்கு இப்படி அர்த்தம் சொல்லக்கூடிய ஶக்தி இல்லை. பதங்களுக்கப்படி அர்த்தமில்லாமலிருக்க அதைவிட்டு லக்ஷணையாக அர்த்தம் சொல்லுவதில் காரணத்தை ஒன்றையும் காணேம். அதுவுமல்லாமல் 'அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி' என்கிற வாக்யத்தின் ஸ்வாரஸ்யத்தினாலும் ஸ்ரீராமன் விபீஷணன் முதலியவர்களைப்போலச் ஶரணமாக அடையப்படுகிறவனுக்கும் ஶரணமாக அடைகிறவனுக்கும் ரக்ஷிக்கிறவன் ரக்ஷிக்கப்படுகிறவன் என்கிற வ்யத்யாஸமே ஸ்பஷ்டமாக ஏற்படுகிறது. மற்ற ஶாஸ்த்ரங்களும் இதற்கு விரோதமில்லாமல் முன்பே ஸ்தாபிக்கப்பட்டன. மேலும் இவ்விடத்தில்—'ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய' என்பதினால் எல்லாக் கர்மங்களினுடையவும் ஸ்வரூபத்தையே விட்டுவிட வேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறதே அதுவும் இந்த அத்யாயத்தின் ஆரம்பத்தில் சொல்லப்பட்ட தாமஸ த்யாகத்தை அங்கீகரித்ததாகும். இதை நிராகரிப்பதற்காகவே பாஷ்யத்தில் இந்த ஶ்லோகத்தில் ஸாத்விக த்யாகம் சொல்லப்பட்டது. கர்மங்களில் அதிகாரமுள்ளவர்களுக்குள்ளேயே ஸாத்விகம், ராஜஸம், தாமஸம், என்று சொல்லப்படுகிற வ்யத்யாஸங்கள் உண்டு. தத்துவத்தை அறிந்தவர்களாய் எல்லாக் கர்மங்களையும் விட்டவர்களுக்கு அஜ்ஞானம், துக்கம், இவைகளைக் காரணமாகவுடைய த்யாகம் ஸம்பவிக்காதாகையினால், ஸாத்விக த்யாகமும் அந்தக் கர்மங்களில் நிஷ்டையுடையவர்களைக் குறித்தே சொல்லப்படுகிறது என்று அவ்விடத்திலேயே நம்மால் வ்யாக்யானம் செய்யப்பட்டிருக்

1 பகவத்கீதை-18-32.

கிறது என்னில் அதுவும் உசிதமல்ல, அவ்விடத்தில் கேட்டிருப்பது பொதுவாக த்யாகம், ஸந்நியாஸம், இவைகளின் ஸ்வரூபத்தைப்பற்றியதாகையினால் பதிலும் பொதுவாகச் சொல்லியிருக்கிறதென்பதே தேற்படுகிறது. ஜ்ஞானயோகத்தில் நிஷ்டையுடையவர்களுக்கு நித்யமாயும் நைமித்திகமாயுமிருக்கிற கர்மங்களின் ஸ்வரூபத்தை விட்டுவிடுவது முன்னமேயே நிராகரிக்கப்பட்டிருப்பதினால் அநுகீதையில் 1 'நைவ தர்மீ ந சாதர்மீ ந சைவ ஹி ஶுபாஶுபீ | யஸ்ஸ்யாதேகாஸநே லீந: தூஷ்ணீம் கிஞ்சிதசிந்தயந் ||' என்றும், 2 'ஜ்ஞாநம் ஸந்ந்யாஸலக்ஷணம்' என்றிவை முதலியது சொல்லப்பட்டிருக்கிறதே அதுவும், ஸ்ரீபாகவத புராணத்தில் 3 'தஸ்மாத்த்வமுத்தவோத்ஸ்ருஜ்ய சோதநாம் ப்ரதிசோதநாம் | ப்ரவ்ருத்திம் ச நிவ்ருத்திம் ச ஶ்ரோதவ்யம் ஶ்ருதமேவ ச || மாமேகமேவ ஶரணமாத்மாநம் ஸர்வதேஹிநாம் | யாஹி ஸர்வாத்மபாவேந மயா ஸ்யா ஹ்யகுதோபய:' என்றும், மற்றோரிடத்திலும் 4 'த்யஜ தர்மமதர்மம் ச த்யஜ ஸத்யாந்ருதே உபே | உபே

---

1 பாரதம்-ஆஶ்வமேதிக பர்வம்-நைவதர்மீ-தர்மங்களைச் செய்யாதவனாகவும், நசாதர்மீ-அதர்மங்களைச் செய்யாதவனாகவும், நசைவஹி சுபாசுபீ-சுபமான பலம், அசுபமான பலம், இவைகளில் ஆசையில்லாதவனாகவும், ய: - எவன், ஏகாஸனே-ஒரே ஆஸனத்திலேயே, லீந:-உட்கார்ந்துகொண்டு, தூஷ்ணீம்-பேசாமல், கிஞ்சித்-ஒன்றையும், அசிந்தயந் - யோசிக்காமல், ஸ்யாத்-இருப்பானோ.

2 ஜ்ஞானமானது ஸந்நியாஸத்திற்கு அடையாளம்.

3 பாகவதம்-11-12-14,15. உத்தவ-உத்தவரே, த்வம்-நீ, தஸ்மாத்-ஆகையினால், சோதநாம் - விதியையும், ப்ரதிசோதநாம்-மறுத்திருப்பதையும், உத்ஸ்ருஜ்ய-விட்டுவிட்டு, ப்ரவ்ருத்திம் - விதிக்கப்பட்ட கார்யங்களில் ப்ரவ்ருத்திப்பதையும், நிவ்ருத்திம்ச - மறுக்கப்பட்ட கார்யங்களில் நிவ்ருத்திப்பதையும், ஶ்ரோதவ்யம்-இனி கேழ்க்கவேண்டியதையும், ஶ்ருதமேவச-இது வரையில் கேட்டதையும், உத்ஸ்ருஜ்ய-விட்டுவிட்டு, ஸர்வதேஹிநாம்-எல்லா ப்ராணிகளுக்கும், ஆத்மானம்-ஆத்மாவாயிருக்கிற, மாமேகமேவ-என்னொருவனையே, ஸர்வாத்மபாவேந-எல்லாவற்றிற்கும் இவன் ஆத்மா என்கிறபாவத்தினால்,ஶரணம்-சரணமாக,யாஹி-அடை, அகுதோபயம்-ஒன்றுக்கும் பயமில்லாமலிருக்கிற இடத்தை, யாஸ்யஸி-அடையப்போகிறாய்.

4 பாரதம்-சாந்திபர்வம்- மோக்ஷதர்மம் - 337-40. தர்மம் - தர்மத்தையும், அதர்மம் - அதர்மத்தையும், த்யஜ - விடு, ஸத்யாந்ருதேபி - ஸத்யம், அந்ருதம், இவைகளையும், த்யஜ-விடு, உபே - இரண்டுகளாகிய, ஸத்யாந்ருதே - ஸத்யம், அந்ருதம், இவைகளை, த்யக்த்வா-விட்டு, யேன-எதனால், த்யஜஸி-விடுகிறாயோ, தத்-அதையும், த்யஜ-விட்டுவிடு.

ஸத்யாந்ருதே த்யக்த்வா யேந த்யஜஸி தத் த்யஜ ॥' என்றும் சொல்லப்பட்டிருக்கிறதே இப்படிப்பட்ட வசனங்களெல்லாம் ஸாத்விக த்யாகத்தைச் சொல்லுகிறதாகவே அர்த்தம் சொல்லவேண்டியது. ஸமாதியிலிருக்கும் தசையைச் சொல்லுகிற வசனங்களுக்கு ஒருவித விரோதமுமில்லை. மேலும் 1 'த்யஜ தர்மமஸங்கல்பாதர்மஞ்சாப்யஹிம்ஸயா | உபே ஸத்யாந்ருதே புத்த்யா புத்திம் பரமநிஶ்சயாத்' ॥ என்றிவை முதலிய வசனங்களினால் மேற்கூறிய வசனங்களில் ஸாத்விக த்யாகமே சொல்லப் படுகிறதென்று வ்யக்தமாக ஏற்படுகிறது. 'ஏகம்' என்கிற இடத்திலும் ஒருவித விஶேஷமுமில்லாத சித்தோடு ஒன்றென்று சொல்லுகிறது என்கிற அர்த்தத்தைக் கேழ்க்கிற சிறுவர்களும் 2 பரிஹாஸம் செய்வார்கள். பாஷ்யத்தில் சொல்லப்பட்ட 'ஶரணம்' என்னும் பதத்தின் அர்த்தமோவெனில் இந்தப் பதத்தின் ஸ்வாரஸ்யத்திற்கும், இந்த க்ரந்தத்தின் முன்பின் ஸந்தர்ப்பங்களுக்கும் மற்ற ஶாஸ்த்ரங்களுக்கும் பொருத்தமானது. 'ஶரண' என்னும் பதமும் மிகவும் வெவ்வேறாக இருக்கிற வஸ்துக்களிடங்களிலும் ப்ரயோகிக்கப்பட்டிருக்கக் காணப்படுகிறது. 3 '[illegible]

---

1 பாரதம்- சாந்திபர்வம்-மோக்ஷதர்மம்-337-41. தர்மம் - தர்மத்தை, அஸங்கல்பாத்-பலங்களில் ஆசை இல்லாமையினால், த்யஜ-விட்டு விடு, அதர்மஞ்ச-அதர்மத்தையும், அஹிம்ஸயா-ஒருவரையும் ஹிம்ஸை செய்யாமையினால், த்யஜ-விட்டு விடு, உபேபி-இரண்டுகளாகிய, ஸத்யாந்ருதே-ஸத்ய-கைவல்யம், அந்ருத-ஐஶ்வர்யம், இவைகளை, புத்யா-அவைகளின் தோஷங்களைத் தெரிந்துகொள்ளுவதினால் (விடு), புத்திம்-அந்தப் புத்தியையும், பரமநிஶ்சயாத்-பகவானே இவ்விதமான புத்தியைக் கொடுத்தான் என்கிற நிஶ்சயத்தினால் (விடு,) கீழ்ச்சொல்லிய வசனங்களுக்கு ஸாத்விக த்யாகமே அர்த்தம் என்பது ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரம், ப்ரபாவ வ்யவஸ்தாதிகாரத்தில் விசதமாக அருளிச்செய்யப்பட்டிருக்கிறது.

2. 'மாம்' என்கிற இடத்தில் கண்ணனாய் அவதரித்திருக்கும் தசையில் விக்ரஹங்கள், அப்பொழுது செய்யும் வ்யாபாரங்கள், இவைகளோடு கூடிய தன்னைக் குறிக்கிறபடியினாலும் எதிரிலிருக்கும் 'நீ' என்று சொல்லப்படுகிற ஜீவனைவிட 'நான்' என்பது வேறென்று காட்டுகிறபடியினாலும் ஒரு விஶேஷமுமில்லாத வஸ்து இதற்கர்த்தம் என்பது பரிஹஸிக்கத் தக்கதே என்று தாத்பர்யம்.

3. அஹம்-நான். இமாம்-இந்த ப்ரக்ருதியை, ஹித்வா-விட்டு, அபேத்ய-போய், நிராமயம்-ஒருவிதப் பீடையுமில்லாத ஸ்தானத்தை, ஸம்ப்ரயாஸ்யே-அடையப்போகிறேன், மம-எனக்கு, அநேநஸஹ-இந்தப் பகவானோடு கூட, ஏகத்வம்-ஒன்றாக இருக்கை, க்ஷமம்-உசிதமானது, அநயாஸஹ-இந்த ப்ரக்ருதியுடன், ஏகத்வம்-சேர்ந்திருக்கை, நக்ஷமம்-உசிதமல்ல,

த்வாஹஹிதோ ஹிக்வா ஸம்ஶ்ரயிஷ்ய நிராமயம்। க்ஷேமம் ஹஹ ஸஹாநேந நிகேக்வேநயா ஸஹ ॥' என்றும், அப்படியே 1 'வாநராணாம் நராணாம்ச கதமாஸீத் ஸமாகம:' என்கிற கேள்விக்குப் பதிலாக 2 'ராமஸுக்ரீவயோரைக்யம் தேவ்யேவம் ஸமஜாயத' என்றிவை முதலிய இடங்களில் அப்படி ப்ரயோகிக்கப் பட்டிருக்கிறது. 'ஸர்வதர்மாந் பரித்யஜ்ய' என்கிற இடத்தில் ஶாஸ்த்ரத்திற்கு விரோதமான தர்மங்களை மாத்திரம் விடவேண்டுமென்று சொல்லுகிறது என்று பாதவப்ரகாசன் முதலியவர்கள் சொன்ன அர்த்தத்தில் நமக்கு விவாதமில்லை. அவஶ்யம் செய்யவேண்டியவைகளாயிருந்தபோதிலும் எல்லாக கர்மங்களையும் விட்டுவிட்டு என்று ஶரணாகதியை ஸ்தோத்திரம் செய்கிறது என்கிற அர்த்தமோவெனில் 'அபி' என்னும் பதத்தைச் சேர்த்துக்கொள்ள வேண்டியது முதலிய தோஷங்களினால் உசிதமல்ல. அவஶ்யம் செய்யவேண்டியதில்லாத தர்மங்களை விட்டுவிட வேண்டுமென்று இங்கே சொல்லப் படுகிறது என்று நாராயணார்யர் செய்த வ்யாக்யானத்திலும் அனுஷ்டானத்திற்கொரு விரோதமுமில்லை.

மேலும் இந்தக் கீதையில் ஆரம்பம் முதல் பராமர்ஶித்துப் பார்ப்போம். முதலத்யாயத்தில் அர்ஜுனனுக்கு உண்டாகிய இடமில்லாத இடத்தில் ப்ரீதி, கருணை முதலியவைகளினால் ஶாஸ்த்ரத்தை மீறி நடக்கவேண்டும் என்று ஆசையையுடைய அந்த அர்ஜுனனால் சொல்லப் பட்ட ஆக்ஷேபங்களைப் பரிஹரிப்பதற்காக இரண்டாவது அத்யாயத்தினால் வேதாந்த ஶாஸ்த்ரம் சொல்லப்பட்டது என்கிற அர்த்தத்தில் ஒருவருக்கும் விவாதமில்லை. இரண்டாவது அத்யாயத்தில் சொல்லப்பட்ட யோகம் முதலியவைகளினாலும் பகவானே ஆராதிக்கப் படுகிறான் என்கிற விஷயத்திலும் ஒருவித விவாதமுமில்லை. யாகத்திற்காக நெல் முதலியவைகளை ப்ரோக்ஷணம் செய்யவேண்டும், குத்தவேண்டும் என்று விதித்திருக்கிற ஶாஸ்த்ரங்களை அனுஷ்டிப்பதினாலும் அந்தப் பகவானே யல்லவோ ஆராதிக்கப்படுகிறான்.

---

1. ராமாயணம், சுந்திரகாண்டம் - 35 - 2. வாநராணாம் - குரங்குகளுக்கும், நராணாம்ச - மனிதர்களுக்கும், ஸமாகம:-சேர்க்கை, கதம்-எப்படி, ஆஸீத்-உண்டானது.

2 ராமாயணம், சுந்திரகாண்டம் - 35 - 52. தேவீ-ஓ ஸீதையே! ராம ஸுக்ரீவயோ: - ராமன் ஸுக்ரீவன், இவர்களுக்கு, ஐக்யம் - சேர்க்கையானது, ஏவம்-இவ்விதமாக, ஸமஜாயத-உண்டானது.

ஆனால் அவ்விடங்களில் நேரில் பகவானைப்பற்றிச் சொல்லப்படவில்லை என்பது அந்த ஸந்தர்ப்பங்களைக் கொண்டும், மேலே நேரில் பகவானைப் பற்றிய யோகம் செய்கிறவர்கள் 1 ‘யோகிநாமபி ஸர்வேஷாம் மத்கதேநாந்தராத்மநா’ என்றாரம்பித்து நிரூபிக்கப்படுகிறபடியினாலும் ஸ்தாபிக்கப்பட்டது. மூன்றாவது அத்யாயத்தில் யோகமென்று சொல்லப்படுகிற உபாயத்தின் பாகங்களாகிய க்ரியா யோகம், புத்தி யோகம், இவைகளை நிரூபித்திருக்கிறது என்பதும் 2 ‘ஜ்ஞாநயோகேந ஸாங்க்யாநாம் கர்மயோகேந யோகிநாம்’ என்பதினால் அதிகாரிகள் வெவ்வேறென்று நிரூபித்திருப்பதினால நிராகரிக்கப்பட்டது. 3 ‘தூரேண ஹ்யவரம் கர்ம’ என்று சொல்லியிருப்பதினால் இவை இரண்டும் ஸமம் என்பது பொருந்தாது என்று சொல்லுவது முசிதமல்ல, இது அந்த ஸந்தர்ப்பத்தில் நிந்திக்கப்படுகிற காம்ய கர்மங்களைப் பற்றியதென்று ஸ்தாபிக்கப்பட்டபடியினால். 4 ‘யஸ்த்வாத்மரதிரேவ ஸ்யாத்’ என்றிவை முதலிய இரண்டு ஶ்லோகங்களில் இந்த லோகங்களில் பார்க்கப்படுகிறதும் ஶாஸ்த்ரங்களில் கேழ்க்கப்படுகிறதுமாகிய ஶப்தம் முதலிய விஷயங்களில் ஆசையில்லாதவனும் பரமாத்மா ஒருவனிடத்திலேயே ஆசையுடையவனுமிருக்கிற புருஷனுக்குக் கர்மங்களை அனுஷ்டானம் செய்வதில் ப்ரயோஜனம் இல்லை என்பதும் அக்ருத்யங்களைச் செய்வதில் தோஷமில்லை என்பதும் நிரூபிக்கப்படுகிறது என்று சொல்லப்பட்டதே அதுவும் யுக்தமல்ல, 5 ‘கெட்ட நடத்தையிலிருந்துஓயாதவனாகஇல்லாமல்’ என்றர்த்தமுள்ள ஶ்ருதி வாக்யம் முதலியவைகளுக்கு விரோதம் வருகிறதென்று முன்னமேயே நிரூபித்திருப்பதினால். ஆகையினாலேயே இந்த ஶ்லோகத்தில் உதாஹரிக்கப்பட்ட 6 ‘ஹத்வாபி ஸ இமாம்ல்லோகாந்’ என்று மேலே சொல்லப் போகிறதும் வேறு விஷயத்தைப் பற்றியதென்று அவ்விடத்தில் ஸ்தாபிக்கப்பட்டது. அப்படிக்கல்லாமல் ஸமாதியிலிருக்கும் தசையில் வேறு செய்யவேண்டிய கர்மங்களில்லை என்பது இந்த இரண்டு ஶ்லோகங்களில் சொல்லப்படுகிறது, என்றபிப்ராயமானால் அப்பொழுது முக்தியை யடைந்த தசையிலே போல ஒரு விரோதமுமில்லை. ஆகையினால் அதை ஒப்புக்கொள்ளுகிறோம். மேலும் அவர்களினாலேயே ஆறாவது அத்யாயத்தில் ஸமாதியிலிருக்கும் தசையிலேயே கர்மங்களைச் செய்யவேண்டியதில்லை யென்பது நிரூ

1 பகவத்கீதை - 6-47 2 பகவத்கீதை - 3-3 3 பகவத்கீதை-2-49
4 பகவத்கீதை-3-17 5 கடவல்லீ-1-2-24 6 பகவத்கீதை- 18-17

பிக்கப்பட்டிருக்கிறது. எப்படி என்னில் 1 'யம் ஸந்ந்யாஸம் இதி ப்ராஹு: யோகம் தம் வித்தி பாண்டவ' என்கிற ஶ்லோகத்தில் ஸமாதியிலிருக்கும் காலத்திலேயே கர்ம ஸந்ந்யாஸம் செய்யவேண்டியது, மற்ற ஸமயத்தில் செய்யக்கூடாது என்று வ்யாக்யானம் செய்யப்பட்டது. அப்படியே 2 'ஆருருக்ஷோர் முநேர் யோகம்' என்கிற இடத்திலும் ஜிதேந்த்ரியனாகிய எவனுக்குக் கர்மங்களைச் செய்ய வேண்டிய காலம் முழுமையும் யோகத்தினாலேயே வ்யாபரிக்கப்பட்டிருக்கிறதோ அவனுக்குக் கர்மங்களை த்யாகம் செய்வது யுக்தம், மற்றவனுக் கல்ல என்று சொல்லப்பட்டது. ஆகையினால் இதுவே மூன்றாவது, நான்காவது, ஐந்தாவது அத்யாயங்களில் பகவானால் நிரூபிக்கப்பட்டது என்றறியவேண்டியது. மூன்றாவது அத்யாயத்தில் 3 'யஸ்த்வாத்மரதிரேவ ஸ்யாத்' என்கிற இடத்திலும், நான்காவது அத்யாயத்தில் 4 "யோகஸந்ந்யஸ்த கர்மாணம்' என்கிற இடத்திலும், ஐந்தாவது அத்யாயத்தில் 5 'ஸர்வ கர்மாணி மநஸா ஸந்ந்யஸ்யாஸ்தே' என்கிற இடத்திலும் சொல்லப்பட்டது. ஆகையினால் ஆத்மாவினிடத்திலேயே ஆசையுடையவர்களாய் ஜிதேந்த்ரியர்களாய் யோகம் செய்துகொண் டிருப்பவர்களுக்கே கர்மங்களை விட்டுவிடுவது உசிதமாகும். அவர்களுக்கும் லோகத்தில் ப்ரஸித்தர்களாயும் எல்லா லோகங்களும் இவர்களைப்பார்த்து அனுஷ்டானம் செய்யக் கூடிய வர்களாயும் வித்வான்களாயு மிருக்கிறவர்களுக்கு இந்தக் கர்மங்களினால் தங்களுக் கொருவித லாபமில்லாவிடினும் லோகங்களுக்கு அனுக்ரஹம் செய்வதற்காகக் கர்மயோகமே உசிதம் என்று பகவானுடைய அபிப்ராயமாக அறியவேண்டியது என்று நிகமனம் செய்யப்பட்டது. அக்ருத்யத்தை அனுஷ்டானம் செய்வதில் தோஷமில்லாமையினால் அக்ருத்யத்தைச் செய்யாமலிருப்பதில் ஒருவித ப்ரயோஜனமுமில்லை என்று சொல்லப்பட்டிருக்கிறதே அது அந்த ஸமாதி தசையில் ப்ரஸ்தாவமில்லாததைப் பற்றிச் சொல்லி இருக்கிறது. 6 'கர்மணைவ ஹி ஸம்ஸித்திமாஸ்திதா ஜநகாதய:' என்கிற இடத்தில் ராஜாக்களைச் சொல்லி இருப்பது அவர்களுடைய சரித்திரங்கள் லோகத்தில் ப்ரஸித்தமாக இருக்கிறபடியினால் என்று சொல்லப்பட்ட இந்தத் தாத்பர்யமே இவ்வி

1 பகவத்கீதை-6-2 2 பகவத்கீதை - 6-3 3 பகவத்கீதை - 3-17
4 பகவத்கீதை - 4-41 5 பகவத்கீதை - 5-13 6 பகவத்கீதை - 3-20

டத்தினுசிதமாயிருக்கிறது. அதற்கப்புறம் 1 ‹𑌏𑌵𑌂 𑌪𑌰𑌂𑌪𑌰𑌾𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌮𑌿𑌮𑌂 𑌰𑌾𑌜𑌰𑍍𑌷𑌯𑍋 𑌵𑌿𑌦𑍁𑌃› என்று சொல்லியிருப்பதினால் ராஜாக்களாயிருக்கிற யோகிகளுக்கே இந்தக் கர்மங்களை விடக்கூடாதென்று உபதேசம் செய்திருக்கிறது, மற்றவர்களுக்கில்லை என்று மற்றொரு பக்ஷம் சொல்லப்பட்டதே அது அவ்வளவு உசிதமல்ல, மற்றவர்களுக்கும் கர்மங்களின் ஸ்வரூபத்தை விட்டுவிடக்கூடாதென்பது எல்லா இடங்களிலும் ஸ்பஷ்டமாகச் சொல்லப்பட்டிருப்பதினால். ஆகையினாலேயே நான்காவது அத்யாயத்தில் இவ்விடத்தில் சிலர் ‹𑌰𑌾𑌜𑌰𑍍𑌷𑌯𑍋 𑌵𑌿𑌦𑍁𑌃› என்று சொல்லியிருப்பதினாலும், முன் அத்யாயத்தில் உதாஹரணத்திற்காக ஜனகனைச் சொல்லி இருப்பதினாலும், ஒன்பதாம் அத்யாயத்தில் 2 ‹𑌰𑌾𑌜𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌰𑌾𑌜𑌗𑍁𑌹𑍍𑌯𑌂› என்று சொல்லப்போகிறபடியினாலும் பகவானால் உபதேசம் செய்யப்பட்ட இந்த யோகத்தில் ராஜாக்களுக்கே அதிகாரமுண்டு. மற்றவர்களுக்கில்லை என்று எண்ணுகிறார்கள். அது உசிதமல்ல, ஒன்பதாம் அத்யாயத்தில் 3 ‹𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌯𑍋 𑌵𑍈𑌶𑍍𑌯𑌾𑌸𑍍𑌤𑌥𑌾 𑌶𑍂𑌦𑍍𑌰𑌾𑌸𑍍𑌤𑍇𑌽𑌪𑌿 𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 𑌪𑌰𑌾𑌂 𑌗𑌤𑌿𑌮𑍍› என்று இதில் எல்லாருக்கும் அதிகாரமுண்டென்று சொல்லப்படுகிறபடியினால். ஆகையினால் ராஜாக்களின் ப்ரவ்ருத்தியைச் சொல்லியிருப்பது உதாஹரணம் காட்டுவதற்காகவே ஒழிய வேறுவிதமாக இல்லை என்றொப்புக்கொள்ள வேண்டும், என்று தன்னாலேயே சொல்லப்பட்டது. ஐந்தாவது அத்யாயத்தில் 4 ‹𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌃 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌶𑍍𑌚 𑌨𑌿𑌃𑌶𑍍𑌰𑍇𑌯𑌸𑌕𑌰𑌾𑌵𑍁𑌭𑍌› என்று சொல்லப்பட்ட ஸந்நியாஸம் கர்மயோகம் இவைகளுக்குப் பிறகு 5 ‹𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑌯𑍋𑌗𑍌 𑌪𑍃𑌥𑌗𑍍𑌬𑌾𑌲𑌾𑌃› என்று சொல்லப்பட்ட ஸாங்க்ய யோகங்கள் வெவ்வேறு என்று நிரூபிக்கப்பட்டிருக்கிறதே அதுவும் உசிதமல்ல. 6 ‹𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑍇𑌨 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍇𑌨 𑌯𑍋𑌗𑌿𑌨𑌾𑌮𑍍› என்று முன்பு சொல்லப்பட்டதே இவ்விடத்திலும் ஜ்ஞாபகப்படுத்தப்படுகிறபடியினால் ப்ரஸித்தி இருப்பதற்கும் விரோதமில்லை. இந்த ஶாஸ்த்ரத்தில் கர்மயோகம் ஜ்ஞானயோகம் இவைகளுக்கு இப்படியே ப்ரஸித்தி இருக்கிறபடியினால் ‹𑌨𑌿𑌃𑌶𑍍𑌰𑍇𑌯𑌸𑌕𑌰𑌾𑌵𑍁𑌭𑍌› என்பதோடு புனருக்தியுமில்லை. ஸங்க்ரஹமாயும் விஸ்தாரமாயும் சொல்லியிருக்கிறபடியினாலே புனருக்தி பரிஹரிக்கப்படுகிறபடியினால் மற்ற எல்லா வ்யாக்யாதாக்களினாலும் இப்படியே ஒப்புக்கொள்ளப்பட்டிருப்பதி

1 பகவத்கீதை - 4-2 2 பகவத்கீதை -9-2 3 பகவத்கீதை-9-32
4 பகவத்கீதை-5-2 5 பகவத்கீதை-5-4 6 பகவத்கீதை-3-3

னாலும் 1 'பண்டிதாஸ்ஸமதர்ஶிந:' என்கிற இடத்தில் எல்லா ப்ராணி களிடங்களிலும் ஹிம்ஸை செய்யக்கூடாது என்கிற புத்தியும் அனுக்ர ஹம் செய்யவேண்டுமென்கிற புத்தியும் எல்லா ப்ராணிகளும் பகவா னால் ரக்ஷிக்கத் தக்கவைகள் பகவானுடைய விபூதிகள் என்கிற புத்தி யும் 'ஸமதர்ஶிந:' என்னப்படுகிறது என்று வ்யாக்யானம் செய்யப் பட்டது. அதில் ஒரு விவாதமுமில்லை. அவ்விடத்திலேயே பிறகு ஹிம்ஸை செய்வதிலும் அனுக்ரஹம் செய்வதிலும் பலம் ஸமம் என் கிற புத்தியும், ப்ராம்மணனுபிருக்கை முதலிய ஜாதிகளை மறுப்பதும் ஸமதர்சனமல்ல. ஏனெனில் இதர ஶாஸ்த்ரங்களை யனுஸரித்தும் மற்ற ப்ரமாணங்களை அனுஸரித்தும் இப்படியே சொல்லவேண்டும் என்று சொல்லப்பட்டதே இதுவும் ஆத்மாவைத் தவிர மற்ற வஸ்துக் கள் பொய்யென்று சொல்லுகிறவர்களின் மதத்திற்கே தூஷணமாகு மே யொழிய ஸ்வபாவத்திலேயே ஒன்றோடொன்று ஸமமாக இருக் கிற ஆத்மாக்களுக்கே உண்மையாகிய தேஹங்களாகிற உபாதியினால் உண்டாகிற வ்யத்யாஸமுண்டென்று சொல்லுகிற மதத்திற்குத் தூஷ ணமாகாது. வெவ்வேறு விதமான தேஹங்களையுடைய ஆத்மாக்களி னுடைய ஸ்வரூபம் ஸமம் என்று தெரிந்துகொள்ளுவதில் மற்ற ஶாஸ் த்ரங்கள் ப்ரமாணங்கள், இவைகளுக்கு விரோதமில்லாமையினாலும் மேலும் அவைகளுக்கு ஒத்திருப்பதினாலும். ஆறாவது அத்யாயத் தில் சொல்லப்பட்ட யோகத்திற்கு விஷயங்களின் வ்யத்யாஸம் முதலி யவை அவ்விடத்திலேயே ஸ்பஷ்டமாக நிரூபிக்கப்பட்டிருக்கிறது. அந்த யோகிகள் அனேகவிதங்களென்பது அவர்களாலும் மறுக்க முடியாது. ஆகையினாலே 2 'யோகிநாமபி ஸர்வேஷாம்' என்கிற ஶ்லோகத்தில் யோகிகள் அவரவர்கள் மனதைச் செலுத்துகிற விஷ யங்கள் வெவ்வேறாகையினால் அனேக விதமானவர்கள். அவர்களுக் குள் என்னிடத்திலேயே செலுத்தப்பட்ட மனதையுடையவனாய் என் னையே ஶ்ரத்தையினால் எவன் பக்தி செய்கிறானோ அவன் யோகம் செய்கிறவர்களுக்குள் மேலானவன் என்றென்னுடைய அபிப்ராயம் என்றும், இவ்விடத்தில் சுருக்கமாகவும் விஸ்தாரமாகவும் எந்த யோ கம் சொல்லப்பட்டதோ அது எல்லா யோகங்களையும்விட மிகவும் சிற ந்தது என்றபிப்ராயம் என்றும் வ்யாக்யானம் செய்தார்கள். 3 'ஶப்த ப்ரஹ்மாதிவர்ததே' என்கிற இதுவும் மூன்று குணங்களையுடைய ப்ர க்ருதியைத் தாண்டுகிறான் என்று சொல்லுகிறது என்றேற்றுக்கொள்ள வேண்டும். இவ்விடத்தில வேதங்களைச் சொல்லி அதின் வழியாக

1 பகவத்கீதை-5-18 2 பகவத்கீதை-6-47 3 பகவத்கீதை-6-44

அதின் பலன்களைச் சொல்லுகிறதென்று சொல்லில் லக்ஷணையின் பேரில் லக்ஷணையும் அதின் பேரில் அர்த்தங்களைச் சுருக்கிச் சொல்ல வேண்டியது முதலிய கஷ்டங்கள் உண்டாகின்றன. பாஷ்யத்தில் சொல்லியிருக்கிற விதமோவெனில் சிகரத்தைப் பிடித்துத் தூக்கினதைப் போலத் தாத்பர்யத்தை வ்யக்தமாய்ச் சொல்லுகிறதென்பது விசேஷம். 1 ‹தவஸ்விப்யோऽதிகோ யோகீ› என்கிற ஶ்லோகத்தில் 'இவ்விடத்தில் 'தவஃ' என்னும் பதத்தினால் வானப்ரஸ்தர்களின் தர்மம் சொல்லப்படுகிறது. 'ஜ்ஞாந' என்னும் பதத்தினால் ப்ரம்மசாரிகளின் தர்மம் சொல்லப்படுகிறது' 'கர்ம' என்னும் பதத்தினால் க்ரஹஸ்தர்களின் தர்மம் சொல்லப்படுகிறது என்று சொல்லப்பட்டதே இந்தப் பிரிவு ஒருவிதக் காரணமுமில்லாதது. எல்லா ஆஶ்ரமங்களிலும் அந்தந்த ஆஶ்ரமங்களுக்கு விரோதமில்லாத தபஸ்ஸு, ஜ்ஞானம், கர்மங்கள், ஸம்பவிக்கலாமாகையினாலும் இருக்கிறபடி அர்த்தம் சொல்லுவதில் ஒரு வித விரோதமில்லாமையினாலும் வானப்ரஸ்தன் முதலியவர்களை லக்ஷணையாகச் சொல்லுவதில் ப்ரயோஜனமில்லாமையினாலும். ஏழாவது அத்யாயத்தில் சொல்லப்பட்ட சேதனங்களும் அசேதனங்களுமாகிய இரண்டுவித ப்ரக்ருதிகளும் ப்ரம்மத்தின் ஸ்வரூபத்தைவிட மிகவும் வேறுபட்டது என்பது அந்தந்த இடங்களில் நம்மால் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. தாழ்ந்த ப்ரக்ருதி எட்டு விதம் என்று பிரித்திருப்பதும் அங்கு சொல்லியிருப்பதைப் போல உசிதமாக இருக்கிறதென்று ஸ்தாபிக்கப்பட்டது. 2 ‹ரஸோऽஹமப்ஸு› என்றிவை முதலிய இடங்களில் சேர்த்துச் சொல்லியிருப்பதற்குக் காரணத்தை நிரூபிப்பதற்காக எல்லாக் கல்யாண குணங்களின் சேர்க்கையைச் சரீரமாகவுடையவன் நான் ஆகையினால் எல்லா இடங்களிலுமிருக்கிற கல்யாண குணங்களெல்லாம் என்னுடைய அம்ஶங்கள் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார் என்று சொல்லப்பட்டதே அவ்விடத்திலும் ரஸம் முதலிய கல்யாண குணங்களின் சேர்க்கையே பகவானுடைய ஸ்வரூபமல்ல. ப்ரக்ருதி ஸம்பந்தமில்லாத பகவானுடைய விக்ரஹமும் ப்ரக்ருதியிலுண்டாகிய ரஸம் முதலியவைகள் நிறைந்ததல்ல. ஆகையினால் ரஸம் முதலியவைகளே பகவானுக்குச் சரீரம் என்று சொல்லப்பட்டதாகும். அப்பொழுது சேர்க்கையாயும் பிரிவாயும் இருப்பதினால் அதினுடைய அம்ஶம் என்று சொல்லியிருப்பது ப்ரயோஜன

1 பகவத்கீதை-6-46 2 பகவத்கீதை-7-8

மற்றது. ஆகையினால் அந்த ரஸம் முதலியவைகள் உண்டாவது அந்தப் பகவானுக்கு வசப்பட்டது, என்பது முதலிய காரணங்களினாலேயே அவைகளோடு சேர்த்துச் சொல்லப்பட்டிருக்கிறது என்கிற வழியே நல்ல வழி. பேதமும் அபேதமும் உண்டென்கிற ந்யாயத்தை அனுஸரித்துக் கல்யாண குணங்களோடு அபேதமாய்ச் சொல்லி இருக்கிற தென்னில் எல்லாவற்றிற்கும் ஆத்மாவாயிருக்கிற பகவானுக்கு அப்படியே கெட்ட குணங்களோடும் அபேதம் உண்டாகுமாகையினால் எல்லா விகாரங்களுக்கும் இருப்பிடமாயிருக்கை முதலிய தோஷங்கள் வரும். இப்படியே மேலும் ஒன்று சேர்த்துச்சொல்லி இருக்கிற இடங்களில் கண்டுகொள்ளுவது. எட்டாவது அத்யாயத்தில் 1 'கிம் தத் ப்ரஹ்ம' என்றிவை முதலிய கேள்விகள் ஒரே அதிகாரிக்கு அறியவேண்டிய விஷயத்தைப்பற்றிய தென்பது அவ்விடத்திலேயே நம்மால் நிராகரிக்கப்பட்டிருக்கிறது. ப்ரம்மாவின் ஆயுஸ்ஸு, தினம், இவைகளைக் கல்பனை செய்திருப்பதும், புருஷர்களின் ராத்திரி பகல்களின் வ்யத்யாஸங்களைக் காரணமாகவுடைய மஹா கல்பம் முதலியவைகளைச் சொல்லி இருப்பதும், இதர ஸ்ம்ருதிகள் முதலியவைகளை யனுஸரித்து நம்மாலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருப்பதினால் ப்ரம்மாவின் பகல் முடிவில் மஹா ப்ரளயம் உண்டாகிறதென்று சொல்லுகிறவர்களுக்கே இது தூஷணமாகும். 2 'யத்கத்வா ந நிவர்தந்தே தத்தாம பரமம் மம' என்பது பரமபதத்தைச் சொல்லுவது என்பதில் ஸித்தாந்தத்திற்கு விரோதமில்லாமல் போனபோதிலும் பரிசுத்தமான ஜீவாத்மாவைச் சொல்லுகிறதென்பதில் யுக்திகள் அங்கேயே நிரூபிக்கப்பட்டன. 3 'அக்நிர்ஜ்யோதி:', 4 'தூமோ ராத்ரி:' என்கிற இடத்தில் அக்னி, தூமம், என்கிற பதங்களினால் ஒரு தினத்தின் பாகங்களாகிய காலங்கள் சொல்லப்படுகின்றன என்று சொல்லப்பட்டதே அது உசிதமல்ல. அவ்விடத்தில் அந்தந்தப் பதங்களினால் தேவயானம், பித்ருயானம், என்கிற பேர்களையுடைய இரண்டு விதக் கதிகள் ஜ்ஞாபகப்படுத்தப் படுகின்றன வாகையினாலும், 5 'நைதே ஸ்ருதீ' என்று நிகமனம்செய்திருப்பதினாலும், 6 'யத்ர காலே' என்று ஆரம்பத்திலிருக்கிற 'காலே' என்னும் பதம் காலத்திற்கபிமானிகளான தேவதைகள் ஆதிவாஹிகர்களில் பெரும்பானுமிருக்கிறார்கள் என்கிற தாத்பர்யத்தினால் சொல்லப்படுகிறது என்று

1 பகவத்கீதை-8-1 2 பகவத்கீதை-15-6 3 பகவத்கீதை-8-24
4 பகவத்கீதை-8-25 5 பகவத்கீதை - 8-27 6 பகவத்கீதை-8-23

ஸ்தாபிக்கப்பட்டிருப்பதினாலும். ஆகையினால் உத்தராயணம் சுக்ல பக்ஷம், பகல், இவைகள் சேர்ந்த ஸமயத்தில் ப்ரம்மவித்துக்களாகிய யோகிகள் திரும்பி வராமல் இருப்பதற்காகப் போகவேண்டும் என்று நியமனம் செய்வதும் முடியாது. தக்ஷிணாயனம், க்ருஷ்ணபக்ஷம், ராத்திரி, இவைகள் சேர்ந்த காலத்தில் மரணமடைந்த யோகிகள் சந்திரனையடைந்து மறுபடியும் திரும்பி வருகிறார்களென்பது இரண்டாவது ஶ்லோகத்தில் சொல்லப்படுகிறதென்பதும் உசிதமல்ல, 1 'நிஶி நேதி சேந்ந ஸம்பந்தஸ்ய யாவத்தேஹபாவித்வாத்தர்ஶயதி ச|' 2 'அதஶ்சாயநேபி தக்ஷிணே' என்கிற அதிகரணங்களினால் தக்ஷிணாயனத்திலும், ராத்திரியிலும் மரணமடைந்த யோகிக்கும் தைத்திரீயோபநிஷத்தில் சொல்லியவிதமாகச் சந்திரனோடு ஸாயுஜ்யத்தை முன்னிட்டுக்கொண்டு பரமாத்மாவை அடைவதும் திரும்பிவராமலிருப்பதும் ஸ்தாபிக்கப்பட்டிருப்பதினால். இந்த ஶ்லோகம் நேராகப் பகவானைப்பற்றி யோகம் செய்கிறவர்களைத் தவிர வேறு புகை முதலிய மார்க்கத்தில் போகக்கூடிய அதிகாரிகளைப்பற்றியதென்பது ஸ்தாபிக்கப்பட்டிருப்பதினால் அக்னி, ஜ்யோதிஸ்ஸு, தூமம், முதலிய பதங்கள் கீழ்ச்சொல்லிய காலங்களைச் சொல்லுகிறதென்பது எப்படித் தெரிந்து கொள்ளப்படுகிறது என்று ஆக்ஷேபித்துக்கொண்டு ஶ்ருதிகள் ஸ்ம்ருதிகள் எல்லாவற்றிலும் உத்தராயணம், சுக்லபக்ஷம், பகல் இவைகள் பொதுவாக தேவதைகளின் ஸம்பந்தமுள்ள கர்மங்களுக்கங்கமாகச் சொல்லப்பட்டிருப்பதினால் மரணமடையும் காலமும் தேவதையை யுத்தேசித்ததாகையினால் என்றுசொல்லப்பட்டதே, அதுவுசிதமல்ல. மற்ற ஶாஸ்த்ரங்களில் மரணமடைவது தேவதையின் ஸம்பந்தமான கர்மமென்று சொல்லப்பட்டிருந்தால் தக்ஷிணாயனம் முதலிய காலங்களில் மரணமடையக் கூடாதென்று ஏற்படுமாகையினால். ஸாவதானமில்லாத மனதையுடையவர்களுக்கும் ஸுலபமாய்ச் செய்யக் கூடியதாயும் ஸுகமாய் அறியக் கூடியதாயும் சீக்கிரமாகப் பலத்தைக் கொடுக்கக் கூடியதாயுமிருக்கிற பகவானிடத்தில் ப்ரபத்தி செய்யும் விதத்தைச் சொல்லுவதற்காக ஸ்ரீபகவான் சொல்லுகிறார்— என்று ஒன்பதாவது அத்யாயத்தின் ஆரம்பத்தில் வ்யாக்யானஞ் செய்யப்பட்டது. அதுவும் முன்பு சொல்லப்பட்ட ஜ்ஞானியினால் செய்யக் கூடியதாகிய வேறொரு இடத்திலும் செலுத்தாத பக்தியை விவரிக்கிறது என்பதே மேல் ஶ்லோகங்களி லேற்படுகிறபடியினால்

1 ஶாரீரக ஸூத்ரம்-4-2-18 ராத்திரியில் மரணமடைந்தவனுக்கு மோக்ஷம் உண்டாகாது என்னில் அது உசிதமல்ல கர்மங்களின் ஸம்பந்தம் இந்தத் தேஹம் வரையில் மாத்திரம் இருக்கக்கூடியவைகளாகையினால். அப்படியே ஶ்ருதியும் சொல்லுகிறது.

2 ஶாரீரக ஸூத்ரம்-4-2-19 ஆகையினாலேயே தக்ஷிணாயனத்தில் மரணமடைந்தவனுக்கும் மோக்ஷமுண்டு.

நிராகரிக்கப்பட்டது. 1 'ஜ்ஞாநயஜ்ஞேந சாப்யந்யே' என்கிற ஶ்லோகத்தில் ஜ்ஞானயோகம் கர்மயோகம் இவைகளோடு சேர்த்து உபாஸநம் செய்வது ஒன்றாக உபாஸனம் செய்வது. இவைகளைத் தனித்தனியாகச் செய்துகொண்டு உபாஸநம் செய்வது தனியாக உபாஸனம் செய்வது. இங்கு 'ஜ்ஞாந' என்னும் பதத்தினால் ஒரு விதமான புத்தி சொல்லப்படுகிறதாகவுமாம். இதன் அர்த்தமாவது—சிலர் கர்மயோகம், புத்தியோகம், இவைகளைச் சேர்த்தனுஷ்டித்துக்கொண்டு உபாஸிக்கிறார்கள். சிலர் கேவலம் கர்மயோகத்தினாலும் கேவலம் புத்தியோகத்தினாலும் இப்படி அநேகவிதமாக உபாஸிக்கிறார்கள்—என்பது, என்று வ்யாக்யானஞ் செய்யப்பட்டது. இவ்விடத்தில் ஜ்ஞானயோகம் முதலியவைகளைச் சொல்லக் கூடிய பதம் ஒன்றும் காணப்படவில்லை. 2 'அஹம் க்ரது:' என்றிவை முதலிய மேலே இத்தை விவரிக்கிற க்ரந்தத்தை அனுஸரித்து ஒன்றாக இருக்கையும் அநேகவிதமாக இருக்கையும் உபாஸநம் செய்யப்படுகிற வஸ்துவைப் பற்றியதென்பது ஸ்பஷ்டமாக ஏற்படுகிறது. 3 'அநந்யாஶ்சிந்தயந்தோ மாம்' என்றிவை முதலிய இடங்களிலோவெனில் அவஶ்யமாக நேரிடக்கூடிய யோகக்ஷேமங்களுக்காகவும் என்னிடத்தில் பக்தி செய்து கொண்டிருக்கிற ஏகாந்திகளினால் இதர தேவதைகளாவது மற்றக்கர்மங்களாவது அபேக்ஷிக்க வேண்டியதில்லை என்றிவை முதலியது சொல்லப்பட்டதோ அதெல்லாம் நம்மால் அங்கீகரிக்கப்பட்டதே. பத்தாவது அத்யாயத்தில் 4 'விஸ்தரேணாத்மநோ யோகம் விபூதிம் ச' என்கிற இடத்தில் 'யோக' என்னும் பதத்திற்குப் பகவானைப் பற்றிய கர்மயோகத்தைச் சொல்லுவதாக வ்யாக்யானம் செய்திருப்பது யுக்தமல்ல. 5 'பஶ்ய மே யோகமைஶ்வரம்', 6 'ஏதாம் விபூதிம் யோகம் ச' என்றிவை முதலிய இடங்களில் 'யோக' என்னும்பதத்தினால்சொல்லப்படுகிற அர்த்தத்திற்கு விரோதம் வருகிறபடியினாலும் பிறகு இந்த அத்யாயத்தில் அந்தக் கர்மயோகத்தைப்பற்றி விவரிப்பதைக்காணாமையினாலும் அதுநிராகரிக்கப்பட்டது. 'ஸந்ந்யாஸஸ்ய' என்றாரம்பிக்கிற பதினொராவது அத்யாயத்தின் கடைசி ஶ்லோகம் இதற்குப் பதில் என்பதும் வெகுதூரம் நடுவில் விட்டிருப்பதினாலும் அதிலும் விவரத்தைக் காணாமையினாலும் நிராகரிக்கப்பட்டது. சில விபூதிகளும் எல்லா லோகங்

1 பகவத்கீதை-9-15 2 பகவத்கீதை-9-16 3 பகவத்கீதை-9-22

4 பகவத்கீதை - 10-18 5 பகவத்கீதை - 11-8 6 பகவத்கீதை-10-7

களும் பகவானுடைய ஸ்வரூபத்தில் ஏகதேசமாகையினால் அதின் ஒரு பாகமாகையினால் ஒன்று சேர்த்துச் சொல்லி இருக்கிறது என்று அர்த்தம் சொல்லியிருப்பதும் முன்பு சொல்லியபடி எல்லாத் தோஷங்களுக்கு மிருப்பிடமாக வேண்டிவரும் என்பதினால் நிராகரிக்கப்பட்டது. இப்படியே விஶ்வரூபவிக்ரஹத்திற்கு இந்த ப்ரபஞ்சங்கள் அவயவங்கள் என்று சொல்லியிருப்பதும் இவைகள் ப்ரக்ருதியைச் சேர்ந்தவைகளாகையினாலும் பகவானுடைய விக்ரஹம் ப்ரக்ருதியைச் சேர்ந்ததல்லாமையினாலும் ப்ரக்ருதியைச் சேராத விக்ரஹத்திற்கு ப்ரக்ருதியைச் சேர்ந்தவைகள் அவயவங்களாக இருப்பது ஸம்பவிக்காதாகையினாலும் நிராகரிக்கப்பட்டது. பனிரெண்டாவது அத்யாயத்தில் சொல்லப்பட்ட அக்ஷரோபாஸனம் பகவானைப்பற்றிய உபாஸனத்தைவிட வேறுபட்டதென்பது அந்த அத்யாயத்தில் சொல்லப்பட்டிருக்கும் வாக்யங்களின் ஸ்வாரஸ்யத்தினாலும் தான் புருஷோத்தமன் என்று நிரூபித்திருக்கும் இதர ஸந்தர்ப்பங்களோடு பொருந்தி இருப்பதினாலும். ஜீவாத்மாவையும் பரமாத்மாவையும் வெவ்வேறென்று சொல்லியிருப்பது அவஸ்த்தைகளின் வ்யத்யாஸத்தைப் பற்றியது. அவஸ்த்தைகளின் வ்யத்யாஸமாவது நிர்விஶேஷமான ப்ரம்மம் எல்லா வஸ்துக்களாகவும் மாறி இருப்பதும், எல்லாக் கல்யாண குணங்களின் கும்பல்களும் ப்ரகாசித்துக்கொண்டிருக்கிறதும், என்று தாத்பர்யம் என்று சொல்லப்பட்டது. இது அனேக விதங்களான விரோதங்கள் நிறைந்திருக்கிறபடியினால் சிறுவன் முதல்கொண்டு பரிஹஸிக்கத் தக்கது. வேறு க்ரந்தத்தில் இதைப்பற்றிய தூஷணங்களைப்பற்றி விஸ்தாரமாகச் சொல்லி இருப்பதினால் இவ்விடத்தில அதை விவரிக்கவில்லை. பதிமூன்றாவது அத்யாயத்தில் க்ஷேத்ரஜ்ஞனைப்பற்றிச்சொல்ல வேண்டியதெல்லாம் அந்த அத்யாயத்திலேயே சொல்லப்பட்டது. [1] 'யதுஶ்ரு தக்ஷ' என்கிற பாடம் ப்ரஸித்தமல்லாதது. அப்படிப்பாடமிருந்தபோதிலும் 'தக்ஷ' என்னும் பதம் ஜ்ஞானத்தைச் சொல்லுகிறதென்பது ஸ்வாரஸ்யமில்லாதது. க்ஷேத்ரம் நித்யமாகையினாலே ஒரு காரணத்தினால் உண்டானதல்லவாகையினால் அதற்குக் காரணம் சொல்லப்படவில்லை என்று சொல்லப்பட்டிருக்கிறதே என்னில் அப்படிச் சொல்லியிருப்பது உண்மையே. ஆனால் அப்படிச் சொல்லுவது உசிதமல்ல, [2] 'மஹாபூதாந்யஹங்காரோ' என்றாரம்பித்து மேலே சொல்லப்படுகிற க்ஷேத்ரம் முழுமையும் அவ்யக்தம்

1 பகவத்கீதை-13-3 ஶ்லோகத்தின் பாடாந்தரம்.

2 பகவத்கீதை-13-5.

தவிர மற்றது அநித்யம் என்று ஒப்புக் கொள்ளப்பட்டிருப்பதினால். 1 'தஸ்மாதவ்யக்தமுத்பந்நம் த்ரிகுணம் த்விஜஸத்தம | அவ்யக்தம் புருஷே ப்ரஹ்மந் நிஷ்கலே ஸம்ப்ரலீயதே ||' என்றிவை முதலிய வசனங்களினால் நித்யமாகிய அவ்யக்தமும் பரப்ரம்மத்தினிடத்தில் ஒன்று சேருகிறதென்றும் அதிலிருந்து பிரிந்து வருகிறதென்றும் சொல்லியிருப்பதினால். 2 'ப்ரஹ்மஸூத்ரபதைஶ்சைவ' என்கிற இடத்தில் க்ஷேத்ரம் முதலிய தத்துவங்களை நிரூபிக்கிற பஞ்சசிகாசாரியர் முதலியவர்களினால் செய்யப்பட்ட ஸூத்ரங்கள் சொல்லப் படுகின்றன என்று வ்யாக்யானம் செய்யப்பட்டது. அதுவும் உசிதமல்ல. பஞ்சசிகாசாரியர் முதலியவர்களின் க்ரந்தத்தைப் பற்றி 'ப்ரஹ்மஸூத்ரம்' என்கிற ப்ரஸித்தி இல்லாமையினால். 3 'மத்பக்த ஏதத் விஜ்ஞாய மத்பாவாயோபபத்யதே' என்று நிகமனம் செய்திருப்பதினால் பகவானே 4 'ஜ்ஞேயம் யத்தத் ப்ரவக்ஷ்யாமி' என்கிற இடத்தில் 'ஜ்ஞேயம்' என்று சொல்லப்பட்டார் என்றர்த்தம் சொல்லப்பட்டது. அதுவும் உசிதமல்ல. 3 'இதி க்ஷேத்ரம் ததா ஜ்ஞானம் ஜ்ஞேயம் சோக்தம் ஸமாஸத:' என்று முன்பாதியில் சொல்லப்பட்ட இவை மூன்றையுமே 'ஏதத்' என்னும் பதத்தினால் அனுவாதம் செய்திருப்பதினாலும் அதில் க்ஷேத்ரத்தைப் பற்றித் தெரிந்து கொள்ளுவதைப் போலக் கர்மங்களுக்கு வசப்பட்டவனாகிய க்ஷேத்ரஜ்ஞனைப் பற்றித் தெரிந்துகொள்ளுவதும் மோக்ஷத்திற் குபயோகமானது என்பது உசிதமாகையினாலும், க்ஷேத்ரம், முதலியவைகளைப் பற்றித் தெரிந்துகொள்ளுவதாகிய ஶாஸ்த்ரார்த்தமும் எல்லாவற்றையும் நியமிக்கிறவனாகிய பகவானுடைய ஆராதனமாகையினால் 'மத்பக்த ஏதத் விஜ்ஞாய' என்பதோடு விரோதமில்லையாகையினாலும். பதினான்காவது அத்யாயத்தில் 5 'மம யோநிர்மஹத்ப்ரஹ்ம தஸ்மிந் கர்ப்பம் ததாம்யஹம்' என்கிற இடத்தில் உயர்ந்ததாயும் தாழ்ந்ததாயும் நிரூபிக்கப்பட்ட ப்ரக்ருதிகளாகிய ஜீவன் ப்ரக்ருதி இவைகள் ஒன்று சேர்ந்திருக்கிறபாகம் கர்ப்ப

---

1 த்விஜஸத்தம-ஓ! ப்ராம்மண ஶ்ரேஷ்டனே, த்ரிகுணம்-மூன்று குணங்களையுடைய, அவ்யக்தம்-ப்ரக்ருதி, தஸ்மாத்-அந்தப் பரமாத்மாவினிடத்திலிருந்து, உத்பந்நம்-உண்டானது, நிஷ்கல:- கர்மஸம்பந்தங்களில்லாத, புருஷே-பரமபுருஷனிடத்தில், அவ்யக்தம்-அந்த ப்ரக்ருதி, ப்ரம்மன், ஓ! ப்ராம்மணனே, ஸம்ப்ரலீயதே-லயத்தை அடைகிறது.

2 பகவத்கீதை - 13-4 3 பகவத்கீதை - 13 - 18

4 பகவத்கீதை - 13-12 5 பகவத்கீதை-14-3

மென்று சொல்லப்பட்டது. அதிலும் 'ஸூஹ' என்னும் பதத்தி னால் ப்ரக்ருதி சொல்லப்பட்டபடியினால் அதில் மறுபடியும் பாக்ருதி யின் பாகத்தை வைக்கிறேன் என்று சொல்லுவதில் ப்ரயோஜன மில்லை யாகையினாலும் 1 'க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞ ஸம்யோகாத்' என்று கீழ்ச் சொல்லியிருப்பதே இவ்விடத்திலும் ஜ்ஞாபகத்திற்கு வருகிறபடியினால் 'மஹத்' என்னும் பதத்தினால் ஜீவாத்மாவைச் சொல்லுகிறதே யுக்தம். 2 'ஸர்வத்வாரேஷு தேஹேஸ்மிந் ப்ரகாஶ உபஜாயதே| ஜ்ஞாநம் யதா ததா வித்யாத் விவ்ருத்தம் ஸத்த்வமித்யுத||' என்கிற ஶ்லோகத்தில் 'ப்ரகாஶ, ஜ்ஞாநம்' என்னும் பதங்கள் வெளி இந்த்ரியங்களின் வ்யாபாரத்தையும் மனதின் வ்யாபாரத்தையும் சொல்லுகிறதென்று ஸ்தாபித்திருப்பது முடியாது. இவைகளை மாற்றிச் சொல்லி இருந்தபோதிலும் விரோதமில்லையாகையினாலும், மேலே சொல்லப்போகிற ரஜோகுணத்தினாலுண்டாகிய ஜ்ஞானம், தமோகுணத்தினாலுண்டாகிய ஜ்ஞானம், இவைகளை விலக்குவதற்காக 'ப்ரகாஶ' என்னும் பதம் ப்ரயோகிக்கப்பட்டிருக்கிறது என்பது உசிதமாகையினாலும். ரஜோகுணத்தின் கார்யத்தைச் சொல்லுகிற ஶ்லோகத்தில் 'லோபப்ரவ்ருத்தி:' என்று பாடமாக்கிக்கொண்டு லோபத்தினால் உண்டாகிய ப்ரவ்ருத்தி என்று வ்யாக்யானம் செய்திருப்பது உசிதமல்ல, அப்படி அத்யயனம் செய்யப்படவில்லையாகையினாலும் 3 'அப்ரகாஶோऽப்ரவ்ருத்திஶ்ச' என்று தமோகுணத்தின் கார்யத்தைச் சொல்லுகிற ஶ்லோகத்தில் ஸத்வகுணத்தின் கார்யமாகிற ப்ரகாசத்தை மறுத்திருப்பதைப்போல ரஜோகுணத்தின் கார்யமாகிய ப்ரவ்ருத்தியும் இல்லையென்று தனித்துச் சொல்லி இருப்பதினால். இந்த ஶ்லோகத்தில் அதற்கெதிர் நடையாக ப்ரவ்ருத்தியைச் சொல்லவேண்டிய தவஶ்யமாகையினாலும். 4 'ஆரம்ப: கர்மணாம்' என்பதோ வெளில்கோபலீவர்த்த ந்யாயத்தினால் சொல்லப்படுகிறதென்றறிய வேண்டியது. பதினைந்தாவது அத்யாயத்திலும் 5 'ப்ரபத்யே யத: ப்ரவ்ருத்தி:' என்கிற பாடம் ப்ரஸித்தமல்ல. 6 'மமைவாம்ஶோ ஜீவலோகே ஜீவபூத: ஸநாதந:' என்கிற இடத்தில் பத்த ஜீவர்களைத் தவிர வேறாகிய பகவானுடைய ஒருபாகம் 'ஜீவ' என்னும் பதத்திற் கர்த்தம் என்று வ்யாக்

1 பகவத்கீதை-13–26 2 பகவத்கீதை - 14-11
3 பகவத்கீதை - 14-13 4 பகவத்கீதை-14-12
5 பகவத்கீதை-15-4 ஶ்லோகத்தின் பாடாந்தரம். 6 பகவத்கீதை-15-7

யானம் செய்யப்பட்டது. அதில் அர்த்தத்திற்கு ஒரு விரோதமில்லை. அப்படி இருந்தபோதிலும் விபூதிகளைச் சொல்லிக்கொண்டு வரும் ஸந்தர்ப்பத்தின் நடுவில் படிக்கப்பட்டிருப்பதினாலும் அந்தர்யாமியைப் பற்றி 1 'ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸந்நிவிஷ்ட:' என்று மேலே சொல்லப்போகிறபடியினாலும் பரமாத்மாவின் ஒரு பாகத்தில் 'ஜீவ' என்னும் பதத்திற்கதிகப்ரஸித்தி இல்லாமையினாலும், மனு முதலிய மற்ற ஶாஸ்த்ரங்களில் ப்ரஸித்தமாக இருப்பதைவிட 2 'ஜீவபூதாம் மஹாபாஹோ' என்றிந்தச் ஶாஸ்த்ரத்திலேயே சொல்லி இருப்பது பலமுள்ளதாக ஒப்புக்கொள்ள வேண்டியதாகையினாலும், 3 'விஷயாநுபஸேவதே' என்கிற இடத்தில் அநிஷ்டமான விஷயங்களை அனுபவிப்பதிலிருந்தும் இரண்டுமில்லாத விஷயங்களை அனுபவிப்பதிலிருந்தும் சுருக்கி அர்த்தம் சொல்லவேண்டிய கஷ்டம் இருப்பதினாலும் ஶரீரத்தை விட்டு வெளிக்கிளம்புவது முதலியவைகளைச் சொல்லியிருப்பதினாலும், ஹ்ருதயத்திலிருப்பதும் ஜீவாத்மாவினிடத்திலும் ஸம்பவிக்கலாமாகையினாலும், இந்த்ரியங்களை அதிஷ்டானம் செய்கிறான் என்பதும் 'ஶரீரம்' என்னும் பதம் முதலியதும் அந்த இந்த்ரியங்களையும் ஶரீரங்களையும் நியமிக்கிறவனாகிய பத்த ஜீவன்களிடத்திலும் பொருந்துமாகையினாலும், 4 'ஶ்ருத்வாவஸ்தம்' என்கிற இடத்தில் இருக்கிற 'ஶ்ருத' என்னும் பதமும் அநேக அர்த்தங்களைச் சொல்லக் கூடியதாகையினால் இந்த ஸந்தர்ப்பத்திற்குசிதமான அர்த்தத்தை அதற்குச் சொல்லலாமாகையினாலும், நீங்கள் சொல்லிய இரண்டாவது அர்த்தமே பாஷ்யகாரருக்கு இஷ்டமானதும் நியாயமானதும் என்று நினைக்கிறோம். 1 'வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்ய:' என்றிவை முதலிய இடத்தில் 'வேத', 'வேதாந்த' என்னும் பதங்களைப் பற்றிச் சொல்ல வேண்டியதெல்லாம் அங்கே சொல்லப்பட்டது. 5 'கூடஸ்தோऽக்ஷர:' என்பது ஜீவாத்மாவாகிய மேலான ப்ரக்ருதியை விட வேறுபட்டதாகிய முக்தாத்மாவைச் சொல்லுகிறது என்பது மிகவும் உசிதமானது. பதினைந்தவது அத்யாயத்தில் மற்றொரு விதமாக அர்ஜுனனுடைய துக்கத்தைப் போக்குவதற்காகத் தேவ ப்ரக்ருதிகளையுடையவர்களின் ஸ்வரூபமும் அவர்களுக்கு விஶேஷமான மங்களங்கள்

---

1 பகவத்கீதை-15-15 2 பகவத்கீதை-7-5
3 பகவத்கீதை-15-9 4 பகவத்கீதை-15-11
5 பகவத்கீதை-15-16

ஸமீபத்திலிருக்கிறபடியினால் அர்ஜுநன் தேவ ப்ரக்ருதியை யுடையவனென்பதும் அஸுர ப்ரக்ருதிகளையுடையவர்களின் ஸ்வரூபமும் எல்லாவித அநிஷ்டங்களாலும் அதினால் உண்டாகிறதென்பதும் சொல்லப்பட்டது என்றர்த்தம் சொல்லப்பட்டது. அது உசிதமல்ல, இந்தச் ஶாஸ்த்ரத்தின் ஆரம்பத்தில் அர்ஜுநனுக்குத் தன்னுடைய ப்ரக்ருதியைப் பற்றி நிஶ்சயமில்லாமையினால் துக்கம் உண்டானதென்பதற்கு ப்ரஸ்தாவமே இல்லாமையினால் இவ்விடத்தில் அதற்கு ப்ரஸ்தாவம் வந்தபொழுது அதைப் போக்கடிக்க வேண்டியது உசிதமாகையினாலும். ஆகையினால் 1 'தஸ்மாச்சாஸ்த்ரம் ப்ரமாணம் தே கார்யாகார்ய வ்யவஸ்திதௌ' என்று நிகமனம் செய்திருப்பதை அநுஸரித்து பகவானாகிய ஆளவந்தாரருளிச்செய்தபடியே ஶாஸ்த்ரங்களுக்கு வசப்பட்டிருக்க வேண்டுமென்பதே அந்த அத்யாயத்திற்கு முக்கியமான அர்த்தம். பதினேழாவது அத்யாயத்தில் ஶ்ரத்தை மூன்றுவித மென்பது ஶாஸ்த்ரங்களில் சொல்லிய கர்மங்களைத் தவிர மற்றவைகளைப்பற்றியதென்பது உசிதமல்ல, மேலே 2 'அஶாஸ்த்ரவிஹிதம்' என்று அதைத் தனித்துச் சொல்லியிருப்பதினால். அவ்விடத்திலும் ஶ்ரத்தை மூன்றுவிதம் என்று சேர்த்துக்கொள்ளவேண்டுமென்பது முடியாது, அவ்விடத்தில் அதைச் சொல்லாமையினாலும், அப்படிக் கல்பனை செய்வதற்குக்காரணமில்லாமையினாலும். 3 'ஓம் தத் ஸதிதி நிர்தேஶ:' என்கிற இடத்தில் மோக்ஷத்தி லாசையுடையவர்களுக்கு யஜ்ஞம் முதலிய கர்மங்களில் அவைகளுக்கு அதிக வீர்யம் உண்டாவதற்காக ஒருவிதமான அங்கம் உபதேசிக்கப்படுகிறது என்பது உசிதமல்ல, மோக்ஷத்திலாசை இல்லாதவர்களுக்கும் அவைகளைச் சொல்லுவதில் ஒருவித விரோதமில்லாமையினாலும், மோக்ஷத்திலாசையுடையவர்களுக்கென்று விஶேஷித்துச் சொல்லுவதற்குக்காரணமில்லாமையினாலும். ஆகையினால் 4 'லக்ஷணம் ஶாஸ்த்ரஸித்தஸ்ய த்ரிதா' என்று சொல்லியிருப்பதே உசிதம். பதினெட்டாவது அத்யாயத்தில் த்யாகத்தின் ஸ்வரூபம்முதலியவைகளைப் பற்றி நிரூபித்திருப்பதில் அதிக விரோதமில்லை. சரம ஶ்லோகத்தில் சொல்லவேண்டியதெல்லாம் அவ்விடத்தில் நம்மால் நன்றாய் நிரூபிக்கப்பட்டது. இப்படியே மற்றும் முன்னிருந்தவைகளும் இனி உண்டாகப்போகிறவைகளுமாகிய ஸ்ரீமத் கீதையின் பாஷ்யங்களினால் உண்

1 பகவத்கீதை-16-24 2 பகவத்கீதை-17-5
3 பகவத்கீதை-17-23 4 கீதார்த்த ஸங்க்ரஹம்

**இதம் தே நாதபஸ்காய நாபக்தாய கதாசந |**
**நசாஶுஶ்ரூஷவே வாச்யம் ந ச மாம் யோऽப்யஸூயதி ||67**

ப-ரை| **இதம்** - இந்தச் ஶாஸ்த்ரம், **தே** – உன்னால், **அதபஸ்காய** - தபஸ்ஸு செய்யாதவனுக்கும், **நவாச்யம்** - சொல்லத்தக்கதல்ல, **அபக்தாய** - (உன்னிடத்திலும் என்னிடத்திலும்) பக்தி யில்லாதவனுக்கும், **கதாசந** - ஒரு பொழுதும், ந - (சொல்லத்தக்கது) அல்ல, **அஶுஶ்ரூஷவே** - கேழ்க்கவேண்டுமென்கிற ஆசை இல்லாதவனுக்கும், **ந** - சொல்லத்தக்கது அல்ல, **யஃ** - எவன், **மாம்** - என்னைக் குறித்து, **அப்யஸூயதி** - பொறுமைப்படுகிறானோ (அவனுக்கும்), **ந** - (சொல்லத்தக்கது) அல்ல. 67

பா] மிகவும் ரஹஸ்யமாகிய இந்தச் ஶாஸ்த்ரம் உனக்கு என்னால்

---

டாகிய அஜ்ஞானம் பகவானாகிய ஆளவந்தார், பாஷ்யகாரர் இவர்களினுடைய மதத்தை அனுஸரித்து நிராகரிக்கத்தக்கது. அல்பமான தவறுதல்களிலும் அதிக தூரம் வ்யத்யாஸமில்லாத அர்த்தங்களிலும் உதாஸீநனாக இருந்துவிடவேண்டியது. இனி அதிகமாக விவரிப்பதினால் ப்ரயோஜனமில்லையென்று இதுவரையிலோடு நிறுத்திக்கொண்டோம். இவ்விடத்தில் பிசாச, ரந்தி, தேவகுப்த, சங்கர, யாதவப்ரகாச, பாஸ்கர, நாராயணார்ய, யஜ்ஞஸ்வாமி, முதலிய தங்கள் தங்கள் மதத்தை அடைந்தவர்களாகிய அனேகம் பாஷ்யகாரர்களினாலும் நம்முடைய ஸித்தாந்தத்திற்கு ஆசார்யர்களாகிய பகவானாகிய ஆளவந்தார், பாஷ்யகாரர் முதலியவர்களினாலும் விவாதமில்லாமல் ஒப்புக்கொள்ளப்பட்ட இந்தக் கீதா ஶாஸ்த்ரத்தின் ஸாரமான அர்த்தமாவது—பகவானே பரதத்துவம், வேறொரு ரக்ஷகர்களுமில்லாத மற்றவர்களினால் அவரவர்களின் அதிகாரத்திற்குத் தக்கபடி அவன் ஒருவனை ஆஶ்ரயிப்பதே மேலான தர்மம்—என்பது. 66

தா] இப்படித் தன்னுடைய உபதேசத்தினால் உறுதியாக ஸ்தாபிக்கப்பட்ட தத்துவம், உபாயம், இவைகளைப்பற்றிய ஜ்ஞானத்தையுடைய அர்ஜுநனுக்கு மேல் செய்யவேண்டிய கார்யத்தில் உபதேசம் செய்கிற வ்யாஜத்தினால் ஸம்ப்ரதாயத்தின் விதி ஏற்படுவதற்காக இந்தச் ஶாஸ்த்ரத்தில் அதிகாரமில்லாதவர்களைச் சொல்லுகிறார்—'இந்த ஶ்லோகத்தினால்.'இதம் (இது)' என்றுபொதுவாகச்சொல்லி யிருப்பதை முன்பின் க்ரந்தங்களிலிருக்கிற பதங்களைக் கொண்டு விவரிக்கிறார்—'மிகவும் ரஹஸ்யமாகிய' என்றாரம்பித்து. இவ்விடத்தில் 'உனக்கு'

சொல்லப்பட்டது. இது தபஸ்ஸு செய்யாதவனுக்கு உன்னால் சொல்லத்தக்கதல்ல. உபதேசம் செய்கிற உன்னிடத்திலும் என்னிடத்திலும் பக்தி இல்லாதவனுக்கு ஒருகாலத்திலும் சொல்லத்தக்கதல்ல. அதாவது அவன் தபஸ்ஸு செய்தவனாயிருந்தபோதிலும் பக்தி யில்லாதவனுக்குச் சொல்லக் கூடாதென்பது அர்த்தம். பக்தியை யுடையவனாயிருந்த

---

என்னும் பதம் 1 'இதி தே ஜ்ஞாநமாக்யாதம்' என்கிற ஶ்லோகத்திலிருந்து சேர்த்துக்கொள்ளப்பட்ட 'தே' என்னும் பதத்தின் அர்த்தம் ஶ்லோகத்திலிருக்கிற 'தே' என்னும் பதத்திற்கு 'உன்னால்' என்று வ்யாக்யானம் செய்யப்பட்டது. 'அதபஸ்காய' என்பதினால் தபஸ்ஸு செய்ய ஆரம்பித்திருந்த போதிலும் இதைக் கேட்பதற்கு அதிகாரியல்ல என்பது சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்— 'தபஸ்ஸு செய்யாதவனுக்கு' என்று. 2 'எவனுக்குத் தேவதை யினிடத்தில் மிகுந்த பக்தியோ, தேவதையினிடத்தில் எப்படியோ அப்படியே ஆசார்யனிடத்திலும் பக்தியோ' என்றர்த்தமுள்ள ஶ்ருதி வாக்யத்தை அனுஸரித்துச் சொல்லுகிறார்—'உபதேசம் செய்கிற உன்னிடத்திலும் என்னிடத்திலும்' என்று. பக்தி இல்லாதவன் என்பதில் வ்யத்யாஸமில்லாமையினாலும் சுருக்கிச் சொல்லுவதற்குக் காரணமில்லாமையினாலும் இப்படி வ்யாக்யானம் செய்யப்பட்டது. 3 'ஶுஶ்ரூஷுர் லபதே க்ஷிப்ரம் ஸம்பத்திம்' என்று மேலே சொல்லப்போகிறபடி பக்தியில் அதிக ப்ரீதி இருக்கிறதென்றேற்படுகிறபடியினால், 'அஶுஶ்ரூஷவே' என்னும் பதத்தினால் தபஸ்ஸு செவ்வையாய்ச் செய்யப்பட்டிருந்தபோதிலும் என்பது சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்—'தபஸ்ஸு செய்தவனாயிருந்தபோதிலும் பக்தி இல்லாதவனுக்கு' என்று. இவைகள் தனித்தனியே பரிஹரிக்கத்தக்கவைகள் என்று தெரிவிப்பதற்காக ஒவ்வொரு இடத்திலும் 'ந' என்பதை திருப்பி ப்ரயோகித்திருக்கிறது. கீழ்ச்சொல்லியவைகளைவிட மேலே சொல்லப்படுகிறவைகள் அதிக க்ரூரமானவைகள் என்கிற தாத்பர்யத்தினால் இந்த ஶ்லோகத்தில் க்ரமமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன என்று சொல்லுகிறார்—'பக்தியையுடையவனாயிருந்தபோதிலும்' என்றாரம்பித்து. இவ்விடத்திலும் சுருக்கிச் சொல்லுவதற்குக் காரணமில்லாமையினால் முன்போலவே அர்த்தம் சொல்லவேண்டியது. 4 'அதை ஶ்ராத்

---

1 பகவத்கீதை-18-63

2 ஶ்வேதாஶ்வதரம்-6-23

3 பகவத்கீதை-18-68. 4 கடோபநிஷத்-1-1-14

போதிலும் கேழ்க்கவேண்டு மென்கிற ஶ்ரத்தை இல்லாதவனுக்குச் சொல்லத்தக்கதல்ல. என்னுடைய ஸ்வரூபம், என்னுடைய ஐஶ்வர்யம், என்னுடைய குணங்கள் சொல்லப்பட்டிருக்கும் பொழுது எவன் தோஷத்தை ஆரோபிக்கிறனோ அவனுக்கும் சொல்லத்தக்கதல்ல. முன் போல நான்காம் வேற்றுமையாய்ச் சொல்லாமல் இதை மாத்திரம் தனித்

தையுடையவனாகிய எனக்குச் சொல்லு' என்றர்த்தமுள்ள ஶ்ருதி வாக்யத்தினால் ஶ்ரத்தை முக்கியமென்பது அறியப்பட்டது. 'மாம் அப்யஸூயதி' என்பதற்கு என்னிடத்தில் பொறாமைப்படுகிறான் என்றர்த்தம். 1 'க்ருதத்ருஹேர்ஷ்யாஸூயார்தாநாம் யம் ப்ரதி கோப:' என்கிற ஸூத்ரத்தினால் கர்ம(செயப்படுபொருள்) என்பது ஏற்பட்டிருப்பதினால் 'மாம்' என்கிற இடத்தில் இரண்டாம் வேற்றுமையாகச் சொல்லி இருக்கிறது. என்னைக்குறித்துப் பொறாமைப் படுகிறான் என்று சொல்லப்பட்டதாகிறது. விஷயத்தைக்கொண்டும் லக்ஷணத்தினாலும் பொறாமையை விவரிக்கிறார்—'என்னுடைய ஸ்வரூபம்' என்றாரம்பித்து. 'மாம்' என்று இவ்விடத்தில் எல்லா ஸ்வபாவங்களோடு கூடிய தன்னைச் சொல்லி இருக்கிறது என்று தாத்பர்யம். கீழே சொல்லி இருக்கிறதை அநுஸரித்து 'நசாப்யஸூயவே' என்று சொல்லவேண்டியிருக்க ஆரம்பித்திருக்கும் மாதிரியை விட்டு தனித்தொரு வாக்யமாகச் சொல்லி இருக்கிறது எந்த அபிப்ராயத்தினால்? என்கிற கேழ்வைக்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'முன்போல' என்றாரம்பித்து. 2 'அஸூயகாயாந்ருஜவே,' 3'அஸூயகாய மாம் மாதா:' என்றிவை முதலிய வசனங்களினால் பொதுவாகப்பொறாமையுடையவனுக்கு உபதேசம் செய்வது மறுக்கப்பட்டிருக்கிறது. பகவானிடத்தில் பொறாமையுடையவனுக்கோ வெனில்உபதேசம் செய்வது மிகவும் பரிஹரிக்கத்தக்கது என்று தாத்பர்யம். 'நவாவாச்யம்' என்பதினால் அதிகாரமில்லாதவர்களுக்கு உபதேசம் செய்தால் தோஷம் உண்டென்று சொல்லப்பட்டது. இவ்விடத்தில் 'விஷயாவிவேந தவாவிவேநவா' என்று மற்றவைகளுக்குச் சிற்சில இடங்களில் விக

1 அஷ்டாத்யாயீ-1-4-37. க்ருத், த்ருஹ, ஈர்ஷ்யா, அஸூயா, இந்தப் பதங்களுக்கு எவனைக் குறித்து கோபம் முதலியவைகள் உண்டாகிறதோ அவன் கர்ம.

2 அஸூயையோடு கூடினவனையும் கபடத்தையுடையவனையுமிருப்பவனுக்கு (வித்யையைச் சொல்லாதே).

3 பொறாமைக்காரனுக்கு என்னைக் கொடுக்காதே (இது வித்யையின் வார்த்தை.)

துச்சொல்லி இருப்பது இதுமிகவும் பரிஹரிக்கத்தக்கது என்று தெரிவிப்பதற்காக. 67

𑌯 𑌇𑌮𑌂 𑌪𑌰𑌮𑌂 𑌗𑍁𑌹𑍍𑌯𑌂 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑍇𑌷𑍍𑌵𑌭𑌿𑌧𑌾𑌸𑍍𑌯𑌤𑌿 ।
𑌭𑌕𑍍𑌤𑌿𑌂 𑌮𑌯𑌿 𑌪𑌰𑌾𑌂 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌮𑌾𑌮𑍇𑌵𑍈𑌷𑍍𑌯𑌤𑍍𑌯𑌸𑌂𑌶𑌯𑌃 ॥ 68

ப — ரை] **𑌯𑌃** - எவன், **𑌪𑌰𑌮𑌂** - மேலான, **𑌗𑍁𑌹𑍍𑌯𑌂** - ரஹஸ்யமாகிய, **𑌇𑌮𑌂** - இந்தச் ஶாஸ்த்ரத்தை, **𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑍇𑌷𑍁** - என்னுடைய பக்தர்களிடங்களில், **𑌅𑌭𑌿𑌧𑌾𑌸𑍍𑌯𑌤𑌿** - சொல்லப்போகிறானோ (அவன்), **𑌮𑌯𑌿** - என்னிடத்தில், **𑌪𑌰𑌾𑌂** - மேலான, **𑌭𑌕𑍍𑌤𑌿𑌂** - பக்தியை, **𑌕𑍃𑌤𑍍𑌵𑌾** - செய்து, **𑌮𑌾𑌮𑍇𑌵** - என்னையே, **𑌏𑌷𑍍𑌯𑌤𑌿** - அடையப்போகிறான், **𑌅𑌸𑌂𑌶𑌯𑌃** - ஸந்தேகமில்லை. 68

பா] மிகவும் ரஹஸ்யமாகிய இந்தச் ஶாஸ்த்ரத்தை என்னுடைய பக்தர்களிடங்களில் எவன் வ்யாக்யானம் செய்யப்போகிறானோ—அதாவது

---

*ல்பங்கள் சொல்லப்பட்டது, பக்தி முதலியவைகளுக்கோ வெனில் அப்படிக்கில்லை. ஆகையினால் பக்தி முதலிய குணங்கள் இல்லாதவன் புத்திமானாக இருந்தபோதிலும் தப்ஸஸு செய்தவனாக இருந்தபோதிலும் அவனுக்குச் சொல்லக்கூடாது. எல்லாக்குணங்களும் சேர்ந்திருந்த போதிலும் பகவானிடத்தில் பொறாமையுடையவனுக்குச்சொல்லக்கூடாது என்று சொல்லப்பட்டதாகிறது.* 67

தா] *பிறகு சில அதிகாரிகளிடங்களில் இது அவஶ்யம் சொல்லத்தக்கது என்பதும், அப்படி அவர்களிடத்தில் சொல்லுவது மோக்ஷமாகிற பலத்தை முடிவிலுடையது என்பதும் சொல்லப்படுகிறது—இந்த ஶ்லோகத்தினால். '𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑍇𑌷𑍁' என்பதினாலேயே தபஸ்ஸு செய்யாதவனாக இருக்கை முதலிய தோஷங்கள் இல்லை என்று விலக்கப்பட்டன. பரிசுத்தமான மனதையுடைய அவர்களுக்குத் தபஸ்ஸு செய்யாமை முதலிய தோஷங்கள் ஸம்பவிக்காதாகையினால். 1 '𑌶𑍍𑌰𑌾𑌵𑌯𑍇𑌚𑍍𑌚𑌤𑍁𑌰𑍋 𑌵𑌰𑍍𑌣𑌾𑌨𑍍' என்கிற வசனத்தினால் எல்லாருக்கும் சொல்லத்தக்கது. அவர்களுக்குள்ளும் என்னிடத்தில் பக்தியுடையவர்களே இதைக்கேழ்பதற்கு அதிகாரிகள் என்று சொல்லப்பட்டதாகிறது. இவ்விடத்தில் '𑌅𑌭𑌿𑌧𑌾𑌸𑍍𑌯𑌤𑌿' என்பது அர்த்தத்தை உபதேசம் செய்தல் வரையிலும் சொல்லுகிறது என்று சொல்லுகிறார்*—'வ்யாக்யானம் செய்யப்போகிறானோ'

---

1 *பாரதம், சாந்தி பர்வம், மோக்ஷதர்மம்-335 - 48. சதுரோவர்ணான் - நான்கு வர்ணத்தார்களையும், ஶ்ராவயேத் - கேழ்ப்பிக்க வேண்டும்.*

அர்த்தத்துடன் சொல்லப்போகிறேனோ அவன் என்னிடத்தில் மேலான பக்தியைச் செய்து என்னையே அடையப்போகிறான். இந்த விஷயத்தில் ஸந்தேஹமில்லை. 68

ந ச தஸ்மாந் மநுஷ்யேஷு கஶ்சிந் மே ப்ரியக்ருத்தம: |
பவிதா ந ச மே தஸ்மாத் அந்ய: ப்ரியதரோ புவி || 69

ப-ரை.] **மநுஷ்யேஷு** - மனிதர்களுக்குள், **தஸ்மாத்**- அவனைவிட வேறாகிய, **கஶ்சித்** - ஒருவரும், **மே** - எனக்கு, **ப்ரியக்ருத்தம:**- அதிக ப்ரியமான கார்யத்தைச் செய்தவன், **ந ச** - இதுவரையிலும் உண்டானதுமில்லை, **புவி** - இந்தப்பூமியில், **தஸ்மாத்** - அவனைவிட, **அந்ய:**- வேறொருவன், **மே** - எனக்கு, **ப்ரியதர:**-மிகவும் ப்ரியனானவன், **ந ச பவிதா** - இனி உண்டாகப்போகிறதுமில்லை. 69

பா] எல்லா மனுஷ்யர்களுக்குள்ளும் இதற்குமுன் அவனைவிட வேறே

---

*என்று. 'ய:' எவன் என்று முன்னே சொல்லி இருப்பதினால் அவன் என்பது சேர்த்துக்கொள்ளப்பட்டது. யோக்யர்களுக்கு உபதேசம் செய்வதும் கர்மயோகத்தின் வரிசையிலாவது பக்தியோகத்தின் ஆரம்பமாகிய பூந்தோட்டம் வைப்பது முதலிய கர்மங்களின் வரிசையிலாவது சேர்ந்துகொண்டு பரபக்தியை உண்டாக்குகிறது என்பது 'பக்திம் மயி பராம் க்ருத்வா' என்பதினால் சொல்லப்படுகிறது. மாமேவ (என்னையே)' என்று சொல்லி இருப்பதினால் என்னுடைய கீதையை அர்த்தத்துடன் உபதேசம் செய்தவனுக்கு அல்பப் பலன்களில் ஆசையை நான் உண்டாக்குகிறதில்லை என்பது அபிப்ராயத்தில் கொள்ளப்பட்டது. ஏற்பட்ட அர்த்தத்தைச் சொல்லுகிறார் — இந்த விஷயத்தில் ஸந்தேஹமில்லை என்று. அன்றிக்கே 'அஸம்ஶய:' என்று அவனுக்கு ஸந்தேஹமுண்டாகிறதில்லை என்று சொல்லப்படுகிறதாகவுமாம்.* 68

தா] *தன்னுடைய ஶாஸ்த்ரத்தை அர்த்தத்துடன் உபதேசம் செய்வது தன்னை அடைவதற்குக் காரணமென்பதற்கு வழி சொல்லப்படுகிறது — இந்த ஶ்லோகத்தினால். மிகவும் ப்ரியத்தைச் செய்தவனாக இருக்கை, மிகவும் ப்ரியனாக இருக்கை, இவை இரண்டும் ஒன்று காரணமாகவும் மற்றொன்று கார்யமாகவும் இருந்து கொண்டு 'பவிதா' என்கிற ஒரு க்ரியையுடன் அந்வயம் ஸம்பவிக்க கூடுமான போதிலும் மூன்று காலங்களிலும் இப்படிப்பட்டவன் இல்லை என்று மறுப்பதில் அதிக கௌரவம் ஏற்படுகிறபடியினால் அதிலேயே தாத்பர்யம் என்றேற்படுவதற்காக 'மனுஷ்யர்களுக்குள்ளும் இதற்குமுன்' என்*

ரு மனுஷ்யன் எனக்கு மிகவும் ப்ரியமான கார்யத்தைச் செய்தவன் இது வரையிலுமுண்டானதுமில்லை, இதற்கு மேலும் உண்டாகப்போகிற தில்லை. உபதேசம் செய்யத்தகாதவர்களை முதலில் சொன்னது யோக்யர்களுக்கு உபதேசம் செய்யாமலிருப்பதைப் பார்க்கிலும் அயோக்கியர்களுக்குச் சொல்லுவது மிகவும் அநிஷ்டமாகையினால். 69

𑌅𑌧𑍍𑌯𑍇𑌷𑍍𑌯𑌤𑍇 𑌚 𑌯 𑌇𑌮𑌂 𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌂 𑌸𑌂𑌵𑌾𑌦𑌮𑌾𑌵𑌯𑍋𑌃 |
𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑌜𑍍𑌞𑍇𑌨 𑌤𑍇𑌨𑌾𑌹𑌮𑌿𑌷𑍍𑌟𑌃 𑌸𑍍𑌯𑌾𑌮𑌿𑌤𑌿 𑌮𑍇 𑌮𑌤𑌿𑌃 ‖ 70

ப - ரை] 𑌯𑌃 - எவன், 𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌂 - தர்மத்தோடு சேர்ந்ததாகிய, 𑌇𑌮𑌂 - இந்த, 𑌆𑌵𑌯𑍋𑌃 - நம்முடைய, 𑌸𑌂𑌵𑌾𑌦𑌂 - ஒருவர்க்கொருவர் சொல்லிக்கொண்ட வார்த்தையை, 𑌅𑌧𑍍𑌯𑍇𑌷𑍍𑌯𑌤𑍇 - அத்யயனம் செய்யப் போகிறானோ, 𑌤𑍇𑌨 - அவனால், 𑌅𑌹𑌂 - நான், 𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑌜𑍍𑌞𑍇𑌨 -

---

றிவை முதலியது சொல்லப்பட்டது. ஶாஸ்த்ரத்திற்கு முதலில் அதிகாரி வேண்டிய தவஶ்யம், ஆகையினால் அவனைப்பற்றியே முதலில் சொல்ல வேண்டியது, அதிகாரமில்லாதவனோ வெனில் அதினாலேயே தானாகவே விலக்கப்படுகிறான். அன்றிக்கே முக்கியமாக இருக்கிறபடியினால் அதிகாரியை முன்பு சொல்லி அதற்குப்பிறகு அதினால் விலக்கப்படுகிறவனானபடியினால் அதிகாரியில்லாதவன் சொல்லத்தக்கவன். இவ்விடத்திலோ வெனில் அதற்கு மாறாகச்சொல்லி இருப்பதற்குக்காரணமென்ன? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'உபதேசம் செய்யத்தகாதவர்களை' என்றாரம்பித்து. 'மிகவும் அநிஷ்டமாகையினால்' என்பதற்கு அது மிகவும் அநிஷ்டமென்று தெரியப்படுத்துவதற்காக என்றர்த்தம். யோக்கியர்களுக்குச் சொல்லாமலிருப்பது பகவானுக்கு அநிஷ்டம் என்பது 1 'அந்த ப்ரம்ம வித்யையை உள்ளபடியே உபதேசம் செய்யவேண்டும்' என்றர்த்தமுள்ள ஶ்ருதி வாக்யத்தில் ப்ரம்ம வித்யையை யுபதேசம் செய்வது விதிக்கப்பட்டிருக்கிறபடியினால் அந்த வாக்யத்தில் '𑌶𑍍𑌰𑌾𑌵𑌯' என்பதற்குச் சொல்ல வேண்டும் என்றர்த்தம். 2 '𑌛𑌨𑍍𑌦𑌸𑌿 𑌲𑍁𑌙𑍍 𑌲𑌙𑍍 𑌲𑌿𑌟𑌃' என்று விதிக்கப்பட்டிருப்பதினால் அப்படி அர்த்தம் சொல்லாவிடில் 'அவன் ஆசார்யனையே அடைய வேண்டும்' என்றர்த்தமுள்ள முன் வாக்யத்தோடு அந்வயிக்காதாகையினால். 69

---

1 முண்டகோபநிஷத் 1-2-13

2 அஷ்டாத்யாயீ-3-4-6. வேதத்தில் லுங், லங், லிட், இவைகள் ஒரே அர்த்தத்தைச் சொல்லுகின்றன.

ஜ்ஞான யஜ்ஞத்திஞல், இஷ்டஃ - ஆராதனம் செய்யப்பட்டவஞக, ஸ்யாம் - ஆவேன், இதி - என்று, மெ - என்னுடைய, மதிஃ - எண்ணம். 70

பா] எவன் இந்தத் தர்மத்துடன் சேர்ந்ததாகிய நம்மிருவர்களினுடைய வார்த்தையை அத்யயனம் செய்யப்போகிருஞே அவஞல் ஜ்ஞான யஜ்ஞத்திஞல் நான் ஆராதனம் செய்யப்பட்டவஞவேன் என்று என்னுடைய

தா] இப்படி இதை உபதேசம் செய்தவனுக்குப் பலம் சொல்லப்பட்டது. பிறகு இதின் ஶப்தத்தையும் அர்த்தத்தையும் ஆசார்யனிடத்திலிருந்து அத்யயனம் செய்கிறவனுக்குப் பலம் சொல்லப்படுகிறது— இது முதல் இரண்டு ஶ்லோகங்களிஞல். அன்றிக்கே மேல் ஶ்லோகத்தில் 'ஶ்ருணுயாத்' என்பது அபலார் அத்யயனம் செய்யும்பொழுது தான்கூட இருந்து கேழ்ப்பது மாத்திரம் சொல்லப்படுகிறதாகவுமாம். 'அத்யேஷ்யதெ' என்று எல்லாம் தெரிந்தவஞகிய பகவான் இனிப் பாரதம் செய்யப்போகிறதை எதிர்பார்த்துத் தன்னுடைய ஸம்வாதத்தை இனி எவன் அத்யயனம் செய்யப்போகிருஞே என்று சொல்லவில்லை. பின்னை எப்படி என்னில் பாரதத்தில் தன்னுடைய ஸம்வாதம் முன்னமேயே சேர்க்கப்பட்டிருப்பதிஞல் அதைப் பார்த்துச் சொல்லப்பட்டது. மஹாபாரதம் த்ருதராஷ்டிரன் முதலியவர்கள் உண்டாவதற்கு முன்னமேயே பகவானுடைய அனுக்ரஹத்திஞல் அடையப்பட்ட திவ்யமான கண்களையுடைய பகவானுடைய அவதாரமாகிய வ்யாஸரிஞல் செய்யப்பட்டது. ஶிஷ்யர்களுக்கு அதை ப்ரவசனம் செய்யும்படி அனுமதியும் கொடுக்கப்பட்டது அந்தச் ஶிஷ்யர்களிஞலும் 1 'நாரதொ ஶ்ராவயத்தேவாநஸிதொதேவலஃ பித்ரூந்। ஶுகோ கந்தர்வயக்ஷரக்ஷாம்ஸி ஶ்ராவயாமாஸ வைஶம்பாயநஃ॥' என்று சொல்லியிருக்கிறபடி மனுஷ்யலோகம் தவிர மற்ற லோகங்களில் ப்ரகாசம் செய்யப்பட்டது. மனுஷ்யலோகத்திலோவெனில் ஜனமேஜயர் முகமாக ப்ரகாசம் செய்யப்படப்போகிறது. அதை எதிர் பார்த்து 'அத்யயனம் செய்யப்போகிருஞே' என்று சொல்லப்பட்டது. உபநிஷத்துக்களின் ஸாரமாகையிஞல் 'அத்யயனம்' என்று சொல்லியிரு

1 பாரதம் - நாரதஃ-நாரதர், தேவாந்-தேவதைகளை, அஶ்ராவயத்-கேழ்க்கும்படி செய்தார், அதாவது தேவதைகளுக்கு உபதேசித்தார் என்றர்த்தம், அஸிதஃ— அஸிதரும், தேவலஃ-தேவலரும், பித்ரூந் - பித்ருக்களை (கேழ்க்கும்படி செய்தார்கள்), சுகஃ-சுகர், கந்தர்வயக்ஷரக்ஷாம்ஸி—கந்தர்வர்கள், யக்ஷர்கள், ராக்ஷஸர்கள், இவர்களை, ஶ்ராவயாமாஸ-கேழ்க்கும்படி செய்தார்.

எண்ணம். இந்தக் கீதா ஶாஸ்த்ரத்தில் எந்த ஜ்ஞான யஜ்ஞம் சொல்லப் படுகிறதோ, இந்தக் கீதையை அத்யயனம் செய்த மாத்திரத்திலுல் அந்த ஜ்ஞான யஜ்ஞத்திலுல் நான் ஆராதிக்கப்பட்டவனுவேன் என்றர்த்தம்.

---

க்கிறது. ஆஶ்ரமங்களை வர்ணிக்கும் ஸமயத்தில் கவிகளினுலும் 1 'அநவரதாயீதஶமவத்கீதம்' என்று சொல்லப்பட்டது. 2 'ஶ்ரேயாந் த்ரவ்யமயாத் யஜ்ஞாத் ஜ்ஞாநயஜ்ஞ: பரந்தப' என்று முதல் ஷட்கத்தில் ஒரு ஜ்ஞான யஜ்ஞம் சொல்லப்பட்டதே அது இவ்விடத் தில் சொல்லப்படுகிறதல்ல. பின்னை எதென்னில் பக்தியோகத்தைச் சொல்லிக்கொண்டு வரும் ஸந்தர்ப்பத்தில் 3 'ஜ்ஞாநயஜ்ஞேந சாப்யந்யே யஜந்தோ மாமுபாஸதே' என்று பகவானைப் பற்றிய அநுஸந்தானமாகிற எவ்வித ஜ்ஞானயஜ்ஞம்சொல்லப்பட்டதோ இந்த ஶாஸ்த்ரத்திற்கு ஸாரமாகிய அந்த ஜ்ஞான யஜ்ஞமே இவ்விடத் தில் சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினுல் சொல்லு கிருர்—'இந்தக் கீதா ஶாஸ்த்ரத்தில்' என்றாரம்பித்து. விதி, ஜபம், உபாம்சு, மானஸம், என்று சொல்லப்படுகிற யஜ்ஞங்களுக் குள் ஜ்ஞான யஜ்ஞம் மனதினுல் செய்யக்கூடியதாகையினுலே மான ஸத்தில் சேர்ந்ததாகையினுல் மிகவும் சிறந்தது. 'இந்தக் கீதையை அத்யயனம் செய்த மாத்திரத்தினுல்' என்பதின் கருத்தாவது 4 'எவன் அஶ்வமேதத்தினுல் யஜ்ஞம் செய்கிருனே, எவன் இந்த யாகத்தை இவ்விதமாய்த் தெரிந்து கொள்ளுகிருனே' என்றும், 5 'எந்தெந்த யாகத்தை அத்யயனம் செய்கிருனே அவனுல் அந்தந்த யாகத்தினுல் யஜ்ஞம் செய்யப்பட்டதாகிறது' என்றும் அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யங் கள் முதலியவைகளில் அந்தந்த யாகங்களைப்பற்றி அத்யயனம் செய் வது அந்தந்த யாகம் செய்வதற்கு ஸமமான பலத்தைக் கொடுக்கிற தாக எப்படிச் சொல்லப்படுகிறதோ, அப்படியே இவ்விடத்திலும் இந் தக் கீதையை அத்யயனம் செய்வது ஜ்ஞான யஜ்ஞத்தைச்செய்ததைப் போலவே பகவானுக்கு ப்ரீதியை உண்டாக்குகிறது என்பது. 70

---

1 அநவரதம்-எப்பொழுதும், அதீத—அத்யயனம் செய்யப்பட்ட, பகவத் கீதம்-பகவத்கீதையை உடைத்தாயிருக்கிற.

2 பகவத்கீதை-4-33 3 பகவத்கீதை-9-15

4 அஶ்வமேதம் - 2-வது ப்ரஶ்நம்

5 ஆரண்யகம் - 2—வது ப்ரஶ்நம்

𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌵𑌾𑌨𑌨𑌸𑍂𑌯𑌶𑍍𑌚 𑌶𑍃𑌣𑍁𑌯𑌾𑌦𑌪𑌿 𑌯𑍋 𑌨𑌰𑌃 । [𑌣𑌾𑌰] 71
𑌸𑍋𑌽𑌪𑌿 𑌮𑍁𑌕𑍍𑌤𑌃 𑌶𑍁𑌭𑌾𑌁𑌲𑍍𑌲𑍋𑌕𑌾𑌨𑍍 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍁𑌯𑌾𑌤𑍍𑌪𑍁𑌣𑍍𑌯𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌮𑍍

ப-ரை] 𑌯𑌃 - எந்த, 𑌨𑌰𑌃 - மனிதன், 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌵𑌾𑌨𑍍 - ஶ்ரத்தை யுடையவனுயும், 𑌅𑌨𑌸𑍂𑌯𑌶𑍍𑌚 - பொறாமை இல்லாதவனுகவும், 𑌶𑍃𑌣𑍁𑌯𑌾𑌦𑌪𑌿 - கேழ்ப்பானே, 𑌸𑍋𑌽𑌪𑌿 - அவனும், 𑌮𑍁𑌕𑍍𑌤𑌃 - (பாபங்களினல்) விடப்பட்டவனய், 𑌪𑍁𑌣𑍍𑌯𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌮𑍍 - புண்ய மான கர்மங்களைச்செய்து கொண்டிருக்கிறவர்களினுடைய, 𑌶𑍁𑌭𑌾𑌨𑍍 - பரிசுத்தங்களான, 𑌲𑍋𑌕𑌾𑌨𑍍 - கூட்டங்களை, 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍁𑌯𑌾𑌤𑍍 - அடை வான். 71

பா] ஶ்ரத்தையுடையவனுயும் பொறாமையில்லாதவனுயு மிருக்கிற எந்த மனுஷ்யன் இதைக்கேழ்ப்பானே, அந்தக் கேட்டது மாத்திரத்தினல் அவ னும் பக்தி செய்வதற்குத் தடங்கலான பாபங்களிலிருந்து விடப்பட்டவ

தா] '𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌵𑌾𑌨𑌨𑌸𑍂𑌯𑌶𑍍𑌚' என்கிறஇடத்திலிருக்கிற 'ச' என்பதி னல் இவ்விடத்தில் சொல்லப்படாதவைகளும் முன்பு சொல்லப்பட்ட வைகளாயு மிருக்கிற நமஸ்காரம் செய்தல், ப்ரஶ்னம் பண்ணுதல், கைங்கர்யங்களைச் செய்தல், முதலியவைகளும் சேர்த்துக்கொள்ளப் படுகின்றன. '𑌶𑍃𑌣𑍁𑌯𑌾𑌤𑍍 (கேழ்ப்பானே)' என்பதினல் ஆசார் யனிடத்திலிருந்து என்பதேற்படுகிறது. ஶ்ருதியிலும் 1 'அந்த ப்ரம் மத்தை அறிவதற்காக அவன் ஆசார்யனையே அடையவேண்டும்' என் றும், 2 'ஆசார்யனிடத்திலிருந்து அறியப்பட்ட வித்யையேபலத்தைக் கொடுக்கக்கூடிய தன்மையை அடையும்' என்று மர்த்தமுள்ள வாக்ய ங்கள் சொல்லப்படுகின்றனவல்லவா. இத்தால், தானே புஸ்தகங்களைப் பார்ப்பது,முறைதப்பி மற்றவர்களிடத்திலிருந்து அறிவது, இவைகள் விலக்கப்படுகின்றன. 'அவனும்' என்பதினல் அவனுக்குக் கொஞ்சம் தாமதமுண்டென்று தெரிவிக்கப்படுகிறது. ஆகையினல் 'பக்தி செய்யத் தடங்கலாகிய' என்று சொல்லப்பட்டது. அப்படிச்சொல் லாவிடில் பக்தியோகம் முதலியவைகளை விதித்திருப்பது வ்யர்த்த மாக வேண்டிவரும் என்று தாத்பர்யம். அர்த்த ஜ்ஞானம் முதலிய வைகளை உடையவனுக்கு மோக்ஷம் உண்டென்பதைப்பற்றிக் கேழ் க்கவே வேண்டியதில்லை என்பது '𑌸𑍋𑌽𑌪𑌿 (அவனும்)' என்பதினல் தெரிவிக்கப்பட்டது. இதை உபதேசம் செய்வது, அத்யயனம் செய்வ

1 முண்டகோபநிஷத்-1-2-12 2 சாந்தோக்யம்-4-9-3

ஞய் என்னுடைய பக்தர்களின் கூட்டங்களை அடைவான். 71

கச்சிதேதச்ச்ருதம் பார்த்த த்வயைகாக்ரேண சேதஸா ।
கச்சிதஜ்ஞாநஸம்மோஹ: ப்ரணஷ்டஸ்தே தநஞ்ஜய ॥ 72

ப — ரை] பார்த்த - ஓ குந்தியின் பிள்ளையாகிய, தநஞ்ஜய — அர்ஜுந, த்வயா - உன்னால், ஏகாக்ரேண - ஒரே விதமான ஊற்றத்துடன் கூடிய, சேதஸா - மனதினால், ஏதத் — இது, ச்ருதம் கச்சித் — கேழ்க்கப்பட்டதா, தே - உன்னுடைய, அஜ்ஞாநஸம்மோஹ: - அஜ்ஞானத்தினால் உண்டாகிய மயக்கம், ப்ரணஷ்ட: கச்சித் - நீங்கிற்று

பா] என்னால் சொல்லப்பட்ட இது, ஓ! அர்ஜுந, ஸாவதானமாகிய மன

---

*து, இவைகள் மோக்ஷத்தையே பலமாகவுடையவைகள் என்று முன்னமேயே சொல்லப்பட்டபடியினாலே அத்துடன் சேர்த்து சொல்லியிருப்பதினால் முதலில் சொல்லியதை அனுஸரித்தே பின்பும் சொல்லியிருக்கவேண்டும் என்கிற ந்யாயத்தினால் கேழ்ப்பதற்கும் அப்படிப்பட்ட பலம் உண்டென்றே பகவானுடைய அபிப்ராயத்தில் கொள்ளப்பட்டது என்றேற்புக்கொள்ளுவது உசிதம். நரகங்களுக்கு ஸமானமாகிய ஸ்வர்க்கம் முதலியவைகளை அடைவது பகவானுக்கிஷ்டமானதல்ல. ஆகையினால் 'என்னுடைய பக்தர்களின் கூட்டங்களை' என்று சொல்லப்பட்டது. இவ்விடத்தில் இந்தக் கீதையை அத்யயனம் செய்வது, கேழ்ப்பது, முதலியவைகளினால் ப்ரீதியையடைந்த பகவான் தன்னுடைய பக்தர்களிடத்தில் சேரும்படிச் செய்கிறான். பகவானுடைய பக்தர்களை யடைவது அவர்களினால் யோகத்தை உபதேசம் செய்யப்பெற்று அதின் வழியாக மோக்ஷத்திற்குக் காரணமாகும் என்று தாத்பர்யம்.* 71

தா] *பிறகு அர்ஜுநனுடைய அபிப்ராயத்தைத் தெரிந்துகொண்டவனுயிருந்தபோதிலும் பகவான் அவனிடத்தில் ப்ரீதியினாலும் அவன் இதை மறந்துபோகாமலுமிருப்பதற்காகத் தான் உபதேசம் செய்தது ஸபலமாயிற்று என்பதைத் தெரிந்து கொள்ளவேண்டுமென்கிற ஆசையை உடையவனைப்போலக் கேழ்க்கிறார்—இந்த ஶ்லோகத்தில். 'ஏதத்' என்பது அர்த்தம் வரையிலுமாகையினால் 'ச்ருதம்' என்பதும் அர்த்த ஜ்ஞானம் வரையிலும் சொல்லுகிறது. என்னால் சொல்லப்பட்ட இந்தச் ஶாஸ்த்ரம் அர்த்தமில்லாததல்லவே என்கிற அபிப்ராயத்தினால் 'ஏதத்' என்னும் பதம் சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்— 'என்னால் சொல்லப்பட்ட' என்றாரம்பித்து.*

துடன் கேழ்க்கப்பட்டதா? உன்னுடைய அஜ்ஞானத்தினால் உண்டான மயக்கம் நீங்கிற்றா? எந்த அஜ்ஞானத்தினால் மூடனாய்க்கொண்டு நான் யுத்தம் செய்யப்போகிறதில்லை என்று சொன்னாயோ. 72

𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚 ॥

𑌅𑌰𑍍𑌜𑍁𑌨𑌃 - அர்ஜுநன், 𑌉𑌵𑌾𑌚 - சொல்லுகிறான்.

𑌨𑌷𑍍𑌟𑍋 𑌮𑍋𑌹𑌃 𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌰𑍍𑌲𑌬𑍍𑌧𑌾 𑌤𑍍𑌵𑌤𑍍𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌾𑌨𑍍𑌮𑌯𑌾𑌚𑍍𑌯𑍁𑌤 ।
𑌸𑍍𑌥𑌿𑌤𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌗𑌤𑌸𑌨𑍍𑌦𑍇𑌹𑌃 𑌕𑌰𑌿𑌷𑍍𑌯𑍇 𑌵𑌚𑌨𑌂 𑌤𑌵 ॥ 73

ப-ரை] 𑌅𑌚𑍍𑌯𑍁𑌤 - ஓ! ஸ்ரீ க்ருஷ்ண, 𑌤𑍍𑌵𑌤𑍍𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌾𑌤𑍍 - உன்னுடைய ப்ரஸாதத்தினால், 𑌮𑍋𑌹𑌃 - அஜ்ஞானம், 𑌨𑌷𑍍𑌟𑌃 - நாசமடைந்தது, 𑌮𑌯𑌾 - என்னால், 𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌃 - ஜ்ஞானம், 𑌲𑌬𑍍𑌧𑌾 - அடையப்பட்டது, 𑌗𑌤𑌸𑌨𑍍𑌦𑍇𑌹𑌃 - விலக்கப்பட்ட ஸந்தேஹத்தை உடையவனாய், 𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 - (என்னுடைய ஸ்வபாவத்தில்) இருப்பவனாயும், 𑌅𑌸𑍍𑌮𑌿 - ஆகிறேன், 𑌤𑌵 - உன்னுடைய, 𑌵𑌚𑌨𑌂 - வார்த்தையை, 𑌕𑌰𑌿𑌷𑍍𑌯𑍇 - செய்யப்போகிறேன். 73

பா] மோஹமாவது விபரீதமான ஜ்ஞானம். உம்முடைய அனுக்ரஹத்

---

'𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌂𑌮𑍋𑌹𑌃 𑌪𑍍𑌰𑌣𑌷𑍍𑌟𑌃' என்பது அப்படிக் கேட்டதின் ப்ரயோஜனத்தைப் பற்றி ப்ரஶ்நம் பண்ணியிருக்கிறது. அஜ்ஞானத்தினால் உண்டாகிய ப்ரமமாகிற ஜ்ஞானம் இவ்விடத்தில் '𑌅𑌜𑍍𑌞𑌾𑌨 𑌸𑌂𑌮𑍋𑌹𑌃' என்னப்படுகிறது. 'எந்த அஜ்ஞானத்தினால் மூடனாய்க்கொண்டு' என்பது '𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌂𑌮𑍋𑌹𑌃' என்பதின் அர்த்தத்தை விவரித்திருக்கிறபடியினால் அப்படிப்பட்ட அஜ்ஞானத்தினால் உண்டாக்கப்பட்ட மோஹம் நீங்கிற்றா என்றந்வயம் சொல்லிக்கொள்ள வேண்டியது. 72

தா] பிறகு தான் க்ருதஜ்ஞனாக இருக்கிறான் என்பதை ப்ரகாசம் செய்துகொண்டு அர்ஜுநன் கேட்டதின் பலம் ஸித்தித்து விட்டதென்று பதில் சொல்லுகிறான்—இந்த ஶ்லோகத்தில். அர்ஜுநனால் இந்த அர்த்தங்கள் இதற்கு முன் தெரிந்துகொள்ளப்படாமையினாலும் வார்த்தையினால் முதலில் ஸ்ம்ருதி அதாவது நினைவு உண்டாகாதாகையினாலும் அந்த நினைவுக்கும் காரணமாகிய பப்தத்தினால் உண்டாகிய ஜ்ஞானமே இவ்விடத்தில் ஸ்ம்ருதி என்னும் பதத்தினால் லக்ஷணையா

தினுல் எனக்கு அந்த விபரீத ஜ்ஞானம் நாசமடைந்தது. ஸ்ம்ருதி ஆவது உள்ளபடியே இருக்கிற தத்துவங்களைப் பற்றிய ஜ்ஞானம். உம்முடைய அனுக்ரஹத்தினுலேயே அதுவும் என்னுல் அடையப்பட்டது. அதாவது ஆத்மாவல்லாத ப்ரக்ருதியினிடத்தில் இதுவே ஆத்மா என்கிற அபிமானமாகிய மோஹமும், பரமாத்மாவிற்குச் ஶரீரமாகையினுல் அவனையே ஆத்மாவாக வுடைய சேதனமும் அசேதனமுமாகிய வஸ்துக்களெல்லாம் அவனை ஆத்மாவாகவுடையதல்ல என்கிற அபிமானமாகிய மோஹமும், பரமாத்மாவிற்கு ஆராதனமாகையினுலே அவனை அடைவதற்கு உபாயங்களாகிய நித்யங்களும் நைமித்திகங்களுமாகிய கர்மங்கள் ஸம்ஸாரபந்தத்திற்குக் காரணங்கள் என்கிற ஜ்ஞானமாகிய மோஹமும், இவை எல்லாம் நாசமடைந்தது. ஆத்மா ப்ரக்ருதியைவிட வேறுபட்டது, அந்த ப்ரக்ருதியின் ஸ்வபாவங்களில்லாதது, அறியும் தன்மையை யுடையதாக யிருக்கை ஒன்றையே ஸ்வபாவமாக வுடையது, பரமாத்மாவிற்குச் ஶேஷமாக இருக்கையையும், அவனுல் நியமிக்கப் படுகிறதாகஇருக்கையையும்,இவைகளையே ஸ்வரூபமாகவுடையது, என்கிற ஜ்ஞானமும், எல்லா லோகங்களினுடைய உத்பத்தி, ஸ்திதி, லயம், இவைகளை விளையாட்டாக வுடையவனும்,எல்லாத் தோஷங்களுக்கும் விரோதமான கல்யாண குணங்கள் ஒன்றையே ஸ்வரூபமாகவுடையவனும் ஸ்வபாவத்திலேயே ஏற்பட்ட எல்லையில்லாத மேன்மையை யுடைய ஜ்ஞானம், பலம், ஐஶ்வர்யம், வீர்யம், ஶக்தி, தேஜஸ்ஸு, முதலிய எல்லாக் கல்யாண குணங்களின் கூட்டங்களுக்கு ஸமுத்திரமாகிய பரப்ரம்மம் என்னும் பதத்தினுல் சொல்லப்படுகிற பரமபுருஷ

---

கச் சொல்லப்படுகிறது என்று சொல்லுகிருர்—'ஸ்ம்ருதி ஆவது' என்ருரம்பித்து. 1 'அந்தத் தேவன் நம்மை நல்ல ஸ்ம்ருதியுடன் சேர்க்க வேண்டும்' என்கிற மந்த்ரத்திற்கே மற்ருெரு சாகையில் 2 'அந்தத் தேவன் நம்மை நல்ல புத்தியுடன் சேர்க்கவேண்டும்' என்றும் பாடமிருக்கிறபடியினுல் ஸ்ம்ருதி,புத்தி, என்னும் பதங்கள் அதிகத் தூரம் வ்யத்யாஸமில்லாமல் ஒரே அர்த்தத்தைச் சொல்லுகின்றன என்பது உசிதம் என்று தாத்பர்யம். இதினுல் நிவ்ருத்தி செய்யப்பட்ட மோஹத்தின் ஸ்வரூபத்தையும், அதை நிவ்ருத்தி செய்கிற ஜ்ஞானத்தின் ஸ்வரூபத்தையும், இந்த உபதேசத்தை ஆரம்பம் முதல் கடைசி வரையிலும் நிரூபித்துச் சொல்லுகிருர்—'ஆத்மாவல்லாத' என்ருரம்பித்து. 'ப்ரக்ருதியைவிட வேறுபட்டது' ஆவது ஸ்வயம் ப்ரகாசமாயிரு

---

1 தைத்திரீயம் - 2 - 10 2 ஶ்வேதாஶ்வதரம் - 3 - 4

னின் உண்மையான ஸ்வபாவங்களைப்பற்றிய ஜ்ஞானமும் இப்படிப் பட்ட உயர்ந்த தத்துவம் தாழ்ந்த தத்துவம் இவைகளின் உண்மையான ஸ்வபாவங்களைப் பற்றிய ஜ்ஞானத்தையும், அதின் அப்யாஸத்தையும் முன்னிட்டுக்கொண்டு செய்யப்படுகிறதாயும் தினந்தோறும் வ்ருத்தியடைந்து வருகிறதாயும் பரமாத்மாவினுடைய ப்ரீதி ஒன்றையே பலமாக உத்தேசித்துச் செய்யப்படுகிற நித்ய நைமித்திக கர்மங்கள், ஶாஸ்த்ரங்களில் மறுக்கப்படுகிற கர்மங்களை விட்டுவிடுதல், ஶாந்தி, தாந்தி, முதலிய ஆத்ம குணங்கள் இவைகளினால் நிறைவேற்றப்படுகிறதாயும் பக்தியாக இருக்கும் தசையை யுடையதாயுமிருக்கிற பரமாத்மாவைப்பற்றிய உபாஸனம் ஒன்றினாலேயே அடையத்தகுந்தவனாயு மிருக்கிற பரமாத்மா வஸுதேவர் பிள்ளையாகிய நீர் என்கிற ஜ்ஞானமும் அடையப்பட்டது. ஆகையினால்

*க்கை முதலியவைகளினால், விகாரம் முதலியவைகளில்லாமையினால் அதின் ஸ்வபாவங்களில்லாதது என்பது. உபதேசம் செய்திருக்கும் வார்த்தை அனுஷ்டிக்க முடியாதாகையினால் அந்த வார்த்தையினால் அதினால் சொல்லப்படுகிற அர்த்தம் லக்ஷணையாகச் சொல்லப்படு கிறது என்று சொல்லுகிறார்—'உம்மால் சொல்லப்பட்டபடி' என்றாரம்பித்து. 'முதலியவைகளை' என்பதினால் பக்தியோகம் வரையிலும் சேர்த்துக்கொள்ளப்படுகிறது. பக்தியோகத்தைச் செய்யாமலிருந்து விட்டதோவெனில் உண்டான ஜ்ஞாபகம் தவறிப்போய் விட்டபடியினால். 1 'யத்து த்வயா புரா ப்ரோக்தம் ஸௌஹ்ருதாத் கேஶவ ஸர்வம் தத் புருஷவ்யாக்ர நஷ்டம் மே நஷ்டசேதஸ:' என்றல்லவோ மேலே சொல்லப்போகிறான். பகவானும் 2'ஶ்ராவிதஸ்த்வம் மயா குஹ்யம்*

1 பாரதம் - அஶ்வமேத பர்வம் - அனுகீதை - 17 - 6. புருஷவ்யாக்ர-புருஷஶ்ரேஷ்டனே, கேசவ - ஸ்ரீக்ருஷ்ணா! புரா-முன்பு, பவதா-உன்னால், ஸௌஹ்ருதாத் - என்னிடத்தில் ப்ரீதியினால், யத் - எது, ப்ரோக்தம் - சொல்லப்பட்டதோ, தத்ஸர்வம் - அதெல்லாம், நஷ்டசேதஸ:—புத்தி யில்லாதவனாகிய, மே - எனக்கு, ப்ரஷ்டம்-நழுவிப்போய்விட்டது, அதாவது மறந்துபோய் விட்டது.

2 பாரதம்-அஶ்வமேத பர்வம்,அனுகீதை, 17-9. பார்த்த-அர்ஜுந, த்வம்-நீ, மயா - என்னால், குஹ்யம் - ரஹஸ்யமான அர்த்தத்தை, ஶ்ராவித:—கேழ்ப்பிவிக்கப்பட்டாய், ஸநாதநம் - அனாதியாகிய, தர்மஸ்வரூபிணம் - தர்ம ஸ்வருபமாகிய யோகத்தையும், ஜ்ஞாபித:—தெரிவிக்கப்பட்டாய், ஶாஶ்வதாந் - அழிவில்லாத, ஸர்வலோகாம்ஶ்ச - எல்லா லோகங்களையும் (கேழ்ப்பிவிக்கப்பட்டாய்), த்வம் - நீ அபுத்யா - புத்தி இல்லாமையினால், மாக்ரஹீ:- அறியவில்லை என்கிற, யத் - எதுவோ, தத் - அது, ஸுமஹத் - மிகவும் பெரிதான, அப்ரியம் - அநிஷ்ட கார்யம், ஸ:—அந்த, தர்ம:—தர்மமானது, ப்ரம்மண:—பரப்ரம்மத்தை, பரிவேதனே - அறிவதில், ஸுபர்யாப்தோ - போதுமானதல்லவா.

பந்துக்களினிடத்தில் ப்ரீதி, கருணை, இவைகளினால் வ்ருத்தி அடைந்திருக்கிற விபரீத ஜ்ஞானத்தைக் காரணமாகவுடைய எல்லாத் துக்கங்களிலிருந்தும் விடுபட்டவனாய் நீக்கப்பட்ட ஸந்தேஹத்தையுடையவனாய் என்னுடைய ஸ்வபாவத்திலேயே இருக்கிறவனாகவும் ஆகிறேன். இப்பொழுதே யுத்தம் முதலியவைகளைச் செய்யவேண்டும் என்பதைப் பற்றிய உம்முடைய வார்த்தையைச் செய்யப்போகிறேன், அதாவது உம்மால் சொல்லப்பட்டபடி யுத்தம் முதலியவைகளைச் செய்யப்போகிறேன் என்றர்த்தம். 73

பா — அ] தன்னுடைய பிள்ளைகளும் பாண்டவர்களும் யுத்தத்தில் என்னசெய்யப்போகிறார்கள் என்று கேட்டவனாகிய த்ருதராஷ்டிரனுக்கு ஸஞ்சயன் சொல்லுகிறார்—

𑌇𑌤𑍍𑌯𑌹𑌂 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌸𑍍𑌯 𑌪𑌾𑌰𑍍𑌥𑌸𑍍𑌯 𑌚 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 ।
𑌸𑌂𑌵𑌾𑌦𑌮𑌿𑌮𑌮𑌶𑍍𑌰𑍌𑌷𑌮𑌦𑍍𑌭𑍁𑌤𑌂 𑌰𑍋𑌮𑌹𑌰𑍍𑌷𑌣𑌮𑍍 ॥ 74

ப — ரை] 𑌇𑌤𑌿 - இவ்விதமாக, 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌸𑍍𑌯 - க்ருஷ்ணனுடையவும், 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌃—மிகவும் புத்திமானாகிய, 𑌪𑌾𑌰𑍍𑌥𑌸𑍍𑌯 𑌚-அர்ஜுநனுடையவும், 𑌇𑌮𑌂-இந்த, 𑌅𑌦𑍍𑌭𑍁𑌤𑌂—ஆஶ்சர்யமாயிருக்கிற, 𑌰𑍋𑌮𑌹𑌰𑍍𑌷𑌣𑌂 - மயிர்கள் சிலிர்க்கச் செய்யக்கூடியதுமாகிய, 𑌸𑌂𑌵𑌾𑌦𑌂 - வார்த்தையை, 𑌅𑌹𑌂 - நான், 𑌅𑌶𑍍𑌰𑍌𑌷𑌂-கேட்டேன். 74

பா] இப்படி வஸுதேவர் பிள்ளையாகிய க்ருஷ்ணனுடையவும் அவர் அத்தையின் பிள்ளையும், மஹாபுத்திமானையும், அவருடைய திருவடிகளை

---

𑌜𑍍𑌞𑌾𑌤𑌿𑌭𑌿𑌶𑍍𑌚 𑌸𑌨𑌾𑌤𑌨𑌂 । 𑌯𑌚𑍍𑌚 𑌶𑍍𑌰𑍁𑌤𑌵𑌿𑌷𑍍𑌣𑌂 𑌪𑌾𑌰𑍍𑌥𑌸𑍍𑌯 𑌪𑌾𑌰𑍍𑌥𑌸𑍍𑌯 𑌸𑌾𑌶𑍍𑌵𑌤𑌾𑌨𑍁 : 𑌕𑍇𑌶𑌵𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 𑌹𑍀𑌯𑌸𑍍𑌸𑌂 𑌤𑌨𑍍𑌤𑍇𑌸𑍁𑌮𑌹𑌾𑌹𑍃𑌦𑌯𑌂॥ 𑌸𑌹𑌿𑌤𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌾 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌃 𑌸𑌹𑌵𑍇𑌦𑌵𑌿𑌦𑍇𑌨॥' என்று பதில் சொல்லியிருக்கிறார். 73

தா' 1 '𑌮𑌾𑌮𑌕𑌾𑌃 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌾𑌶𑍍𑌚𑍈𑌵 𑌕𑌿𑌮𑌕𑍁𑌰𑍍𑌵𑌤 𑌸𑌞𑍍𑌜𑌯' என்கிற கேள்விக்குஇவை முழுமையும் பதில் என்று சேர்க்கிறார், என்று சொல்லுகிறார்—'தன்னுடைய பிள்ளைகளும்' என்றாரம்பித்து. '𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌃' என்பதின் அர்த்தத்தை ப்ரகாசப்படுத்துகிறார்—'அவனுடைய திருவடிகளை ஆஶ்ரயித்தவனாகிய' என்று. 2 '𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌶𑍍𑌰𑌯𑌾𑌃 𑌕𑍃𑌷𑍍𑌣𑌬𑌲𑌾𑌃 𑌕𑍃

---

1 பகவத்கீதை - 1 - 1.

2 பாரதம். பாண்டவா:—பாண்டவர்கள், க்ருஷ்ணாஶ்ரயா:—கண்ணனையே ஆதாரமாகவுடையவர்கள், க்ருஷ்ணபலா:—க்ருஷ்ணனையே பலமாக உடையவர்கள், க்ருஷ்ணநாதா:—க்ருஷ்ணனையே ரக்ஷகனாக உடையவர்கள்.

ப்ரபத்தி அருளிச்செய்யப்பட்டது. நடுவிலும் 1 'தஸ்மாத்ப்ரணம்ய ப்ரணிதாய காயம் ப்ரஸாதயே த்வாமஹமீசமீட்யம்', 2 'மாமேவ யே ப்ரபத்யந்தே' 3 'தமேவ சாத்யம் புருஷம் ப்ரபத்யே' என்றும், அநேக இடங்களில் அருளிச் செய்யப்பட்டிருக்கிறது. அதற்கு ந்யாயங்களும் 'யதஃப்ரவ்ருத்தி:' என்பதினாலும், 'யத்ர ப்ரவ்ருத்தி:' என்கிற பாடத்தில் அவர்களுடைய அநுஷ்டானம் காண்பிக்கப் படுகிறபடியினாலும் 'தைவீஹ்யேஷா' என்பதினாலும், 'தஸ்மாத்' என்பதினாலும் காரணங்கள் நிரூபிக்கப்படுகின்றன. அதற்கு ப்ரயோஜனமும் அதைப்பற்றிய ஸ்தோத்திரங்களும் ஆங்காங்கு அருளிச்செய்யப்பட்டிருக்கின்றன. ஆகையினால் தாத்பர்யத்தை நிர்ணயம் செய்வதற்குக்காரணங்களாகிய 'உபக்ரமோபஸம்ஹாராவப்யாஸோऽபூர்வதா பலம் அர்த்தவாதோபபத்தீ ச லிங்கம் தாத்பர்யநிர்ணயே' என்று சொல்லப்பட்ட ஹேதுக்கள் ஆறும் ஶரணாகதியைப்பற்றிய முக்கியமாயிருக்கின்றன. ஆகையினால் இவ்விடத்தில் 'ஶரணாகதி' என்றருளிச்செய்தது பூர்வர்களினுடையவும், பாஷ்யகாரருடைய திருவுள்ளத்தை அநுஸரித்ததாயும், உசிதமாயுமிருக்கிறது—என்பது. 'சத்வமே தருவான்' என்பதினால் 4 'ஜாயமானம் ஹி புருஷம் யம் பஶ்யேந்மதுஸூதந: ஸாத்த்விகஸ்ஸது விஜ்ஞேய:' என்றும், 5 'ஸோऽஹம் ப்ரஸாதயிஷ்யாமி ஶேஷப்ரதிஶேஷத:' என்றும் சொல்லுகிறபடியே ஸத்வகுணத்தை வ்ருத்திசெய்யக்கூடிய கடாக்ஷங்களையுடைய பகவான் என்று திருவுள்ளம். இத்தால் எவனுடைய கடாக்ஷம் பட்டமாத்திரத்தில் ஸத்வம் தலையெடுத்து மோக்ஷத்தை யடைய யோக்யனாகிறானோ அப்படிப்பட்ட பகவான் தானே நேரில் உபதேசிக்கப்பெற்றான் அர்ஜுனன் என்று அர்ஜுனனுடைய பாக்யம் கொண்டாடப்படுகிறது 'தனிப்பார்த்தனுக்கே' என்பதினால் இப்படிப்பட்ட பாக்யத்தைப்பெற்றமற்றொருவன் இல்லாமையினால் தனக்குஒப்பில்லாத அர்ஜுனனுக்கு என்று திருவுள்ளம். அன்றிக்கே முன்னிருந்ததாகிய 6 'விஸ்ருஜ்ய ஸஶரம் சாபம் ஶோகஸம்விக்நமாநஸ:' என்று வில்லைப்போகட்டுக்க விழ்தலை இட்டுக்கிடந்த அவஸ்த்தை நீங்கி 7 'கரிஷ்யே வசநம் தவ'

1 பகவத்கீதை-11-44
2 பகவத்கீதை-7-14.
3 பகவத்கீதை-15-4
4 259-ம் பக்கம், 3-ம் புட்நோட்டைப்பார்க்க.
5 பாஞ்சராத்ர ஸம்ஹிதை
6 பகவத்கீதை-1-47
7 பகவத்கீதை-18-73

என்றும், 1 '𑌯𑌤𑍍𑌰 𑌪𑌾𑌰𑍍𑌥𑍋 𑌧𑌨𑍁𑌰𑍍𑌧𑌰𑌃' என்றும் சொல்லுகிறபடியே கையில் காண்டீபத்தை ஏந்திக்கொண்டு யுத்தோன்முகனாய் நின்ற தசையையுடைய பார்த்தன் என்று திருவுள்ளமாகவுமாம். 19

சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே ஶரணம்.



1 பகவத்கீதை-18-78

## ஸ்ரீ ஆளவந்தாரருளிச்செய்த ஸ்ரீ கீதார்த்த ஸங்க்ரஹம்.

ஆளவந்தார் திருவடிகளே ஶரணம்.

**𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌸𑍍𑌤𑌪𑌸𑍍𑌤𑍀𑌰𑍍𑌥 𑌦𑌾𑌨 𑌯𑌜𑍍𑌞𑌾𑌦𑌿 𑌸𑍇𑌵𑌨𑌮𑍍 ।**
**𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑍋 𑌜𑌿𑌤𑌸𑍍𑌵𑌾𑌨𑍍𑌤𑍈𑌃 𑌪𑌰𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌃 ॥** 23

ப - ரை] 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌃 - கர்மயோகமாவது, 𑌤𑌪𑌃 - தபஸ்ஸு, 𑌤𑍀𑌰𑍍𑌥 - புண்ணிய தீர்த்தங்கள், 𑌦𑌾𑌨 - தானங்கொடுத்தல், 𑌯𑌜𑍍𑌞 - யாகம் செய்தல், 𑌆𑌦𑌿 - இவை முதலியவைகளை, 𑌸𑍇𑌵𑌨𑌮𑍍 - இடைவிடாமல் அனுஷ்டித்தல், 𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑌃 - ஜ்ஞானயோகமாவது, 𑌜𑌿𑌤𑌸𑍍𑌵𑌾𑌨𑍍𑌤𑍈𑌃 - 𑌜𑌿𑌤𑌃 - ஜயிக்கப்பட்ட, 𑌸𑍍𑌵𑌾𑌨𑍍𑌤𑍈𑌃 - மனதையுடையவர்களினால், 𑌪𑌰𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 - பரிசுத்தமான ஜீவாத்மாவினிடத்தில் 𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌃 - நிஷ்டையுடையவனாயிருத்தல். 23

ஸ்ரீமந் நிகமாந்த மஹா தேசிகனருளிச்செய்த

### ஸ்ரீ கீதார்த்த ஸங்க்ரஹ ரக்ஷை

பிறகு பத்து ஶ்லோகங்களினால் எளிதில் தெரிந்துகொள்ள வேண்டியதற்காக கர்மயோகம், ஜ்ஞானயோகம், பக்தியோகம், இவைகளின் ஸ்வரூபம் முதலியவைகளைப் பிரித்து நிரூபிக்கிறார். அவைகளில் கர்மயோகத்தின் லக்ஷணம் முன்னமே நிரூபிக்கப்பட்டதென்று எண்ணிக்கொண்டு அந்தந்த அதிகாரிகளுடைய ஜ்ஞானம், ஶக்தி, யோக்கியதை, இவைகளை யனுஸரித்து அவரவர்கள் அதிகாரத்திற்குத்தக்கபடி அனுஷ்டிப்பதற்காக நான்காம் அத்யாயத்தில் சொல்லப்பட்டவைகளும் அவ்விடத்தில் சொல்லப்படாதவைகளுமாகிய கர்மயோகத்தினுட்பிரிவுகள் எல்லாவற்றையும் ‘𑌆𑌦𑌿 (முதலிய)’ என்னும் பதத்தினால் சுருக்கிச்சொல்லுகிறார். ப்ரயோஜன முண்டாகும் வரையில் இடைவிடாமல் ப்ரீதியுடன் அனுஷ்டிப்பது இவ்விடத்தில் ‘𑌸𑍇𑌵𑌨𑌮𑍍’ என்னப் படுகிறது. பிறகு அந்தக் கர்மயோகத்தினாலுண்டாக்கப்படுகிற ஜ்ஞான யோகத்திற் கதிகாரியைக் காட்டிக்கொண்டு அதன் லக்ஷணத்தையும் சொல்லுகிறார். நிஷ்டையுடையவனாயிருத்தல் என்கிற இடத்தில் இடைவிடாமல் த்யானம் செய்துகொண்டிருப்பதினால் என்று சேர்த்துக்கொள்ளவும். இத்தால் அந்த ஜ்ஞானயோகத்தின் ப்ரயோஜனமாகிய யோகத்தைவிடவும் அதின் உபாயமாகிய கர்மயோகத்திற்குள்ளடங்கிய ஜ்ஞானத்தைவிடவும் வ்யத்யாஸம் தெரிவிக்கப்பட்டது. 23

பக்தியோக: பரமைகாந்த ப்ரீத்யா த்யாநாதிஷு ஸ்திதி: | *

ப - ரை] பக்தியோக:-பக்தியோகமாவது, பரமைகாந்தப்ரீத்யா - பரமாத்மாவினிடத்தில் ஒரே நிஶ்சயத்தோடு கூடிய ப்ரீதியினால், த்யாநாதிஷு–(அவனைப்பற்றிய) த்யானம் முதலியவைகளில், ஸ்திதி:–நிஷ்டையுடையவனாயிருத்தல். *

பிறகு அந்தரங்கமான அங்கங்களுடன் பக்தியோகத்தை நிரூபிக்கிறார். பரமாத்மாவினிடத்தில ஒரே நிஶ்சயத்தினாலுண்டாகிய ப்ரீதி 'பரமைகாந்தப்ரீதி:' என்னப்படுகிறது. இதனால் 'உஹநீயவிஷயே ப்ரீதிஸஹக்தி:' என்கிற பக்தியின் லக்ஷணம் தெரிவிக்கப்பட்டது. 1 'ஸ்நேஹபூர்வமநுத்யாநம் பக்திரித்யபிதீயதே' என்றிவை முதலிய வசனங்களை அனுஸரித்துப் பக்தியின் ஸ்வரூபம 'த்யாந' என்னும் பதத்தினால் சொல்லப்பட்டது. 'ஆதி' என்னும் பதத்தினால் ஆராதனம் செய்தல், நமஸ்காரம் செய்தல், முதலிய அந்தரங்கங்களின் ஸமூகம் சேர்த்துக்கொள்ளப்படுகிறது. அப்படியே வேதார்த்த ஸங்க்ரஹத்தில் 'எல்லா லோகங்களுக்கும் நன்மையைத்தெரிவிக்கிற வேதாந்தங்களில் அறியப்பட்ட அர்த்தமாவது ஜீவாத்மா, பரமாத்மா, இவர்களின் உண்மையைப்பற்றிய ஜ்ஞானத்தை முன்னிட்டுச் செய்யப்படுகிறதாயும் வர்ணாஶ்ரம தர்மங்களை அங்கங்களாகவுடையவைகளாயுமிருக்கிற மிகவும் ப்ரியங்களாயுமிருக்கிற பரமாத்மாவினுடைய இரண்டு திருவடிகளையும் த்யானம் செய்வது, ஆராதனம் செய்வது, நமஸ்காரம் செய்வது, முதலியது அவனை அடைவதையே ப்ரயோஜனமாகவுடையது' என்று சொல்லப்பட்டது. ஆகில் கர்மயோகத்திலும் ஜீவாத்மாவைப்பற்றிய ஜ்ஞானமும் அந்தக் கர்மயோகத்தினாலாராதிக்கப்படுகிற பகவானிடத்தில் ப்ரீதியும் தொடர்ந்துகொண்டிருக்கிறது. ஜ்ஞானயோகத்திலும் மனது சுத்தியடைவதற்காக வர்ணாஶ்ரம தர்மங்களை விடக்கூடாது. அதினால் ஆராதிக்கப்படுகிற பகவானிடத்தில் பக்தியும் செய்யவேண்டும். இப்படியே பக்தியோகத்திலும் மற்ற இரண்டும் (ஜீவாத்ம ஜ்ஞானமும் நித்ய கர்மானுஷ்டானமும்) தொடர்ந்திருக்கிறதென்பது ஸித்தமாக ஏற்பட்டிருக்கிறது. ஆகையினால் இவைகளைத் தனித்தனியாகப் பிரித்துச் சொல்லி இருப்பது உசிதமல்ல என்றாக்ஷேபம் வரில் இதற்கு ஸமாதானம்—ப்ரதானமாகிய ஒரு கர்மத்தில் பால், சர்க்கரை முதலியவைகளைப்போல அங்கமாக மற்றவைகள் கலந்திருந்தபோதிலும் அது பிரித்துச் சொல்லுவதற்கு விரோதமில்லை என்று தாத்பர்யம்—என்பது. *

---

1 லைங்கபுராணம், உத்தரகாண்டம். ஸ்நேகபூர்வம்-ப்ரீதியுடன்கூட, அனுத்யானம்-நினைத்துக்கொண்டிருத்தல், பக்திரிதி-பக்தியென்று, அபிதீயதே-சொல்லப்படுகிறது.

த்ரயாணாமபி யோகாநாம் த்ரிபிரந்யோந்யஸங்கம: ॥　　24
நித்யநைமித்திகாநாம் ச பராராதநரூபிணாம் ।　　*

ப-ரை] த்ரயாணாம் - இந்த மூன்றுவிதமான, யோகாநாமபி - கர்ம யோகம், ஜ்ஞானயோகம், பக்தியோகமாகிய யோகங்களுக்கும், அந்யோந்ய ஸங்கம:-ஒன்றோடொன்று சேர்க்கையும், பராராதநரூபிணாம்-பகவானுக்கு ஆராதனங்களாகிய, நித்யநைமித்திகாநாம்-நித்ய நைமித் திகங்களாகிய கர்மங்களுக்கும், த்ரிபி:-இந்த மூன்று விதமான யோகங் களுடனும், ஸங்கம:-சேர்க்கை (உண்டு).　　*

பகவானிடத்தில் ஒரே நிஶ்சயத்துடன் கூடிய ப்ரீதி மூன்று யோகங்களிலும் ஸமானந்தான். 'ஐகாந்த்யம்' என்பதாவது இதர தே வதைகளை உடைத்தாகாமலிருக்கை. அப்படியே மோக்ஷ தர்மத்தில் 1 'ப்ரஹ்மாணம் ஶிதிகண்டஞ்ச யாஶ்சாந்யா தேவதா: ஸ்ம்ருதா: । ப்ரதிபுத்தா ந ஸேவந்தே யஸ்மாத் பரிமிதம் பலம் ॥' என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆஶ்வமேதிக பர்வத்திலும் 2 'அநந்யதேவதா பக்தா யே மத்பக்தஜநப்ரியா: । மாமேவ ஶரணம் ப்ராப்தா மத்பக்தாஸ்தே ப்ரகீர்த்திதா: ॥' என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையினால் அக்னி, இந்திரன், முதலிய அநேக தேவதைகளின் ஸம்பந்தத்தை யுடைய வர்ணாஶ்ரமகர்மங்கள் ஏகாந்தியாக இருப்பதற்கு விரோதிகளாகையினால் இந்த மூன்றுவித யோகங்களிலும் அவைகளை விட்டுவிட வேண்டுமென்றேற்பட்டது என் கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார். இவ்விடத்தில் முன் பாதியிலிருக்கிற 'அந்யோந்யஸங்கம:' என்னும் பதத்தில் 'அந்யோந்ய' என்பதைப் புத்தியினால் பிரித்து 'ஸங்கம:' என்பதை 'த்ரிபி:' என்ப தோடு சேர்த்து இந்த அர்வயித்துக்கொள்ள வேண்டியது. இதன் கருத்தாவது—3 'நியதஸ்ய து', 4 'யத: ப்ரவ்ருத்தி:', 5 'ஆசாரப்ர

1 பாரதம் - மோக்ஷதர்மம்-350 36.

2 பாரதம், ஆஶ்வமேதிக பர்வம்-104-91, யே-எவர்கள், அநந்யதேவதா பக்தா:-இதர தேவதைகளிடத்தில் பக்திசெய்யாதவர்களும், மத்பக்த ஜனப்ரியா:-என்னிடத்தில் பக்திசெய்துகொண்டிருக்கிற ஜனங்களிடத்தில் ப்ரீதி செய்து கொண்டிருப்பவர்களும், மாமேவா-என்னையே, சரணம்-சரணமாக, ப்ராப்தா:- -அடைந்தவர்களுமோ, தே-அவர்கள், மத்பக்தா:-என்னுடைய பக்தர்களாக, ப்ர கீர்த்திதா:-சொல்லப்பட்டார்கள்.

3 பகவத்கீதை-18-7　　4 பகவத்கீதை - 18 - 46

5 பாரதம் - ஆநுஶாஸநிகபர்வம்-254-139-தர்மமானது ஆசாரத்தையே கார ணமாகவுடையது.

ஸவ:", 1 'வர்ணாஶ்ரமாசாரவதா' என்றிவை முதலிய வசனங்களினால் வர்ணாஶ்ரம தர்மங்களை அங்கங்களாகவுடையவைகள் இந்த மூன்று யோகங்களும் என்பது ஏற்பட்டிருக்கிறபடியினால் அக்னி இந்திரன் முதலிய பதங்களும் ப்ரதர்த்தன வித்யையில் சொல்லியிருக்கிற ந்யாயத்தை யனுஸரித்து அவர்களைச் சரீரமாகவுடைய பரமாத்மாவைச் சொல்லுகின்றன என்றனுஸந்தானம் செய்வதினாலாவது, 2 'ஸாக்ஷாதப்யவிரோதம் ஜைமிநி:' என்கிற ஸூத்ரத்திற் சொல்லியிருக்கிற ந்யாயத்தினாலாவது, யஜ்ஞாக்ரஹாராத்யாயத்தில் சொல்லியிருக்கும் விதமாயும் நேரிலேயே பகவானைச் சொல்லுகின்றன என்பதினாலாவது அந்தக் கர்மங்களும் பகவானுக்கு ஆராதனமாக இருக்கக்கூடுமாகையினால் அவைகளை அனுஷ்டானம் செய்தவனுக்கு வேறுதேவதையை ஆராதனம் செய்யாமலிருப்பதும் ஸித்தித்து விடுகிறபடியினால் ஏகாந்தியாயிருக்கையும் ஸ்தாபிக்கப்பட்டது—என்பது. இக்கால் கர்மயோகத்திலும் நித்யநைமித்திக கர்மங்கள் அங்கங்களாக இருக்கின்றன என்பது தெரிவிக்கப்பட்டது. அப்படியே 3 'ஸர்வேப்யேதே யஜ்ஞவித:' என்கிற ஶ்லோகத்திற்கு வ்யாக்யானம் செய்யும்பொழுது பாஷ்யத்தில் த்ரவ்யயஜ்ஞம் முதலாக ப்ராணாயாமம் வரையிலுள்ள கர்மயோகத்தின் உட்பிரிவுகளில் தங்களுக்கிஷ்டமானவைகளில் ப்ரவ்ருத்தித்திருக்கிற இந்த அதிகாரிகளெல்லோரும் 4 'ஸஹயஜ்ஞா: ப்ரஜாஸ்ஸ்ருஷ்ட்வா' என்கிற ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட பஞ்சமஹா யஜ்ஞம் முதலிய நித்யநைமித்திக கர்மங்களாகிய யஜ்ஞங்களைத் தெரிந்து கொண்டவர்களாய், அவைகளில் நிஷ்டையுடையவர்களாய், ஆகையினாலேயே நிவ்ருத்திக்கப்பட்டபாபங்களையுடையவர்களாய்க்கொண்டு யஜ்ஞத்தில் மிகுதியாகிய ஆஹாரத்தினால் ஶரீரதாரணத்தைச் செய்து கொண்டு கர்மயோகத்தில் ப்ரவ்ருத்தித்துக்கொண்டு அநாதியாகிய பரப்ரம்மத்தை யடைகிறார்கள்' என்றுசொல்லப்பட்டது. இப்படியே 'ஏவம் பஹுவிதா யஜ்ஞா:' என்கிற ஶ்லோகத்தின் வ்யாக்யானத்திலும் 'இப்படி அனேகவிதங்களாகிய கர்மயோகங்கள் ஆத்மாவின் உண்மையான ஸ்வரூபத்தை அடைவதற்கு ஸாதனங்களாக இருக்கின்றன கீழ்ச்சொன்ன அடையாளங்களை உடையவைகளாகவும கீழ்ச்சொன்ன உட்பிரிவுகளையுடையவைகளாகவுமிருக்

---

1 விஷ்ணுபுராணம்-3-7-9. வர்ணங்கள், ஆஶ்ரமங்கள், இவைகளுக்குத் தகுந்த ஆசாரங்களையுடைய புருஷனால் (பகவான் ஆராதிக்கத் தகுந்தவன்).

2 ஶாரீரக ஸூத்ரம்-9 3 பகவத்கீதை-4-30 4 பகவத்கீதை-3-10

கிற அந்த எல்லாக் கர்மயோகங்களையும் தினந்தோறும் அனுஷ்டிக்கப்படுகிற நித்ய நைமித்திக கர்மங்களினால் உண்டானவைகளாகத் தெரிந்து கொள்' என்றும் சொல்லப்பட்டது. 1 'ஸோஸாம் பகவஸரா' என்கிற ஶ்லோகத்தின் அவதாரிகையிலும் 'கீழ்ச்சொல்லப்பட்டதாயும் நித்ய நைமித்திக கர்மங்களை அங்கங்களாக வுடையதாயும் யோகத்தை ப்ரயோஜனமாகவுடையதாகவுமிருக்கிற கர்மயோகம் ஸுலபமாய்ச் செய்யமுடியும் என்பதைச் சொல்லுகிறார்' என்று சொல்லப்பட்டது.

ஆத்மஸாக்ஷாத்க்ருதௌ த்ரேதா யோகத்வாரேண ஸாதகா:॥

ப - ரை] த்ரேதா-இந்த, த்ரேதா-மூன்றுவிதமான யோகங்களும், ஆத்மஸாக்ஷாத்க்ருதௌ-ஜீவாத்மாவை ஸாக்ஷாத்கரிப்பதற்கு, யோகத்வாரேண-யோகத்தின் வழியாக, ஸாதகா: - உபாயங்கள்.　　25.

பிறகு இந்த மூன்று விதமான யோகங்களும் பரமபக்தியை யுண்டாக்கும்பொழுது ஜீவாத்மாவை ஸாக்ஷாத்கரிப்பதாகிய நடுவில் நேரிடக்கூடிய வ்யாபாரத்தைக் காரணத்துடன் சொல்லுகிறார்—இந்த ஶ்லோகத்தினால். இவ்விடத்தில் யோகமாவது ஸமாதி என்று சொல்லப்படுகிற மனதை ஒரே விஷயத்தில் இடைவிடாமல் செலுத்துதல். அதினால் உண்டாக்கப்படுகிற நேராகப்பார்ப்பது ஸாக்ஷாத்காரமென்னப்படுகிறது. இவ்விடத்தில் கர்மயோகம் ஜ்ஞானயோகத்தை இடையிடாமல் நேரிலும் ஆத்மஸாக்ஷாத்காரத்திற்குக் காரணமென்பது முன்பே சொல்லப்பட்டது. அப்படி இருந்தபோதிலும் பக்தியோகம் அந்த ஆத்ம ஸாக்ஷாத்காரத்திற்குக் காரணமென்பது யுக்தமல்ல, அது ஆத்மாவை ஸாக்ஷாத்கரித்த பிறகு உண்டாகக்கூடியதாகையினால் என்னில் இது உசிதமல்ல. பக்தி நிஷ்டைக்கே அநேகம் விதமான அவஸ்த்தைகளின் வ்யத்யாஸங்கள் உண்டாகையினாலேயே இவையெல்லாம் பொருந்துமாகையினால். அதெப்படி என்னில் பகவானை அறிவது, அவனைப்பார்ப்பது, அவனை அடைவது, இவை எல்லாம் பொதுவாகப் பக்தியினாலுண்டாக்கப்படுகிறது என்று கீழே சொல்லப்பட்டது. அது அந்தப் பக்தியோகத்தின் அவஸ்த்தைகளின் வ்யத்யாஸமில்லாமல் பொருந்தாது. ஆகையினாலல்லவோ ஆத்மாவை ஸாக்ஷாத்கரித்த பிறகு உண்டாகிற பக்தி 2 'மத்பக்திம் லபதே பராம்' என்று 'பரா' என்னும் பதத்தினால் விசேஷித்துச் சொல்லப்படுகிறது.

1 பகவத்கீதை 5-21.　　2 பகவத்கீதை-18-54.

ஆகையினால் ஆத்ம ஸாக்ஷாத்காரம் இல்லாதவர்களுக்கும் இப்பொழு திருக்கும் பக்தர்களைப் போலப் பகவானை ஸ்தோத்திரம் செய்வது, நமஸ்காரம் செய்வது, அவனுடைய திருநாமங்களைச் சொல்லுவது, முதலிய, கைங்கர்யமென்று ப்ரகாசமாய்த் தெரிந்துகொள்ளக்கூடிய, பக்தி என்னும் பதத்தினால் சொல்லக்கூடிய, நிஷ்டையினால் ஆத்ம ஸாக்ஷாத்காரம் வருகிறது. இந்த உயர்ந்ததாயும் தாழ்ந்ததாயுமிருக்கிற பக்தியின் பிரிவு வேதார்த்த ஸங்க்ரஹத்தில் 'அப்படிப்பட்ட இந்தப் பரப்ரம்மமாகிய புருஷோத்தமன் அதிகமான புண்ணியங்களின் கூட்டத்தினால் நாசமடைந்த எல்லா ஜன்மங்களிலும் செய்யப்பட்ட பாபங்களின் கூட்டங்களையுடையவனாயும், பரம புருஷனுடைய திருவடிகளில் ஶரணாகதி செய்வதினாலுண்டாக்கப்பட்ட அந்தப் பகவானுடைய அனுக்ரஹத்தையுடையவனாயும், ஸதாசார்யனுடைய உபதேசத்தோடு கூடிய ஶாஸ்த்ரங்களினால் அறியப்பட்ட தத்துவங்களின் உண்மையைப்பற்றிய ஜ்ஞானத்தை முன்னிட்டுத் தினந்தோறும் விருத்தியடைந்து வருகிற ஶாந்தி, தாந்தி, பரிசுத்தி, பொறுமை, கபடமில்லாமை, பயம், பயமில்லாமை, இவைகளின் காரணங்களைப்பற்றிய பகுத்தறிவு, தயை, ஹிம்ஸை செய்யாமை, முதலிய ஆத்ம குணங்களோடு கூடியதாயும் வர்ணாஶ்ரமங்களுக்குத் தகுந்ததாயும் பரமாத்மாவிற் காராதனங்களாயுமிருக்கிற நித்ய நைமித்திக கர்மங்களின் அனுஷ்டானத்துடன் கூடின ஶாஸ்த்ரங்களில் மறுக்கப்படுகிற கர்மங்களைச் செய்யாமையில் நிஷ்டையுடையவனாயும், பரமாத்மாவின் இரண்டு திருவடிகளிலும் ஸமர்ப்பிக்கப்பட்ட தன்னையும் தன்னைச்சேர்ந்த வஸ்துக்களையுடையவனாயும், அவனிடத்தில் பக்தியினால் செய்விக்கப்படுகிற எப்பொழுதும் ஸ்தோத்திரம் செய்வது, நினைத்துக்கொண்டிருப்பது, நமஸ்காரம் செய்வது, அவனுடைய திருநாமங்களைச்சொல்லுவது, அவனுடைய குணங்களைக் கேட்பது, அவைகளைச்சொல்லுவது, த்யானஞ்செய்வது, ஆராதனஞ்செய்வது. இவை முதலியவைகளினால் ப்ரீதியையடைந்தவனாய் மிகுந்த கருணையுடையவனாயிருக்கிற அந்தப் புருஷோத்தமனுடைய அனுக்ரஹத்தினால் போக்கப்பட்ட மனதின் தோஷத்தையுடையவனாயுமிருக்கிற புருஷனுக்கு வேறொரு ப்ரயோஜனத்தையும் ஆசைப்படாமல் எப்பொழுதும் செய்யப்படுகிற எல்லை இல்லாதமேன்மையையுடைய ப்ரியமாகிய மிகவும் விசதமான ப்ரத்யக்ஷம்போலே தோன்றுகிற த்யானமாகிய பக்தி ஒன்றினாலேயே அடையத்தகுந்தவன்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதுதான் பரமாசார்யனாகிய ஆளவந்தாராலும் 1 'கர்மயோகம் ஜ்ஞானயோகம்,

---

1 ஆகமப்ராமாண்யம்.

இவை இரண்டினாலும் பரிசுத்தம் செய்யப்பட்ட மனதையுடையவனுக்கு ஒரே நிஶ்சயத்துடன் கூடியதாயும் கடைசிவரையில் செய்யப்பட்டதாயுமிருக்கிற பக்தியோகத்தினால் அடையத்தகுந்தவன்' என்று சொல்லப்பட்டது. 25

நிரஸ்தநிகிலாஜ்ஞாநோ த்ருஷ்ட்வாத்மாநம் பராநுகம் ।
ப்ரதிலப்ய பராம் பக்திம் தயைவாப்நோதி தத்பதம் ॥ 26

ப — ரை] நிரஸ்தநிகிலாஜ்ஞாந: - போக்கடிக்கப்பட்ட எல்லாவிதமான அஜ்ஞானங்களை யுடையவனாய்க் கொண்டு, பராநுகம் - பரமாத்மாவிற்குக் கிங்கரனாகிய, ஆத்மாநம் - ஜீவாத்மாவை, த்ருஷ்ட்வா - பார்த்து, பராம் - மேலான, பக்திம் - பக்தியை, ப்ரதிலப்ய-அடைந்து, தயைவ - அந்தப் பரபக்தியினாலேயே, தத்பதம் - அந்தப் பகவானுடைய திருவடியை, அல்லது பரமபதத்தை, ஆப்நோதி - அடைகிறான். 26

இப்படி அவரவர்கள் அதிகாரத்திற்குத் தக்கபடி அனுஷ்டிக்கப்படுகிற மூன்றுவித யோகங்களினாலும் ஆத்மாவலோகனம் உண்டாகி அதின் வழியாக பரமபக்தி உண்டாகும் விதத்தையும், மிகவும் சிறந்ததாகிய அந்தப் பரமபக்தியே பரமாத்மாவை அடைவதற்கு ஸாதனமென்பதையும் சொல்லுகிறார்—இந்த ஶ்லோகத்தினால். உபாயத்திற்கு விரோதியான எல்லாவித அஜ்ஞானங்களும் நிவ்ருத்தியடைகிறது என்பது இவ்விடத்தில் 'நிரஸ்தநிகிலாஜ்ஞாந:' என்பதினால் சொல்லப்படுகிறது. 'பராநுகம்' என்பதற்கு பரமாத்மாவிற்குக் கிங்கரனாகிய அதாவது பரமாத்மாவிற்குச் சேஷமாயிருக்கை ஒன்றையே ஸ்வபாவமாகவுடைய என்றர்த்தம். அப்படியே [1] 'நாயம் தேவோ ந மர்த்யோ வா ந திர்யக் ஸ்தாவரோ(அ)பி வா । ஜ்ஞாநாநந்தமயஸ்த்வாத்மா ஶேஷோ ஹி பரமாத்மந:॥' என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஸர்வஜ்ஞனென்றுபேருடைய ருத்ரனும் மந்த்ரராஜபத ஸ்தோத்திரத்தில் 'தாஸபூதா: ஸ்வத: ஸர்வே ஹ்யாத்மாந: பரமாத்மந: । அதோ(அ)ஹமபி தே தாஸ இதி மத்வா நமாம்யஹம்॥' என்று சொல்லியிருக்கிறார். 'ப்ரதிலப்ய' என்பதற்குப் பரமாத்மாவின் அனுக்ரஹத்தினால் அடைந்து என்றர்த்தம். 'தயைவ' என்பதற்குப் பரமபக்தியாகிய பரிபாகத்தை அடைந்திருக்கிற அந்தப் பரபக்தியினாலேயே என்றர்த்தம். ஆகையினால் 'ஸர்வ

1 முதல் ஷட்கம், 553-ம் பக்கம் புட்நோட்டைப் பார்க்க.

என்பதினால் வேறொன்றையும் எதிர்பார்க்கிறதில்லை என்பதும் வேறொன்றின் வழியாகவல்லாமல் நேரில் ஸாதனமென்பதும் ஏற்படுகிறது. 'தத்பதம்' என்பது அவனுடைய திருவடியாகவுமாம். அன்றிக்கே 'பத்யதே (அடையப்படுகிறது)' என்கிற வ்யுத்பத்தியினால் 'பதம்' என்பது முக்தர்களால் அடையக்கூடியதாக ப்ரமாணங்களிலேற்பட்டிருக்கிற பரமாத்மாவினுடைய ப்ரக்ருதியின் ஸம்பந்தமில்லாத இடமாகவுமாம். பரமாத்மாவின் ஸ்வரூபமாகவுமாம். இது கீதையில் 1 'ப்ரஹ்மபூத: ப்ரஸந்நாத்மா ந சோசதி ந காங்க்ஷதி। ஸம: ஸர்வேஷு பூதேஷு மத்பக்திம் லபதே பராம்॥ பக்த்யா மாமபிஜாநாதி யாவாந் யச்சாஸ்மி தத்த்வத:। ததோ மாம் தத்த்வதோ ஜ்ஞாத்வா விசதே ததநந்தரம்॥' என்று இரண்டு ச்லோகங்களினால் சொல்லப்படுகிறது. 26

பக்தியோகஸ் ததர்தீ சேத் ஸம்க்ரைச்வர்யஸாதக:।
ஆத்மார்தீ சேத் த்ரயோ(அ)ப்யேதே தத்கைவல்யஸ்ய ஸாதகா:॥

ப-ரை] பக்தியோக: - பக்தியோகம், ததர்தீ சேத் - அந்த ஐச்வர்யத்தை விரும்பினனேயானால். ஸம்க்ரைச்வர்யஸாதக: - பூர்ணமான ஐச்வர்யத்திற்கு ஸாதனமாகிறது, ஆத்மார்தீ சேத் - ஆத்மாவை விரும்பினனேயானால், ஏதே - இந்த, த்ரய: அபி - கர்மயோகம், ஜ்ஞானயோகம், பக்தியோகம், இவைகள் மூன்றும், தத்கைவல்யஸ்ய - அந்த ஆத்மாவின் கைவல்யத்திற்கு, அதாவது ப்ரக்ருதி ஸம்பந்தமும் பகவானுடைய அனுபவமும் இல்லாமல் கேவலம் ஜீவாத்மாவை மாத்ரம் அனுபவிப்பதற்கு, ஸாதகா: - ஸாதகங்கள். 27

இப்படிப் பக்தியோகம் மோக்ஷத்திற்கு ஸாதனமென்பது சொல்லப்பட்டது. அதுவே நடுஷட்கத்தில் சொல்லியபடி அசேதனமான வஸ்துக்களின் மாறுதல்களை அனுபவிப்பதாகிய ஐச்வர்யத்திற்கும் ஸாதகம் என்று சொல்லுகிறார்—இந்த ச்லோகத்தினால். ஒரே பக்தியோகம் ஒன்றுக்கொன்று விருத்தங்களாகிய ஸம்ஸாரபந்தம் மோக்ஷம், இவைகளுக்கு ஸாதனமென்பது எப்படிப்பொருந்தும்? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் 'ததர்தீ சேத்' என்று சொல்லப்பட்டது. ஒரே கர்மத்திற்கு அந்தந்தப் பலங்களில் ஆசையினால் விசித்திரங்களான பலங்களுக்கு ஸாதகமாயிருக்கும் தன்மை உண்டென்பது 'எல்லா இஷ்டபலங்களைக் குறித்தும் ஜ்யோதிஷ்டோமம் ஸாதனம்' என்றர்த்தமுள்ள ச்ருதிவாக்யம் முதலியவைகளில் ப்ரஸித்தமாயிருக்கி

1 பகவத்கீதை-18-54-55.

றது. ப்ரம்மா முதலியவர்களினுல் கொடுக்கப்படுகிற ஐஶ்வர்யங்களை விட அதிகமாயிருக்கை இவ்விடத்தில் 'ஸஹ்ர' என்பதினுல் சொல்லப்படுகிறது. லோகத்திலும் சக்ரவர்த்தியை ஆஶ்ரயிப்பதற்கும், சிற்றரசனை ஆஶ்ரயிப்பதற்கும் பல ஸித்தியில் வ்யத்யாஸமுண்டென்பது காணப்பட்டிருக்கிறது. ப்ரம்மா முதலியவர்கள் ப்ரம்மா முதலியவர்களின் ஸ்தானத்தைக்கொடுக்க ஶக்தியுள்ளவர்களல்லவன்றோ. இது ப்ரம்மாவினுலேயே 1 'த்வயா ப்ராஜாபத்யம் கர்ம ஸர்வம் மயி நிவேஶிதம்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. மற்றோரிடத்திலும் 'ப்ரஹ்மகோடிஸஹஸ்ராணி விஷ்ணோராயுஷ வஹந்தி வை ப்ரஹ்மணோ ப்ராக்யாதஸ்ஸ ப்ராப்யதே நிதிஶாஶ்வதம் ॥' என்றிவை முதலியதும் சொல்லப்பட்டிருக்கிறது. ருத்திரனுடையதாகிய ஸ்தானமும் பகவானுல் கொடுக்கப்பட்டதென்று 'இந்த தேவன் உதாரனையும், எல்லோராலும் ப்ரார்த்திக்கத்தக்கவனையுமிருக்கிற விஷ்ணுவிற்குக் கிளையாகிய ருத்திரன் அவப்ருதத்தில் ஹவிஸ்ஸுக்களினுல் ருத்திரனுடையதாகிய பெருமையை அடைந்தானல்லவா' என்றர்த்தமுள்ள வாக்யத்தில் சொல்லப்படுகிறது. 'இந்த' என்பதற்குத் தன்னைவிட மற்றெல்லா தேவதைகளையும் விட வேறுபட்ட மேன்மையுடையவனுகை, ஶ்ருதி முதலியவைகளில் ப்ரஸித்தனுகிய என்றும், 'தேவன்' என்பதற்கு மற்றொருவர்க்கும் ஸாதாரணமல்லாத மிகவும் ஆஶ்சர்யமான ஒருவராலும் தடுக்கப்படாத விளையாட்டு, ஜயிக்கவேண்டுமென்கிற ஆசை, வார்த்தைகள், காந்தி, ஸ்தோத்திரம், முதலிய அழிவில்லாத, தோஷங்களுடன் ஸம்பந்தப்படாத எல்லையில்லாத மேன்மையுடைய கல்யாண குணங்களுக்கு இருப்பிடமாகிய என்றும், 'எல்லோராலும் ப்ரார்த்திக்கத்தக்கவனையும்' என்பதற்கு அவரவர்களின் இஷ்டபலம் கிடைப்பதற்காக யாசிக்கத்தகுந்தவனுயிருக்கிற' என்றும்,—'விஷ்ணுவிற்கு' என்பதற்கு எல்லா வஸ்துக்களிலும் வ்யாபித்திருப்பதையே ஸ்வபாவமாகவுடையவனுகையினுல் எல்லாவற்றிற்கும் அந்தர்யாமியாகிய நாயணனுக்கு என்றும், 'கிளையாகிய ருத்திரன்' என்பதற்கு அவருடைய ஶரீரமாகையினுலே அவருடைய அவயவமாகிய ருத்ரன் என்றும், 'வயா ஶாகா:' என்று யாஸ்கர் நிர்வசனம் செய்திருக்கிறூர். 'அவப்ருதத்தில் ஹவிஸ்ஸுக்களினுல்' என்பதற்கு ஸர்வமேதம் என்றுபேருடைய யாகத்தினுல் அந்த விஷ்ணுவிற்கு ஸமர்ப்பிக்கப்பட்ட தன்னுடைய ஆத்மாவரையிலுள்ள ஹவிஸ்ஸுக்களினுல் என்றும், 'ருத்திரனுடையதாகிய' என்பதற்கு ருத்திர

1 த்வயா - உன்னுல், ப்ராஜாபத்யம் - ப்ரம்மாவினுடையதாகிய, கர்ம - கார்யம், ஸர்வம் - எல்லாம், மயி - என்னிடத்தில், நிவேஶிதம் - வைக்கப்பட்டது.

ஞகிய தனக்கு இப்பொழுது கிடைத்திருக்கிற என்றும், அன்றிக்கே ப்ரம்மா, ருத்திரன், இந்திரன், முதலியவர்கள் பரம்பரையாக அநாதியாகையினல் ருத்ரர்களினுடைய தென்று ப்ரஸித்தமான என்றும், 'அடைந்தாரல்லவா' என்பதற்கு இது ப்ரஸித்தம் என்றும் அர்த்தம். இந்த ஶ்ருதியின் அர்த்தத்தை விசதப்படுத்த வேண்டுமென்கிற அபிப்ராயத்தினல் மஹாபாரதத்தில் 1 'ஈஹாதெவஸஹஸ்ராணி ஸர்வெஷாஹா ஹாக்ஷராதாநம் ஶெஷமெவாவஸு-ரிவ॥' என்று சொல்லப்பட்டது. 2 'ஸநகாவிஷ்ணு ருசயெ ஸ்ரூஷை ஸ்வ்யாதிகெரூாயஜா ஸ்வூதா। தந்நாபி த்வபுநா ஸ்ருஷ்டிஸம்ஹாராகாரகா॥' என்றிவை முதலிய வசனங்களிலுமு இந்த அர்த்தம் எல்லா இடங்களிலும் ப்ரஸித்தமாயிருக்கிறது. ஆகையினல் இது விஷயத்தில் விஸ்தாரமாகச் சொன்னதுபோதும். இப்படி அசேதன வஸ்துக்களை அனுபவிப்பதாகிய ஐஶ்வர்யத்திற்கு பக்தி ஸாதனம் என்பது சொல்லப்பட்டது. பிறகு சேதனமாகிய ஆத்மாவின் உண்மையை அனுபவிப்பதாகிய தாழ்ந்ததாகிய கைவல்யத்திற்கும் அந்தப் பக்தி யோகம் ஸாதகம் என்பதைத் தெரிவித்துக்கொண்டு ஜ்ஞானயோகம் கர்மயோகம் இவைகளும் வஸ்துவின் ஸ்வபாவத்தினல் பரமாத்மாவிற்கு ப்ரீதியை உண்டுபண்ணி அதின் வழியாக அந்தக் கைவல்யத்திற்கு ஸாதகங்கள் என்பது யுக்தம் என்கிற அபிப்ராயத்தினல் சொல்லுகிறார்—'ஶூணாயீ-வெஷ' என்றாரம்பித்து. அசேதனங்களை அனுபவிப்பதைப் பார்க்கிலும் பகவானுடைய அனுபவத்தைப்பார்க்கிலும் வேறுபட்ட ஸ்பாவத்தையுடைய அனுபவம் இவ்விடத்தில் 'ஐகெவஜ' என்னும் பதத்தினல் சொல்லப்படுகிறது. இந்த விஷயத்தில் சொல்லவேண்டியதெல்லாம் தாத்பர்ய சந்த்ரிகையில் நம்மால் விவரமாய் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. 27

ஐகாந்த்யம் ஹவதெஷாம் ஸநாதநாயிகாரிணாம்।
யாவக்ஷ்ராவ்ஷி வாஸுதெவாத்யஜஸாதெ॥ 28

ப - ரை] ஏஷாம் – இந்த, அயிகாரிணாம் - அதிகாரிகளுக்கு, ஹவதி – பகவானிடத்தில், ஐகாந்த்யம் – ஏகாந்தியாக இருக்கை, அதாவது வேறொரு தைவத்தையும் தொழாதவனுக இருக்கை, ஸநாதநம் - பொதுவானது, யாவக்ஷ்ராவ்ஷி - பகவானே அடைகிறவரையில், வாஸுதெ

1 இரண்டாம் ஷட்கம் 284-ம் பக்கம் புட்நோட்டைப்பார்க்க. 2 இரண்டாம் ஷட்கம் 283-ம் பக்கம் புட்நோட்டைப்பார்க்க.

வைக - பரமாத்மாவை விரும்பிக்கொண்டிருந்தானேயானால், அதாவது நடுவில் வேறு பலத்தில் ஆசைப்படாமலிருந்தானேயானால், தமேவ - அதையே, சதாமா - அழிவில்லாததாக, ப்ராப்நோதி - அடைகிறான். 28

இப்படி மேலான ஐச்வர்யம், கைவல்யம், பகவானை அடைவது, இவைகளை விரும்புகிறவர்களினால் செய்யவேண்டியதாகிய பக்தியின் ஸாரமாயும் பொதுவாயுமிருக்கிற ரூபத்தை விசதமாக நிரூபிக்கிறார்— இந்த (மூன்) பாதி ம்லோகத்தினால். இவ்விடத்தில் ஏகாந்தியா யிருக்கையாவது வேறொரு தேவதையையும் தனக்கு உத்தேம்யமாக உடைத்தாகாதவனாக இருக்கை.1 'ஏகாந்தீ ஸதா ஜ்ஞாநீ தேவதாந்தர வர்ஜிதః। தத்பக்தஸ்ததநந்யஸ்தத்ப்ரபந்நோ தேவகః॥' என்கிற அநுகீதையில் சொல்லப்பட்டிருக்கிற வசனமோவென்னில் ஜ்ஞானிகளுக்கு ஏகாந்தியாக இருக்கை எப்பொழுதும் இருக்கிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லப்படுகிறது. இவ்விடத்திலோவெனில் தங்கள் தங்கள் இஷ்டபலம் கிடைக்கும் வரையில் ஏகாந்தியாக இருக்கை இந்த மூன்றதிகாரிகளுக்கும் பொது என்று சொல்லப்படுகிறது. இத்தால் கர்மயோகம், ஜ்ஞானயோகம், இவைகளைச் செய்து கொண்டிருக்கும் தசையிலும் ஏகாந்தியாயிருக்கை ஏற்பட்டது. எப்படி என்னில் எல்லாத்தசையிலும் பகவானிடத்தில் ப்ரபத்தியை முன்னிட்டுக்கொண்டே செய்யவேண்டிய தவம்யமாகையினால். இப்படி அசேதனத்தின் அநுபவத்தை விடவும், தன்னுடைய ஆத்மாவின் அநுபவத்தை விடவும் வேறுபட்டதாகிய பகவானுடைய அநுபவத்தை வேண்டுகிறவனுக்கு மற்ற அதிகாரிகளைவிட வேறுபட்டதாகிய எப்பொழுதும் செய்யப்படுகிறதாகிய பக்தியின் மேன்மையினால் வேறொன்றினாலும் நடுவில் தாமதமில்லாமல் அழிவில்லாத பகவானுடைய ப்ராப்தி உண்டாகிறது என்று சொல்லுகிறார் - மேல்பாதி ம்லோகத்தினால். வேறு பலங்களில் ஆசையாகிற விக்னங்களினால் கெடுக்கப்படாதவனாக இருந்தால் தாமதமில்லாமல் பகவானை அடைந்து மறுபடியும் ஸம்ஸாரத்தை அடைகிறதில்லை என்றர்த்தம். இந்த அபிப்ராயத்தினால் 'தக (அது)' என்று நபும்ஸகலிங்கமாய் (ஒன்றன்பாலாய்)ச்சொல்லி இருக்கிறது. 28

ஜ்ஞாநீ து பரமைகாந்தீ ததாயத்தாத்மஜீவநः।
தத்ஸம்ம்லேஷ வியோகைகஸுகது:க்கஸ்ததேகதீः॥ 29

ப-ரை| ஜ்ஞாநீ து — ஜ்ஞானியோவெனில், பரமைகாந்தீ - மேற்

---

1 இரண்டாம் ஷட்கம், 54 ம் பக்கம் புட்நோட்டைப்பார்க்க.

சொல்லிய ஏகாந்திகளுக்குள் சிறந்தவன், ததாயத்தஜீவந: - அந்தப்பகவானுக்கு வசப்பட்டதன்னுடைய ஜீவனத்தையுடையவன். தத்ஸம்ஶ்லேஷவியோகைகஸுகது:க: — அந்தப்பகவானோடு சேருகிறது, அவனைவிட்டுப்பிரிவது, இவைகளையே தனக்கு ஸுகமாகவும் துக்கமாகவுமுடையவன், ததேகதீ:- அவனொருவனிடத்திலேயே செலுத்தப்பட்ட புத்தியையுடையவன். 29

பிறகு 1 'யே து ஶிஷ்டாஸ்த்ரயோ ஹ்யுக்தாஸ்தேஷாமேகாந்திநோ ஹி தே ... தா:| ஸர்வேஷ்வப்யநந்யபூர்ணா: ப்ரதிபுத்தா மோக்ஷகா:||' என்று அனுகீதையில் சொல்லப்பட்டவனும், 'யாவத் ப்ரதிபோதயந்த:' என்று கீழ்ச்சொல்லப்பட்டவனுமாகிய, அதிகாரியினுடைய மற்றொருவனுக்கும் ஸாதாரணமல்லாத விஶேஷத்தையும், அனுஷ்டானம் செய்வது, பலத்தையடைவது இவைகளின் விதத்தையும், அதைச் சொல்லுவதிலேயே இந்தச் ஶாஸ்த்ரத்திற்குத் தாத்பர்யமாகையினால் இது மோக்ஷ ஶாஸ்த்ரம் என்பதையும், இது முதல் நாலு ஶ்லோகங்களினால் விவரிக்கிறார். 'ஜ்ஞாநீ து' என்பதனால் 2 'ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்', 3 'மச்சித்தா மத்கதப்ராணா:' என்றிவை முதலியது ஜ்ஞாபகப்படுத்தப்படுகிறது. சிறந்தவனாகிய ஏகாந்தி, பரமைகாந்தி எனப்படுகிறான், அதாவது ஏகாந்திகளுக்குள் சிறந்தவன் என்றர்த்தம். மிகவும் சிறந்ததாகிய ஒரேவிதமான நிஶ்சயம், அதாவது வேறொரு தைவத்தையும் உத்தேசிக்காத நிஶ்சயம் இவனுக்கு இருக்கிறது என்பதினாலாவது பரமைகாந்தியென்னப்படுகிறான். அதாவது வேறொரு தைவத்தையும் உத்தேஶ்யமாகவுடைத்தாகாமை மாத்திரமில்லை, பின்னை எதுவென்னில் வேறொரு ப்ரயோஜனத்தையும் விரும்பாமலிருப்பதும் இவனுக்குண்டென்றர்த்தம். இவ்விடத்தில் 'ஸம்ஶ்லேஷம்' ஆவது மனது, வாக்கு, ஶரீரம், இவைகளினால் செய்யப்படுகிற பகவானுக்கிஷ்டமாகிய ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட ஆராதனங்களைச் செய்வது. 'வியோகம் (பிரிவு)' ஆவது இவைகள் விட்டுப்போவது இப்படியே ருஷிகள் 4 'யந்முஹூர்த்தம் க்ஷணம் வாபி வாஸுதேவோ ந சிந்த்யதே। ஸா ஹாநிஸ்த

1 இரண்டாம் ஷட்கம், 157-ம் பக்கம், புட்நோட்டைப்பார்க்க.

2 பகவத்கீதை-7-18. 3 பகவத்கீதை-10-9.

4 முஹூர்த்தம் - ஒரு முஹூர்த்த காலமாவது, க்ஷணம்வாபி - ஒரு க்ஷண காலமாவது, வாஸுதேவ: — பகவான், நசிந்த்யதே - த்யானிக்கப்படவில்லை, இதி யத் - என்கிற எதுவோ, ஸா - அது, ஹாநி: - நஷ்டம், தத் - அது, மஹத்-பெரிய, சித்ரம் - தோஷம், ஸாச - அதுவே, ப்ராந்தி: - ப்ரமம், ஸாச - அதுவே, விக்ரியா-

மஹச்சி²த்³ரம் ஸா ப்⁴ராந்தி꞉ ஸா ச விக்ரியா ॥ ஏகஸ்மிந்நப்யதிக்ராந்தே முஹூர்த்தே த்⁴யாநவர்ஜிதே । த³ஸ்யுபி⁴ர்முஷிதேநேவ யுக்தமாக்ரந்தி³தும் ப்⁴ருஶம் ॥' என்றும் சொல்லியிருக்கிறார்கள். அவன் ஒருவனிடத்திலேயே செலுத்தப்பட்ட சிந்தையையுடையவன் 'ததே³கதீ⁴꞉' என்னப்படுகிறான். 29

ப⁴க³வத்³த்⁴யாநயோகோ³க்தி வந்த³நஸ்துதிகீர்தநை꞉ ।
லப்³தா⁴த்மா தத்³க³தப்ராணமநோபு³த்³தீ⁴ந்த்³ரியக்ரிய꞉ ॥ 30

ப-ரை] ப⁴க³வத்³த்⁴யாநயோகோ³க்திவந்த³நஸ்துதிகீர்தநை꞉ — ப⁴க³வத் - பகவானைப்பற்றிய, த்⁴யாந - த்யானம் செய்தல், யோக³ - ஸாக்ஷாத்கரித்தல், அன்றிக்கே அவனுடைய திவ்யதேசங்களுக்குச் செல்லுதல், உக்தி - சொல்லுதல், வந்த³ந — நமஸ்காரம் செய்தல், ஸ்துதி - ஸ்தோத்திரம்செய்தல், கீர்தநை꞉ - திருநாமங்களைச் சொல்லுதல், இவைகளினால், லப்³தா⁴த்மா - அடையப்பட்ட தன்னுடைய ஆத்மாவையுடையவனாயும், தத்³க³த - அந்தப் பகவானை யடைந்திருக்கிற, ப்ராண - ப்ராணவாயு, மந꞉ — மனது, பு³த்³தி⁴ - புத்தி, இந்த்³ரிய - இந்த்ரியங்கள், இவைகளின், க்ரிய꞉ - கார்யங்களை யுடையவன் (மேற்கூறிய ஜ்ஞானி). 30

'த்⁴யாநம்' ஆவது இவ்விடத்தில் எப்பொழுதும் இடைவிடாமல் நினைத்துக்கொண்டிருத்தல். 'யோக³ம்' ஆவது அதினாலுண்டாகிய ஸாக்ஷாத்காரம், அன்றிக்கே உயர்ந்த க்ஷேத்திரம் முதலியவைகளில் இருக்கிற பகவானிடத்தில் செல்லுதலாகவுமாம். அப்படியே 1 'பாதௌ ந்ருணாம் தௌ த்³ருமஜந்மபா⁴ஜௌ க்ஷேத்ராணி நாநுவ்ரஜதோ ஹரேர்யௌ ।' என்றும், 2 'யோக³ஸ்து த்³விவித⁴꞉ ப்ரோக்தோ பா³ஹ்யாப்⁴யந்த

---

- விகாரம், அதாவது ஒரு க்ஷணகாலமாவது பகவானை த்யானம் செய்யாமை இவ்வளவு விதமான ஆபத்திற்குக் காரணம் என்று தாத்பர்யம். ஏகஸ்மிந்நபி - ஒரு, முஹூர்த்தே - முஹூர்த்தமும், த்யானவர்ஜிதே - பகவானைப்பற்றிய த்யானமில்லாமல், அதிக்ராந்தே - தாண்டிப்போயிருக்கும் பொழுது, தஸ்யுபி: - திருடர்களினால், முஷிதேநேவ - அபஹரிக்கப்பட்டவன் போல, ப்ருசம் - மிகவும், ஆக்ரந்திதும் - அழுவதற்கு, யுக்தம் - உசிதம்.

1 யௌ - எந்த, ந்ருணாம் - மனிதர்களினுடைய, பாதௌ-கால்கள், ஹரே:- பகவானுடைய, க்ஷேத்ராணி - திவ்யக்ஷேத்திரங்களைக் குறித்து, நாநுவ்ரஜத: - போகவில்லையோ, தௌ - அவைகள், த்ருமஜந்மபாஜௌ - மரத்தின்ஜன்மத்தை அடைந்தவைகள்.

2 யோக: - யோகமானது, பாஹ்யம்-பாஹ்யம் என்றும், ததா - அப்படியே, ஆப்யந்தரம் - ஆப்யந்தரம் என்றும், த்விவித:-இரண்டுவிதமாக, ப்ரோக்த: - சொ

ரம் ததா। பாஹ்யம் பஹி: க்ரியாபேக்ஷாந்தரம் த்யானமுச்யதே ॥ என்றும் சொல்லி இருக்கிறார்கள். 'உக்தி' ஆவது கேழ்க்கவேண்டுமென்கிற ப்ரத்தையுடைய அதிகாரிகளுக்குச்சொல்லுதல். 'வந்தனம்' ஆவது மூன்று கரணங்களினாலும்நமஸ்காரம் செய்தல். 'ஸ்துதி:' ஆவது குணங்களைச் சொல்லுதல் 'கீர்த்தனம்' ஆவது அந்தந்தக் குணங்கள், அந்தந்தவிபவங்கள், அந்தந்த வ்யாபாரங்கள், இவைகளை உள்ளடக்கிக் கொண்டிருக்கிற அவனுக்கே அஸாதாரணமான திருநாமங்களைச்சொல்லுதல். இவைகளினால் 'லப்தாத்மா (அடையப்பட்ட தன்னுடைய ஆத்மாவை யுடையவனாயும்)', அப்படி அவைகளைச் செய்யாவிடில் தன்னை வஸ்துவல்லாததாக எண்ணிக்கொண்டிருப்பவன் என்று தாத்பர்யம். அன்றிக்கே இவைகளைச்செய்யாவிடில் தன்னுடைய ஶரீரம், இந்த்ரியம், இவைகளெல்லாம் நைந்துபோய் விடும் என்று தாத்பர்யமாகவுமாம். ப்ராணன் முதலியவைகளின் கார்யங்கள் அந்தப் பகவானை யடைந்திருப்பதாவது அந்தப்பகவானுடைய அனுபவம் இல்லாவிடில் சிதறிப்போய்விடுகிறபடியினால் என்று நினைக்கவேண்டியது. அன்றிக்கே 1 'யத்கரோஷி யதஶ்நாஸி' என்று சொல்லி இருக்கிற ந்யாயத்தினால் ஸ்வபாவத்திலேற்பட்டது, ஒரு ப்ரயோஜனத்திற்காக ஏற்பட்டது, ஶாஸ்த்ரங்களினாலேற்பட்டது, ஆகிய கர்மங்களைப் பகவானிடத்தில் ஸமர்ப்பணம் செய்தலாகவுமாம். மனதாவது ஸங்கல்பம் என்கிற வ்யாபாரத்தையுடையமனது. அதுவே நிஶ்சயமாகிற வ்யாபாரம் புத்தி என்னப்படுகிறதாகவுமாம் அப்படியே ஶாரீரக பாஷ்யத்தில் 'நிஶ்சயம், அபிமானம், சிந்தை, முதலிய வ்யாபாரங்களின் வ்யத்யாஸங்களினால் மனமே புத்தி, அஹங்காரம், சித்தம், என்னும் பதங்களினால் சொல்லப்படுகிறது' என்று சொல்லப்பட்டது. 'இந்த்ரிய' என்னும் பதம் இவ்விடத்தில் கோபலீவர்த்த ந்யாயத்தினால் வெளிஇந்த்ரியங்களைச் சொல்லுகிறது. 30

**நிஜகர்மாதி பக்த்யந்தம் குர்யாத் ப்ரீத்யைவ காரித:।**
**உபாயதாம் பரித்யஜ்ய ந்யஸ்யேத் தேவே து தாமபீ:॥ 31**

ப - ரை] நிஜகர்மாதி - தன்னுடைய வர்ணாஶ்ரம தர்மங்கள் முதல், பக்த்யந்தம் - பக்திவரையிலுமுள்ள கர்மத்தை, ப்ரீத்யைவ - ப்ரீதியினாலேயே, காரித: - செய்விக்கப்பட்டவனாய்க்கொண்டு, குர்யாத் -

---

ல்லப்பட்டது, பாஹ்யம் - பாஹ்யயோகம், பஹி:க்ரியாபேக்ஷம்-வெளிஇந்த்ரியங்களின் வ்யாபாரங்களை அபேக்ஷிக்கிறது, ஆந்தரம்-ஆப்யந்தரமானது, த்யானம்-த்யானமாக, உச்யதே - சொல்லப்படுகிறது. 1 பகவத்கீதை-9-27.

செய்யவேண்டும், உபாயதாம் - உபாயமாக இருக்கையை, பரித்யஜ்ய - விட்டுவிட்டு, அதாவது இவைகள் உபாயங்கள் என்கிற புத்தியைக் கீழ்ச் சொல்லிய தர்மங்களில் விட்டுவிட்டு, தாம் - அந்த உபாயமாக இருக்கையை, தேவே - பகவானிடத்தில், அபீ: - பயமில்லாதவனைக்கொண்டு, ந்யஸ்யேத் - வைக்கவேண்டும். 31

இப்படிப்பட்ட அதிகாரிக்கு 1 'ஸததம் கீர்த்தயந்தோ மாம்' என்று சொல்லி இருக்கிறவிதமாக வர்ணாஶ்ரம தர்மங்களுக்கு லோபம் வர வேண்டியதாகுமே என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—இந்த ஶ்லோகத்தினால் எப்பொழுதும் பகவானுக்குக் கைங்கர்யம் செய்வதொன்றையே ஸ்வபாவமாகவுடைய முக்தனுக்குப்போல இந்த அதிகாரிக்கும் பகவானுக்குக் கைங்கர்யம் செய்வது அவனுடைய ஆஜ்ஞையை அனுஸரித்து நடப்பதில் உண்டாகிய ப்ரீதியினாலேயே ஶாஸ்த்ரங்களுக்குத் தக்கபடியும் அதிகாரங்களுக்குத் தக்கபடியும், காலங்களுக்குத்தக்கபடியும் எல்லாம் பொருந்தும். அப்படிக்கில்லாவிடில் 2 'ஸந்த்யாஹீனோऽஶுசிர்நித்யமனர்ஹ: ஸர்வகர்மஸு' என்றிவை முதலிய வசனங்களிருக்கிறபடியினால் பகவானை ஆராதனம் செய்வது, முதலிய கார்யங்களிலும் அதிகாரமில்லாமல் போகவேண்டி வரும். ஆகையினாலே யோக்யதை உண்டாவதற்காகவும், கிடைத்தபாகம் தவறிப்போகாமலிருப்பதற்காகவும், மேல்மேல் வ்ருத்தியடைவதற்காகவும், நன்றாக உறுதியாய் உபாயம் முடிவுபெற்றவனுக்கும் தன்னுடைய அனுஷ்டானத்தினால் அபலரையும் ப்ரவ்ருத்திக்கும்படி செய்வதாகிய பகவானுடைய உத்திரவுக்குக் கீழ்ப்படிந்து நடப்பதற்காகவும், அவஶ்யமாகச் செய்ய வேண்டியவைகளாகிய கர்மங்களைப்பற்றியும் ஶாஸ்த்ரவிதியை யோசிக்காமல் மிகவும் ப்ரியமான பர்த்தா, ஸ்நேஹிதன், பிள்ளை முதலியவர்களுக்கு உபசாரம் செய்வதைப்போல ப்ரீதியே ஜ்ஞானியை ஏவுகிறது என்று தாத்பர்யம். அப்படியே ஶாஸ்த்ரங்களிலும் 3 'யதா யுவானம் ராஜானம் யதா வ மதஹஸ்தினம் । ததைவ ஹரிம் தேவமுபசரேத் ॥' என்றும், மற்றொரு ஸம்ஹிதையில் 4 'யதா ப்ராப்தம் ப்ரியாதிதிம் ததா பகவந்தம் அர்ச்சயேத்

1 பகவத்கீதை-9-14. 2 இரண்டாம் ஷட்கம்-86-ம் பக்கம்,புட்நோட்டைப்பார்க்க.

3 பாஞ்சராத்திரம். யுவாநம்-யுவாவாகிய, ராஜாநம்-ராஜாவை, யதா - எப்படியோ, மதஹஸ்திநம் - மதம்பிடித்த யானையை, யதா - எப்படியோ, ததைவ - அப்படியே, ஹரிம் - பகவானை, உபசரேத் - உபசாரம் செய்யவேண்டும்.

4 ப்ராப்தம் - தன்வீட்டிற்கு வந்திருக்கிற, ப்ரியாதிதிம் - இஷ்டமான விருந்தாடியை, யதா - எப்படியோ, ததா - அப்படி, பகவந்தம்-பகவானை, அர்ச்சயேத்-ஆராதனம் செய்யவேண்டும்.

யெக' என்றும் சொல்லப்படுகிறது 'ஷஎவ' என்பதினால் அபிப்ராயத்தில் கொள்ளப்பட்ட மற்றொரு அர்த்தத்தையும் விவரிக்கிறார்—'உ‌பாயதா' என்றாரம்பித்து. முக்தர்களின் வ்யாபாரங்களைப்போல இவைகளே ஸ்வயமே ஸாதகமாயிருப்பதினாலும் க்ஷணகாலத்தில் செய்துமுடிந்து விடுகிற கர்மம் காலாந்தரத்தில வரப்போகிற பலத்திற்கு ஸாதனம் என்பதில் தோஷங்களை அறிவதினாலும், இவனுக்குத் தன்னுடைய வ்யாபாரத்தில் மோக்ஷத்திற்கு இதுவே உபாயம் என்கிற புத்தி உண்டாகாது என்று தாத்பர்யம். ஆகையினால் அந்தந்தக் கர்மங்களினால் ஆராதிக்கப்பட்ட பகவானே யல்லவோ எல்லாவிடத்திலும் உபாயம். க்ஷணகாலத்தில் செய்து முடிக்கப்படுகிற அந்தந்தக் கர்மங்களின் ஸ்வரூபமாவது அவைகளினால் உண்டாக்கப்பட்ட அந்தப் பகவானுடைய ப்ரீதியைத் தவிர வேறொரு ப்ரமாணங்களிலேற்படாத அபூர்வம் முதலியதாவது உபாயமல்ல. ஆகையினால் 1 'மாமேகம் ஶரணம் வ்ரஜ' என்று சொல்லுகிற அந்தப் பகவானிடத்திலேயே உபாயம் என்கிற புத்திசெய்யத்தக்கது என்று சொல்லுகிறார்—'ந்ய‌வெஸ்யக' என்றாரம்பித்து. தன்னை ஆஶ்ரயிக்காதவர்களை ஸம்ஸாரத்தில் கட்டுவதும் ஆஶ்ரயித்தவர்களை அதிலிருந்து விடுவிப்பதும் பகவானுடைய தன் மஹிமைக்குத் தகுந்ததாகிய விளையாட்டு என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'தெவெ' என்று. 2 'அப்படிப்பட்டவனாகிய தேவனை' என்றர்த்தமுள்ள ஶரணமாக அடையப்படுகிற பகவானைப் பற்றிய ஶ்ருதிவாக்யத்தைக்குறிப்பதற்காக இவ்விடத்தில் 'தெவ' என்னும் பதம் சொல்லப்பட்டிருக்கிறது. காருண்ட கருணை, ஸௌஶீல்யம், வாத்ஸல்யம், ஔதார்யம் முதலிய குணங்களுக்கு இருப்பிடமாயும், 3 'ஶிஷ்யஸ்தெஷ ஶரண்யஶ்ச', 4 'ஸக்ருதெவ ப்ரபந்நாய', 5 'அபிசெத் ஸுதுராசாரோ பஜதெ மாமநந்யபாக்', 6 'மாமெவைஷ்யஸி', 7 'ஸர்வபாபெப்யோ மோக்ஷயிஷ்யாமி' என்று சொல்லுகிறவனாயும், வேறொரு கதியுமில்லாதவர்களுக்கு ஶரண்யனாயும் தானே உபாயமாகவும் இருக்கிற அந்தப் பகவானிடத்தில் என்றர்த்தம். தன்னுடைய அபராதங்கள் அவனுடைய ஸ்வதந்த்ரனாயிருக்கும் தன்மை, அவனுடைய ஸங்கல்பத்திற்குவசப்பட்டு நடக்கிற ப்ரம்மா, ருத்திரன், இந்திரன், முதலிய தாழ்ந்ததேவதைகள் இவைகளைப்பற்றியபயம் ஒன்றும் அடையத்தக்கதல்ல என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'மாஶுசः' என்று. 31

---

1 பகவத்கீதை-18-66. 2 ஶ்வேதாஶ்வதரம்.
3 ராமாயணம் - யுத்தகாண்டம்-18-1. 4 ராமாயணம் - யுத்தகாண்டம்-18.
5 பகவத்கீதை-9-30 6 பகவத்கீதை-18-65. 7 பகவத்கீதை-18-66.

ஸாகாங்க்ஷாத்யந்தாஸெளஹ்யகாம்திஸ்தந்தத்ஸௌவாயாதி |
தத்ப்ரயோஜநமிதம் ஶாஸ்த்ரமிதி கீதார்த்தஸங்க்ரஹ: ‖　　32

ஸ்ரீ ஆளவந்தாரருளிச்செய்த

ஸ்ரீகீதார்த்த ஸங்க்ரஹம் முற்றிற்று.

நீளவந்தின்று விதிவகையால் நினைவொன்றிய நாம்
மீளவந்தின்னம் வினை யுடம்பொன்றி விழுந்துழலாது
ஆளவந்தாரெனவென் றருள்தந்து விளங்கியசீர்
ஆளவந்தா ரடியோம் படியோ'இனி அல்வழக்கே.

ஸ்ரீ ஆளவந்தார் திருவடிகளே ஶரணம்.

ப - ரை] ஸாகாங்க்ஷ - ஒரே நிஶ்சயத்துடன் கூடிய, அத்யந்த - அழிவில்லாத, தாஸ்யைக - கைங்கர்யம் ஒன்றிலேயே, ரதி: - ஆசையுடையவனாயிருந்து, தத்பதம் - அந்தப் பகவானுடைய திருவடியை, ஆப்நோதி - அடைவான், இதம் - இந்த, ஶாஸ்த்ரம் - கீதாஶாஸ்த்ரம், தத்ப்ரதாநம் - இந்த அர்த்தத்தை முக்கியமாகவுடையது, இதி - என்று, கீதார்த்தஸங்க்ரஹ: - கீதையின் அர்த்தத்தைப்பற்றிய சுருக்கம்.　　32

இப்படி இருந்துகொண்டு வேறொரு தடங்கலினால் கெடுக்கப்படாதவனுக்குத் தன்னுடைய இஷ்டப்படி பலம் கிடைக்கிறதென்று சொல்லுகிறார்—இந்த ஶ்லோகத்தினால். பரமைகாந்திகளின் கைங்கர்யங்களைச் சொல்ல ஆரம்பித்து அது தடங்கலில்லாமல் நிறைவேறு மென்பது ஸ்ரீ பௌஷ்கரஸம்ஹிதையில் 1 'ப்ரவ்ருத்திகாலாதாரப்ய ஆத்மலாபாவ ஸாநிகம் | யத்ராவகாஶோ விக்நாநாம் விந்த்யதே நகதாசந ‖' என்று சொல்லப்பட்டது. இதையே அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு ஸ்ரீஸாத்வதஸம்ஹிதையில் 2 'ஸங்கல்பாதேவ பகவாந் தத்வதோ பாவி

1 பௌஷ்கர ஸம்ஹிதை. ப்ரவ்ருத்தி காலாதாரப்ய - ஆரம்பிக்கும் காலம் முதல்கொண்டு, ஆத்மலாபாவ ஸாநிகம்-தன்னை அடைவது வரையிலும், யத்ர-எந்த-தர்மத்தில், விக்நாநாம் - தடங்கல்களுக்கு, அவகாச: - இடமானது, கதாசந - எப்பொழுதும், நவித்யதே - இல்லையோ.

2 பகவாந் - பகவானானவர், தத்வத: - உண்மையாக, பாவிதாத்மநாம் - த்யானம் செய்யப்பட்டதன் ஸ்வரூபத்தை யுடையவர்களுக்கு, ஸங்கல்பாதேவ - தன்னுடைய ஸங்கல்பத்தினாலேயே, வ்ரதாந்தம் - அவனால் குறிக்கப்பட்ட முடிவை யுடைய, அகிலம் - எல்லா, காலம் - காலத்தையும், அம்ருதேந - அம்ருதத்தினால், ஸேசயதி - நனைக்கிறார்.

காதநாம । ஸர்வகாமானாமபி ப்ராப்தயே மர்த்யேந ॥', 1 'ஜ்ஞா-
த்வைவ பந்தம் ஸதைவ பவிதவ்யம் ஸதைவ ஹி । ப்ராப்தயே ஸர்வ-
காமானாம் ஸம்ஸாரபயபீருணா ॥' என்று சொல்லப்பட்டது. ஆகை-
யினால் 2 'ஶ்ரூயதே பகவத்பக்திமுத்வஹதாம் ந்ருணாம் ॥
ஸம்ஸாரந்யூநதாபீதாஸ்த்ரிதசா: பரிபந்திந: । ஸத்யம் ஶதேந
விக்நானாம் ஸஹஸ்ரேண ததா தப: । விக்நாயுதேந கோவிந்தே ந்ரு-
ணாம் பக்திர்நிவார்யதே ।' என்றிவை முதலிய வசனம் பரமபக்தி
என்னும் அவஸ்த்தை உண்டாவதற்கு முந்திய தசையைப்பற்றியது
என்று நினைக்கவேண்டும். இவ்விடத்தில் பூமவித்யையிலே போல
ஐஶ்வர்யம் முதலிய தாழ்ந்த புருஷார்த்தங்களை நிரூபித்திருப்பது
பரமாத்மாவை அடைவதாகிய ப்ரதானமான ப்ரயோஜனத்தின்
மேன்மையை நிரூபிப்பதற்காக. இப்படியே ஸாத்வத ஸம்ஹிதை-
யிலும் 3 'ப்ரத்யயார்த்தம் மோக்ஷஸ்ய ஸித்தய: ஸம்ப்ரகீர்த்திதா:'
என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையினால் இந்த ஶாஸ்த்ரம்
மோக்ஷத்தையே முக்யமான ப்ரயோஜனமாகவுடையது என்கிற அபி-
ப்ராயத்தினால் சொல்லுகிறார்—'தஸ்யோபாயம்' என்றாரம்பித்து இவ்-
விடத்தில் அவரவர் அதிகாரத்திற்குத்தக்கபடி ஶரணாகதி, பக்தியோ-
கம், இவைகளாகிய உபாயங்களில் நிஷ்டையினால் பகவானை அடை-

---

1 மர்த்யேன - மனிதனால், ஸர்வகாமானும் - காம்ய பலங்கள் எல்லாவற்றி-
னுடையவும், ப்ராப்தயே - அடைவதின் பொருட்டு, ஸம்ஸார பயபீருணா - ஸம்-
ஸாரத்திலுண்டாகிய பயத்தையுடையவனாகவே, பந்தம் - ஸம்ஸார பந்தத்தை,
ஜ்ஞாத்வா - தெரிந்துகொண்டு, ஸதைவ—எப்பொழுதும், பவிதவ்யம் - இருக்க
வேண்டும், அதாவது காம்யபலங்களை அடைவதைப் பற்றித் தனக்கு ஸம்ஸார
பந்தத்தை உண்டாக்கக் கூடியது இதென்று தெரிந்துகொண்டு அப்படி ஸம்-
ஸாரத்திலிருந்து பயந்தவனாகவே இருக்கவேண்டும்.

2 கோவிந்தே - பகவானிடத்தில், பக்திம் - பக்தியை, உத்வஹதாம் - செய்-
துகொண்டிருக்கிற, ந்ருணாம்-ஜனங்களுக்கு, ஸம்ஸார ந்யூநதாபீதா:-தங்கள் ஸம்-
ஸாரங்கள் குறைந்துவிடுகிறார்கள் என்று பயந்திருக்கிற, த்ரிதசா:-தேவதைகள்,
பரிபந்தின:—தடை செய்கிறவர்கள், என்று ஶ்ரூயதேகலு - கேழ்க்கப்படுகிறதல்-
லவா. ஸத்யம்-மெய்வார்த்தையானது, விக்நானும் - தடைகளினுடைய, ஶதேந-
நூறினாலும், ததா-அப்படியே, தப:-தபஸ்ஸு, ஸஹஸ்ரேண-ஆயிரத்தினாலும்,
ந்ருணாம் - மனிதர்களுக்கு, கோவிந்தே - பகவானிடத்தில், பகதி:-பக்தியானது,
விக்நாயுதேந-பதினாயிரம் விக்னங்களினாலும், நிவார்யதே - தடுக்கப்படுகிறது.

3 ஸாத்வத ஸம்ஹிதை. மோக்ஷஸ்ய - மோக்ஷத்திற்கு அதாவது மோக்ஷத்-
தைப்பற்றி, ப்ரத்யயார்த்தம் - நம்பிக்கை உண்டாவதற்காக, ஸித்தய:-மற்ற ஸித்தி-
கள், ஸம்ப்ரகீர்த்திதா:-சொல்லப்பட்டதுகள்.

கிறவர்களாக நிரூபிக்கப்பட்ட பரமைகாந்தியாவது அவனால் அடையப் படுகிற பரமாத்மாவாவது 'தஸ' என்னும் பதத்தினால் சொல்லப்படுகி றது. பிறகு இவ்விடத்தில் பௌத்தர்கள், ஜைனர்கள் இவர்களுக்கு ஸமமான சங்கராசார்யர் முதலியவர்களின் க்ரந்தங்கள் பகவானுடைய அபிப்ராயத்திற்கு விருத்தமானவைகள் என்று தெரிவிப்பதற்காகவும், கீழ்ச்சொல்லிய ஸங்க்ரஹத்தில் சொல்லிய விதமாகத் தம்முடைய சிஷ் யர்களுக்கு உள்ளபடியான கீதையின் எல்லா அர்த்தங்களின் விஸ்தா ரத்தைத் தெரிவிப்பதற்காகவும் நிகமனம் செய்கிறார்—'இதி' என்றாரம் பித்து. ஸத்வகுணத்தில் நிஷ்டையுடைய பூர்வாசார்யர்களின் பாம் பரையால் கிடைத்த உத்தமமான கீதையின் அர்த்தமே இப்படியே ஒழிய குத்ருஷ்டிகளினால் தங்கள் இஷ்டப்படி ஊஹிக்கப்பட்டதல்ல அப் படிப்பட்ட இந்த அர்த்தம் தன்னுடைய யோக ப்ரபாவத்தினால் உள் ளங்கைக்குள்ளடக்கிப் பார்க்கப்பட்ட பரமாத்மாவினுடைய இரண்டு வித விபூதிகளையுமுடைய பகவானாகிய நாதமுனிகள் நியமனத்திற்குக் கீழ்படிந்தவராகிய ஸ்ரீமத் ராமமிஸ்ரர் (மணக்கால் நம்பி) இடத்திலிரு ந்து அநேக ஶாஸ்த்ரங்களை அறிந்தவராகிய நம்மால் அநேகம் தட வை கேழ்க்கப்பட்ட பகவத்கீதையின் அர்த்தங்களின் விஸ்தாரத்திற் குச் சுருக்கம் இது என்று நினைத்து மோக்ஷத்திலாசையுடையவர்களி னால் க்ரஹிக்கத்தக்கது என்று தாத்பர்யம். 32

ஸாரம் ஹரேரர்ஜுநஸாரதீய வசவஸாரம்
　ஸ்ரீ யாமுநேயோதிதம்
விஸ்பஷ்டைரிதி வேங்கடேஶகவி
　வ்யாசஷ்ட பாஷ்யாக்ஷரைஃ ।
யச்சாதேஷு கர்மஸ்வபி பாஹ்ய
　கர்ஹநாகோர்ணாஹர்ணாஸூக்திபிஃ
ஜம்வாநேவுஜயவொஷணாவண
　வதேண விஜ்ஞாண நிஜ்ஞாதிஶஃ ॥

ப - ரை] ஸ்ரீயாமுநேயோதிதம் - ஸ்ரீ ஆளவந்தாரினால் எடுத்துரைக் கப்பட்ட, ஹரேரர்ஜுநஸாரதீயவசவஸாரம் - அர்ஜுநனுக்கு ஸாரதியாயிருக் கிற பகவானுடைய வார்த்தையாகிய கீதையின், ஸாரம் - ஸாரார்த்தத் தை, வேங்கடேஶகவிஃ - ஸ்ரீ வேங்கிடநாதனென்கிற கவி, இதி -இவ் விதமாக, விஸ்பஷ்டைஃ - மிகவும் ஸ்பஷ்டங்களாயிருக்கிற, பாஷ்யாக்ஷ ரைஃ - பாஷ்யத்திலிருக்கும் வார்த்தைகளைக்கொண்டு, வ்யாசஷ்ட-வ்யா

க்யானம் செய்தார், யதாஜேஷு யச - எந்த வேங்கடநாதனென்கிற கவியினுடைய, வாஜேஷு - வாதங்களில், அன்றிக்கே, எந்த வ்யாக்யானங்களினுடைய வாக்யங்களில். அன்றிக்கே எந்தப் பாஷ்யத்தினுடைய வாதங்களில், குத்ருஷ்டி ... - குத்ருஷ்டிகள், வேதபாஹ்யர்கள், இவர்களின் வஞ்சனையினுலுண்டாகிய கோலாஹலங்களை அடக்கக்கூடிய, ஜவாஜைஃ - மிகவும் வேகமாகப் பரவுகிற, ஜயஜெஷணாவணாவஜெணஃ - ஜயத்தைத் தெரிவிக்கக் கூடிய ஶப்தங்களின் கணகணஎன்னும் ஓசையினுல், திஶஃ-திக்குக்கள், விநிராணநிராஃ - போக்கடிக்கப்பட்ட தூக்கத்தை உடையதுகளோ

*கவிதார்க்கிக ஸிம்ஹமாயும், ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரராயும்*

*வேதாந்தாசார்யருமாகிய ஸ்ரீமந்நிகமாந்தமஹா தேஶிகனருளிச்செய்த*

ஸ்ரீ கீதார்த்த ஸங்க்ரஹ ரக்ஷை முற்றிற்று.

*சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே ஶரணம்.*

கவிதாகிக ஸிம்ஹாய கல்யாண குணஶாலிநே ।
ஶ்ரீமதே வெஂகடேஶாய வெதாந்த குரவே நமஃ ॥



*ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகனருளிச்செய்த*

## ஸ்ரீ கீதார்த்த ஸங்க்ரஹப் பாட்டு.

*சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே ஶரணம்.*

வன்பற்றறுக்கு மருந்தென்று மாயவன் றானுரைத்த
இன்பக்கடலமு தாமென நின்றவிக் கீதைதன்னை
அன்பர்க் குரைப்பவர் கேட்பவரா தரித்தோதுமவர்
துன்பக்கடலில் துளங்குகை நீங்கித் துலங்குவரே. 20

ப - ரை] வன் - உறுதியான, பற்று — ஸம்ஸாரபந்தத்தை. அறுக்கும் - அறுக்கக்கூடியதாகிய, மருந்து - மருந்து, என்று - இப்படி நினைத்து, மாயவன் - ஆஶ்சர்யமான குணங்களையுடைய பகவான், தானுரைத்த - தானே சொன்ன, இன்பக்கடல் - இன்பத்தைத் தரக்கூடிய ஸமுத்திரத்திற்த, அமுதாமென நின்ற - அம்ருதமாகும் இது என்று சொல்லும்படி நிற்கிற, இக்கீதை தன்னை - இந்தக் கீதையை, அன்பர்க்கு - பக்தியுடையவர்களுக்கு, உரைப்பவர் - உபதேசம் செய்பவர்கள், கேட்பவர் - இதைக் கேட்டுக்கொண்டிருக்கிறவர்கள், ஆதரித்து - இதனிடத்தில் மிகுந்த ப்ரீதியைச்செய்து, ஓதுமவர் - அத்யயனம் செய்பவர்கள், துன்பக்கடலில் - துக்கஸமுத்திரத்தில், துக்கஸமுத்திரமாகிய ஸம்ஸாரத்தில் என்றர்த்தம், துளங்குகை — ஸஞ்சரித்துக்கொண்டிருக்கை, இதிலேயே உழன்றுகொண்டிருக்கை என்றர்த்தம், நீங்கி - நிவ்ருத்தியாகி, துலங்குவரே - ப்ரகாசிப்பார்கள். 20

*இப்படிக் கீதையின் பதினெட்டு அத்யாயங்களின் அர்த்தங்களில் 1 'ஸர்வத⁴ர்மாந் பரித்யஜ்ய' என்கிற வரையிலுள்ள ஶ்லோகங்களின் அர்த்தங்களை ஸங்க்ரஹமாக அருளிச்செய்து இனி இதை உபதேசம் செய்யக்கூடிய பாத்ராபாத்ரங்களையும் இதை அத்யயனம் செய்வதின் பலத்தையும் சொல்லுகிற 2 'இத³ம் தே நாதபஸ்காய' என்பது முதலிய ப்ரகரணத்தின் அர்த்தத்தை ஸங்க்ரஹேண அருளிச்செய்கிறார்— இந்தப்பாட்டினால். 'வன்' என்பதினால் 3 'தை³வீ ஹ்யேஷா கு³ணமயீ மம மாயா து³ரத்யயா' என்கிறபடியே ஒருகுருவி பிணைத்தபிணை நம்மால் அவிழ்க்க முடியாதென்றால் ஸர்வ ஶக்தியான ஒருவன் கர்மாநுரூபமாகக் கட்டின கட்டு அவன் கால் கட்டியே அவிழ்த்*

---

1 பகவத்கீதை-18-66 2 பகவத்கீதை-18-67. 3 பகவத்கீதை-7-14

துக்கொள்ள வேண்டும் என்பது சொல்லவேண்டுமோ. ஆகையினால் அந்த ஸர்வேஶ்வரனைத் தவிர மற்றவர்களினால் அவிழ்க்கமுடியாது. 1 'எருத்துக் கொடியுடையானும் பிரமனும் இந்திரனும் மற்றுமொருத்தரும் இப்பிறவி என்னும் நோய்க்கு மருந்தறிவாருமில்லை' என்கிறபடியே இப்படிப்பட்ட ஸம்ஸாரமாகிற பந்தத்தைப்போக்க மற்றொருவராலும் முடியாதென்பது தேறபட்டது. 'அறுக்கும்மருந்து' என்பதற்கு இந்தக் கீதையை அத்யயனம் செய்ய ஸம்ஸாரபந்தம் தன்னடையே கழியும் என்று தாத்பர்யம். அன்றிக்கே வன்-த்ருடமான. பற்று - பற்றுதல், அதாவது ஸ்நேஹம், அர்ஜுநனுக்கு அஸ்தானத்தில் உண்டான ஸ்நேஹம் மற்றொன்றினாலும் போக்க முடியாதாகையினால் அப்படிப்பட்ட ஸ்நேஹத்தை அறுப்பதற்கு இதுமருந்து என நினைத்து என்றாகவுமாம். இது கீதாபாஷ்யத்தில் அவதாரிகையில் '[illegible]' என்றருளிச்செய்யப்பட்டது 'மாயவன்' என்பதினால் ஆஶ்சர்யமான குணங்களையும் சேஷ்டைகளையும், வ்யாபாரங்களையுமுடையவன் என்றர்த்தமாகையினால் 2 'ஸம்வாதமிமமத்புதம்', 3 'விஸ்மயோ மே மஹாந்ராஜந் தச்ச ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய ரூபமத்யத்புதம் ஹரே:', என்றும்சொல்லுகிறபடியேஇந்த ஸம்வாதம் ஆஶ்சர்யமென்பதும் விஶ்வரூபம் ஆஶ்சர்யமென்பதும் சொல்லப்படுகிறது. அன்றிக்கே 'மாயவன்' என்பதினால்தான் ஸாரத்யமாகிற தாழ்ந்ததொழிலைச்செய்து கொண்டிருக்கும்பொழுதே வேதாந்த ஶாஸ்த்ரரஹஸ்யார்த்தத்தை உபதேசம் செய்வதாகிய நிலைவரம்பில்லாத செய்கைகளை நினைக்கிறதாகவுமாம். அதுவுமன்றிக்கே ஶாஸ்த்ரார்த்தத்தை உபதேசப்செய் என்று கேட்டதற்கு அப்படியே உபதேசம் செய்ய ஆரம்பித்ததும், கேட்டபடி காட்டவேண்டுமென்று ப்ரார்த்தித்ததற்கு அப்படியே விஶ்ரூபத்தைக்காட்டினதும், மறுபடியும் 4 'ததேவ மே தர்ஶய தேவ ரூபம்' என்று முன்ரூபத்தை மறுபடியும் காட்டவேண்டும் என்று ப்ரார்த்தித்தற்த அப்படியே காட்டினதுமாகிய அவன் சொல்லிற்றெல்லாம் செய்யும் தன்மையாகிய ஆஶ்ரிதவாத்ஸல்யத்தின் பெருமையை நினைத்து 'மாயவன்' என்கிறார். அதாவது ஒருவருக்கும் வாக்குக்கும் மனதிற்கும் எட்டாததாகையினாலே 5 'எத்திறம்' என்று மோஹித்துக்கிடக்கக்கூடியதான ஆஶ்ரிதஸௌலப்யத்தின் ஆஶ்சர்யத்

---

1 பெரியாழ்வார்-திருமொழி　2 பகவத்கீதை-18-74　3 பகவத்கீதை 18-77.
4 பகவத்கீதை-11-45　5 திருவாய்மொழி-1-3-1

தை நினைக்கிறாராகவுமாம். இந்த ஆஸ்ரிதவாத்ஸல்யம் 'ஆஸ்ரித வாத்ஸல்ய விவஶ: பாண்டும் மயி நம் ஶுத்தாநஞ் ஶாஸ்யம் ஸம்பூர்ணவாக்ஷீ ஞகாம' என்றருளிச்செய்யப்பட்டது. 'தானுரைத்த' என்பதினால் ஆசார்யமுகமாகவுமன்றிக்கே ஒரு குரங்கு முதலியவைகள் மூலமாகவுமன்றிக்கே 1 'ஶ்ரோஷ்யஸ்யஹம் தேவாஜ்ஞா' என்று ஓலைப்புறத்தில் கேட்டுப் போருமதுவு மன்றிக்கே, நித்ய ஸூரிகளுக்குப்போல 'ஸம்கஷ்டாஜெவ' என்று சொல்லுகிறபடியே தன்னெஞ்சில் பட்டதொன்று மன்றிக்கே, 'தஞ்சமாகிய தந்தை தாயொடு தானுமாய்' என்று நமக்கு மிகவும் ஹிதபரர்களாகிய தந்தைதாயாகிய பகவான்தானே நேரில் சொன்ன என்றர்த்தம். 'தானுரைத்த' எனபதினால் அர்ஜுநன் 2 'யச்ச்ரேய: ஸ்யாந் நிஶ்சிதம் ப்ரூஹி தந்' என்று நானிப்பொழுது யுத்தம் செய்வது நல்லதா அப்படிச்செய்யாமலிருப்பது நல்லதா என்கிற அபிப்ராயத்தினால்கேட்டதற்கு யுத்தம் செய், அல்லது செய்யாதே என்றிரண்டித்திலொன்று சொல்ல வேண்டியிருக்க, அப்படிச் சொல்லாமல் அந்த அர்ஜுநன் கேட்ட கேழ்வையை வ்யாஜமாக வைத்துக்கொண்டு 3 'அகல் ஞாலத்தவரறிய நெறியெல்லா மெடுத்துரைத்த நிறை ஞானத்தொரு மூர்த்தி' என்று சொல்லுகிறபடியே ஸகல சேதனர்களும் உஜ்ஜீவிப்பதற்குத் திருவுள்ளம்பற்றி மோக்ஷஸாதனத்தைப்பற்றி ஸந்தேஹம் அவனபிப்ராயத்திலில்லாமலிருக்கத் தனக்குள்ளே அடங்காத கருணை கரைபுரண்டு 4 'வேதாந்தம் ஸவிஸ்தர ஸாரமி உபாஸம்ஹித' என்கிறபடியே இந்தக்கீதா ஶாஸ்த்ரரூபமாக வெளிப்பட்டது. லோகஹிதார்த்தமாக ப்ரவ்ருத்தித ஶாஸ்த்ரங்களெல்லாம் இப்படியே ஒன்றின் மாறுதலாக இருக்கவேண்டும்போலும். ஒருவருக்கு 5 'ஶோக: ஶ்லோகத்வமாகத:'—உள்ளிருந்தசோகத்தில் மிகுதிகரை புரண்டு ஶ்லோகரூபமாய் புறப்பட அதின்மூலமாக லோகஹிதார்த்தமான ஸ்ரீமத் ராமாயணம் லோகத்தில் ப்ரவ்ருத்தித்தது. மற்றொருவருக்கு 6 'ஐதந்த்யேவதிகஷ்டேவேணு ஶோகானுஜநிவாஸஸ்த: வரிணாகி:' என்கிறபடியே உள்ளே அடங்காத பரபக்தி கரைபுரண்டு திருவாய்மொழியாகப் புறப்பட்டது. அதைப்போலவே இவருக்குத்தயை கரைபுரண்டுகீதாஶாஸ்த்ரமாகப்புறப்பட்டது என்றும்திருவுள்

---

1 299ம் பக்கம் புட்நோட்டைப்பார்க்க. 2 பகவத்கீதை-27

3 திருவாய்மொழி-4-8 4 ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரம்

5 த்ரமிடோபநிஷத்தாத்பர்யரத்னாவளி-120 6 த்ரமிடோபநிஷத்ஸாரம்

ளம். 'மாயவன் தானுரைத்த' என்பதினால் ஆஸ்ரிதர்களிடத்தில் உண்டான வாத்ஸல்யத்திற்கு வசப்பட்டவனாகிய தான் சொன்ன தென்று பொருளேற்படுகிறது. இத்தால் ஆஸ்ரித வாத்ஸல்யம் பேசுவிக்கத்தான் பேசினான் என்பது கருத்து. 'இன்பக் கடல்' ஸுகத்திற்கு ஸமுத்திரமாகிய மஹாபாரதம். அதாவது நான்குவித ப்புருஷார்த்தங்களையும் அதற்குபாயங்களையும் அவரவர்கள் அதிகாரத் திற்குத்தக்கபடி நிரூபிக்கிறபடியினாலே 'பாரத: பஞ்சமோ வேத:' என் கிறபடியே ஐந்தாவது வேதமாகச்சொல்லப்படுகிற அவரவர்களுக்கும் ஸுகத்தைக்கொடுக்கக்கூடிய மஹாபாரதம். 'அதற்கு அமுதம்' என் பதினால் அந்த மஹாபாரதமாகிய க்ஷீரஸமுத்திரத்திற்கு இந்தக் கீதை ஸாரம்ஸமாகிய அம்ருதம். அந்த அம்ருதத்தை கடைந்தெடுத்துத் தேவர்களுக்கு அளித்தவனாகிய பகவானே இந்த அம்ருதத்தையும் தேவ ப்ரக்ருதிகளானவர்களுக்களித்தான் என்று திருவுள்ளம். 'பாரதே ஸமவகீதா' என்றல்லவோ சொல்லப்படுகிறது. 'மருந்து, அமுதம்,' என்கிற பதங்களினால் எப்படிப் பகவான் [1] 'மருந்தும் பொருளுமமுத முந்தானே', [2] 'நச்சுமாமருந்தமென்கோ நலங்கடலமுதமென்கோ' என்றும் சொல்லுகிறபடியே பகவான் தன்னை ஆஸ்ரயித்தவர்களுக்கு மருந்தாகவும், அனுபவிக்கக்கூடிய அம்ருதமாகவும் சொல்லப்படுகிறானோ அப்படியே அவனருளிச்செய்த பகவத்கீதையும [3] '[illegible] ம்ருதம்' என்கிறபடியே மருந்தாயும் அம்ருதமாயும் இருக்கிற தென்று திருவுள்ளம். 'இக்கீதைதன்னை' என்று தப்புத்தியில் எப்பொழுதும் அனுஸந்தானம் செய்யப்படுகிற கீதையின் போக்யதாதிஸயத் தைக்குறித்துக்காட்டுகிறார். [4] 'இச்சுவை தவிர யான் போய்' என்ப தைப்போல ஸம்ஸாரத்தைத் தீர்க்கக்கூடிய மருந்தாக இல்லாமல் போன போதிலும் அபத்யமாயும் மதுரமுமான ஆஹாரங்களில் தத்காலத் திலுண்டாகும் ஸுகத்திலாசையினால் லோகத்தில் ப்ரவ்ருத்திப்பது காணப் படுகிறதைப்போல இதின் ஸுகத்தைத் தெரிந்தவர்கள் இதின் அனுஸந்தானத்தைவிடமாட்டார்கள். ஆகவே 'விடாய்த்தீரகங்காஸ்நானம் செய்தால் பாபம் தன்னடையே கழியுமாப்போலே' என்றும், [5] 'மது வார்துழாய் முடிமாயப்பிரான் கழல் வாழ்த்தினால் அதுவே இவ ளுற்ற நோய்க்குமரு மருந்தாகுமே' என்றும் சொல்லுகிறபடியே போக்யதாதிசயத்தால் அனுஸந்தானம் செய்ய ஸம்ஸாரரோகம் தன் னடையே கழியும் என்றும் திருவுள்ளம். 'மருந்தொன்று' என்றும்

---

1 மூன்றாம் திருவந்தாதி 2 திருவாய்மொழி-3-3
3 பகவத்கீதை-10 4 திருமாலை - 2 5 திருவாய்மொழி-4-5

பாடமுண்டு. அப்பொழுது 'ஒன்று' என்பதற்கு அத்விதீயமானது என்றர்த்தம். இதைப்போல ஸ்வயம்போக்யமாயும் மருந்தாயுமிருப்பது மற்றொன்றுகிடையாது என்று திருவுள்ளம். பாலையும் மருந்தென்று பேரிட்டுக்கொடுக்குமாகில் கைக்குமிறே. அன்றிக்கே 1 'ஔஷதம் [illegible] நாராயணம்', 2 'வெற்புடனொன்றி அயிந்தையில் வெவ்வினை தீர்மருந்தொன்று அற்புதமாகவமர்ந்ததுமே' என்றும் சொல்லுகிறபடியே மற்ற மருந்துகளைப்போல மாஸம், பக்ஷம், வருஷம், முதலிய தீர்க்ககாலங்களில் அநேகம் தடவைகளில் ஸாப்பிடவேண்டியதும், மேனுக்குப்பூச வேண்டியதுமாக அல்லாமல் மருந்தை மனதினால் ஒருதடவை நினைக்க ஸர்வ வ்யாதிகளும் ஶமிக்கும்படியாகயிருக்கை அத்விதீயமென்னப்படுகிறதாகவுமாம். 'அன்பர்க்கு' என்பதினால் பக்திபுடையவர்களுக்கென்று சொல்லப்படுகிறது. இத்தால் 3 'ய இமம் பரமம் குஹ்யம் மத்பக்தேஷ்வபிதாஸ்யதி' என்கிற ஶ்லோகத்தின் அர்த்தம் ஸங்க்ரஹிக்கப்பட்டது. அவ்விடத்தில் தாத்பர்ய சந்த்ரிகையில் 'மத்பக்தேஷு' என்பதினாலேயே தபஸ்ஸு செய்யாமை முதலிய தோஷங்கள் அவர்களுக்கில்லை என்று நிராகரிக்கப்பட்டன' என்றருளிச்செய்யப்பட்டிருக்கிறது. ஆகையினால் 4 'இதம் தே நாதபஸ்காய' என்று கீழ் ஶ்லோகத்தில் ப்ரஸ்தாவிக்கப்படுகிற தபஸ்ஸு செய்யாமை, ஶ்ரத்தை இல்லாமை, பக்தி இல்லாமை, பகவானிடத்தில் பொறாமை யுடையவனாக இருக்கை, முதலிய தோஷங்களில்லாதவர்களுக்கு என்று திருவுள்ளம். மேலும் பக்தியின் லக்ஷணம் சொல்லுமிடத்தில் 5 'மத்கதாஶ்ரவணே பக்தி: ஸ்வரநேத்ராங்கவிக்ரியா। ஸ்வயமாராதநே யத்ந:' என்றிவை முதலியவைகள் 'பக்திரஷ்டவிதா' என்று பக்தியின் உட்பிரிவுகள் எட்டுவிதமென்று சொல்லப்படுகிறபடியினால் பகவானுடைய கல்யாணகுணங்களைக்கேட்பதில் ஶ்ரத்தையும், கேட்கும்பொழுது மயிர்க்கூச்சம், ஆநந்த பாஷ்பம், முதலிய ஶரீரத்தின் வேறுபாடுகளும், பகவானை ஆராதனம் செய்வதில் ப்ரயத்னம் செய்வதும், முதலிய குணங்கள் பக்தியின் உட்பிரிவாகஏற்படுகிறபடியினால் மேல்சொல்லிய தோஷங்கள்உடையவர்களுக்குஇந்தக்குணங்கள் ஸம்பவிக்காது. ஆகையினால் அவைகள் இல்லைஎன்று தானாகவே ஏற்படுகிறது. 'உரைப்பவர்' என்பது அர்த்தத்துடன் உபதேசம் செய்வதைச்சொல்லுகிறது. 'கேட்பவர்'என்

---

1 விரோத பரிஹார ரஹஸ்யம்

2 மும்மணிக்கோவை-9 3 பகவத்கீதை-18-68

4 பகவத்கீதை-18-67 5 விஷ்ணுபுராணம்

பது அந்த அர்த்தத்துடன் கேழ்ப்பவர்களைச் சொல்லுகிறது. 'ஆதரித்தோதுமவர்' என்பது 1 'ஸ்வாத்யாஸ்யதேச ய இமம் தர்ம்யம் ஸம்வாதமாவயோ:।' என்கிற ஶ்லோகத்தில் சொல்லுகிறபடி கேவலம் ஶப்தத்தை மாத்திரம் அத்யயனம் செய்பவர்களைச் சொல்லுகிறது. அன்றிக்கே 'கேழ்ப்பவர்' என்பது அபலார் உபதேசம் செய்துகொள்ளும் பொழுது கேட்டுக்கொண்டிருப்பவரைச் சொல்லுகிறது. 'ஆதரித்தோதுமவர்' என்பது 2 'ஶ்ரத்தாவாநநஸூயஶ்ச' என்கிற ஶ்லோகத்தில் சொல்லப்படுகிற ஶ்ரத்தாபூர்வகமான அத்யயனத்தைச்சொல்லுகிறது. 'துன்பக்கடலுள் துளங்குகை நீங்கி' என்பதினால் பரமபுருஷார்த்தமாகிய மோக்ஷம் கிடைத்தாலும் கிடைக்கட்டும் கிடைக்காமல்போனாலும் போகட்டும், இந்தத் துக்கஸாகரத்திலிருந்து நீங்குவதே பெரிய புருஷார்த்தம் என்று தெரிவிப்பதாக அநிஷ்ட நிவ்ருத்தியை முதலில் அருளிச்செய்தபடி. அன்றிக்கே 'துன்பக்கடலில் துளங்குகை நீங்கி' என்பது இஹலோகத்திலேயே கிடைக்கக்கூடிய புருஷார்த்தத்தை அருளிச் செய்தபடியாகவுமாம். 3 'சீர்கலந்தசொல் நினைந்துபோக்காரேல் சூழ்வினையின் ஆழ்துயரை என்னினைந்துபோக்குவரிப்போது' என்று ஸம்ஸாரதசையிலேயே பகவத்குணாநுபவத்தினால் உண்டாகிய ப்ரீதி வ்ருத்தியடைந்து ஸம்ஸாரதுக்காநுபவம் கொஞ்சம் கொஞ்சமாக நிவ்ருத்தித்துவிடும் என்று தாத்பர்யம். 'துலங்குவரே' என்பதினால் பரமபுருஷார்த்தத்தை அருளிச்செய்தபடியாகவுமாம். 4 'யதாதர்ஶம்' என்றும், 5 'அழுக்கடைந்து கழுவியநற்றரளம் போல' என்றும் சொல்லுகிறபடியே மண்பற்றுக் கழறறவேண்டியது போக்கி ஸ்வாபாவிகமான ஜ்ஞானத்தின் விகாஸமும் ஸ்வரூப ப்ராப்த கைங்கர்யமாகிய புருஷார்த்தமும் தன்னடையே ஸித்திக்கிறது என்று திருவுள்ளம். அன்றிக்கே 'துலங்குவரே' என்பது நித்யஸூரிகளினுடைய அழகோலக்கத்திலே சென்று அந்த எண்ணிறந்த நித்யஸூரிகளுக்குள் ஒருவனாகமாத்திரமிராமல் 6 'தேவர் வைகல் தீர்த்தங்களே என்று பூசித்து நல்கி உரைப்பர் தந்தேவியர்க்கே' என்றும், 7 'வஹந்தி முக்தா: ஶ்ரியம்' என்றும்சொல்லுகிறபடியே அபூர்வமான ஒரு நாயகரத்தினம் இழைத்ததுபோல அந்தநித்யஸூரிகளின் திருவோலக்கத்திற்கு இவர்களினால் பூர்த்தி என்று சொல்ல

---

1 பகவத்கீதை-18-71
2 பகவத்கீதை-18-70
3 பெரிய திருவந்தாதி-76
4 விஷ்ணுபுராணம்
5 பரமபதஸோபாநம்
6 திருவாய்மொழி-7-10-11
7 அச்யுதசதகம்

லாம்படி ப்ரகாசித்துக்கொண்டிருப்பார்கள் என்று திருவுள்ளமாகவு மாம். அப்பொழுது வந்தவரான ஸ்ரீ விபீஷணாழ்வாரைப் பற்றி 1 'ஸுக்ரீவ ஸஹராமாய ஸஹாயோ பவ' என்றல்லவோ மஹாராஜர் பிரார்த்தித்தார். அவ்விடத்தில் 'இவனொருவனுமே ஒருதலையும் நாங்களெல்லாரும் ஒருதலையுமாக விஷயீகரித்தருள வேண்டுமென்று ஏகவசனத்திற்கும் பஹுவசனத்திற்கும் தாத்பர்யம்' என்று தம்மாலேயே வ்யாக்யானம் அருளிச் செய்யப்பட்டிருக்கிறது.

தீதற்ற நற்குணப்பாற் கடற்றாமரைச் செம்மலர்மேல்
மாதுற்ற மாயன்மருவ விக்கீதையின் வண்பொருளைக்
கோதற்ற நான்மறை மௌலியினாசிரியன் குறித்தான்
காதற்றுணிவுடையார் கற்றும் வண்ணங் கருத்துடனே. 21

ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிக னருளிச் செய்த
ஸ்ரீகீதார்த்த ஸங்க்ரஹப் பாட்டு முற்றிற்று.
ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்.

சீரொன்று தூப்புற்றிருவேங்கடமுடையான்
பாரொன்றச் சொன்ன பழமொழியுள் - ஓரொன்று
தானே யமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு
வானேறப் போமளவும் வாழ்வு.

---

ப-ரை] தீது - தோஷம், அற்ற - இல்லாததான, நல் - நல்லதாகிய, குண - குணங்களையுடைய, பாற்கடல் - க்ஷீரஸமுத்திரத்தினுதித்தவளான, அன்றிக்கே நல்லகுணங்களுக்குப் பாற்கடலாகிய, தாமரைச் செம் மலர்மேல் - தாமரையினுடைய சிவந்த புஷ்பத்தின்மேல் வஸிக்கிற, மாது - மஹாலக்ஷ்மியினால், உற்ற - அடையப்பட்ட, மாயன் - ஆச்சர்யமான குணம் முதலியவைகளையுடைய ஸ்ரீ க்ருஷ்ணன், மருவ - ப்ரீதி செய்யும்படி, அவன் திருவுள்ளமுகக்கும்படி என்றர்த்தம், இக்கீதையின்- இந்தக்கீதையினுடைய, இன்கீதையின் என்று பாடாந்தரம், அப்பொழுது இன் – இனியதான அதாவது அர்த்த ஜ்ஞானமின்றிக்கே சப்தமாத்திரத்தினாலும் போக்யமான என்றர்த்தம், வண்பொருளை – விலக்ஷணமான அர்த்தத்தை, அல்லது வண்பொருளை - அழகிய அர்த்தத்தை, கோது - தோஷம், அற்ற - இல்லாததான, நான்மறை - நாலுவேதங்களினுடைய, மௌலியன் - உபநிஷத்பாகங்களின், ஆசிரியன்- ஆசார்யனாகிய அதாவது

---

1 ராமாயணம்-யுத்தகாண்டம்

வேதாந்தாசாரியன் என்றர்த்தம், காதற்றுணிவுடையார் - காதல் - ப்ரீதி, அதாவது பக்தி. துணிவு - விஶ்வாஸம் அதாவது விஶ்வாஸத்தை அங்கமாகவுடைய ப்ரபத்தி, இவைகளையுடையவர்கள், அதாவது பக்தப்ரபன்னர்களாகிய இரண்டதிகாரிகளும், கற்கும் வண்ணம்-அப்யஸிக்கும்படி, கருத்துடனே - ஸாவதானத்துடன், அன்றிக்கே இவ்விருவர்களும் கருத்துடனே கற்கும் வண்ணம் என்றந்வயிக்கவுமாம், அதாவது தங்கள் தங்கள் அதிகாரத்திற்குத் தகுந்தபடி அனுஷ்டிக்கவேண்டிய பாகங்களை இந்தக்கீதா ஶாஸ்த்ரம் சொல்லுகிறபடியினால் இவ்விருவரும் ஸாவதானமாய்க்கற்கும்படி, குறித்தான் - ஸங்க்ரஹித்தான். 21

*இவ்விதமாகக்கீதா ஶாஸ்த்ரத்தில் பதினெட்டு அத்யாயங்களின் அர்த்தங்களையும், மேல் அதிகாரிகளைக் குறிக்கிற பாகத்தின் அர்த்தத்தையும், அப்படி அப்யஸிக்கிறவர்களின் பலத்தைச்சொல்லுகிற பாகத்தையும் ஸங்க்ரஹித்த பிறகு ஆளவந்தார் இவ்விதமாக கீதார்த்த ஸங்க்ரஹமருளிச் செய்திருக்க தானேந கீதார்த்த ஸங்க்ரஹமருளிச் செய்ததற்கு ப்ரயோஜனத்தையும் அப்படித்தாமருளிச்செய்த அர்த்தம் பகவானுடைய திருவுள்ளத்திற்கு ஒத்தது என்பதையும் தெரிவித்துக்கொண்டு இப்படித் தாமருளிச்செய்த அர்த்தத்திற்கு கர்த்ரு வைலக்ஷண்யத்தையும் தெரிவித்துக்கொண்டு இப்படித் தாமருளிச்செய்த கீதார்த்த ஸங்க்ரஹம் பகவத் ப்ரீத்யர்த்தமென்று ஸாத்விகத்யாகம் செய்துகொண்டு நிகமனம் செய்கிறார்— இந்தப்பாட்டினால். இங்கு 'தீதற்ற' என்பது குணங்களிலும், தாமரை செம்மலர்மேல் மாது இடத்திலும், மாயனிடத்திலும் அந்வயிக்கிறது. குணங்களுக்குத் தீதில்லாமையாவது தோஷங்களோடு கலந்திருக்கை, அளவுபட்டிருக்கை முதலியவைகளில்லாமை. அன்றிக்கே 1 'வ்ருஷகிரிக்ருஹமேதி குணா: போதபலைஶ்வர்ய வீர்யஶக்திமுகா:। தோஷாபவேயுரேதே யதி நாம தயே த்வயா விநாக்ருதா:॥' என்கிறபடியே தயை இல்லாமையினால் தோஷரூபமாக பர்யவஸானத்தை அடையாமல் க்ருபையை அநுஸரித்திருக்கையாகவுமாம். 'குணங்களுக்குப் பாற்கடலாகிய' என்கிற யோஜனையில் 2 'பாற்கடல் தன்னில் பன்மணியன்ன சீர்க்கணம் சேர்ந்த சீலமெல்லை இலை', 3 'யதா ரத்நாநி ஜலதேரஸங்க்யேயாநி புத்ரக। ததா குணாஸ்த்வநந்தஸ்ய அஸங்க்யேயா ஹி சக்ரிண:॥' என்றும் சொல்லுகிறபடியே ஓரோர் குணங்களை ஆஶ்ரிதர்களை ரக்ஷிப்பதற்குப் போதுமானது.*

---

1 *தயாசதகம்*- 2 *மும்மணிக்கோவை*-6

3 **விஷ்ணுபுராணம்**

இப்படிப்பட்ட குணங்கள் எண்ணிறந்தவைகள் அவனுக்கு இருக்கின்றன என்பது திருவுள்ளம். 'பாற்கடலுள் வந்துதித்தவளாகிய' என்னும் யோஜனையில் 1 'யதுபயதோ வைராய்யராஸாய்யவிஸ்ரீவ' என்கிறபடியே 'அழகில் வரும் பெண்ணமுது' உண்டவருக்தம் தெரிவிக்கப்படுகிறது. இத்தாலும் 'மாதுறை மாயன்' என்பதாலும், 'மாயன்' என்கிற இடத்தில் மார்பன் என்றும் பாடாந்தரமுண்டு. அப்பொழுது 'வக்ஷஸ்ஸ்தலஹ்யாஹவநம் ஸம்ஜாதஹாஸம்' என்பதினர்த்தம் அருளிச்செய்யப்பட்டது. ஆக இரண்டினாலும் எம்பெருமானுக்குப் பிராட்டியினிடத்திலிருக்கும் வ்யாமோஹாதிசயம் தெரிவிக்கப்பட்டது. 'தாமரைச் செம்மலர்மேல் மாது' என்பதினால் தாமரை புஷ்பத்தில் குடியிருப்பு அஸஹ்யமாய் பகவானுடைய திருமார்பில் வந்தடைந்தமை சொல்லப்படுகிறது 'பாற்கடலினுதித்தவளாகிய' என்பதினால் க்ஷீராப்திமதன காலத்தில் ஸர்வதேவதைகளும் திரளாகவந்திருக்க 2 'பஶ்யதாம் ஸர்வதேவாநாம் யயௌ வக்ஷஸ்ஸ்தலம் ஹரே:' என்கிறபடியே அவர்களை அநாதரித்துவிட்டுப் பகவானுடைய திருமார்பை ஆஶ்ரயித்ததாகிய ப்ராட்டியின் வ்யாமோஹாதிசயம் சொல்லப்படுகிறது. இப்படி 3 'தஸ்யா பர்தா ஹ்ருதயே பரிவர்த்தஸ்ய ஹ்ருதயஸ்தம் ப்ரதிஷ்டிதம்', 4 'ந ஜீவேயம் க்ஷணமபி', 5 'அகலகில்லேனிறையும்', என்கிறபடியே ஒருக்ஷணகாலவிப்ரலேஷமும் பொறுக்காததான பரஸ்பர வ்யாமோஹாதிசயம் அருளிச்செய்யப்பட்டது. 'தீதற்ற நற்குண' என்பது மாதுக்குவிசேஷணமாக இருக்கும் யோஜனையில் பகவானைப்போல தண்டதரத்வம், நிக்ரஹம், முதலியவைகளோடு கலக்காமல் 'அநுக்ரஹைகஸ்வபாவம்' என்கிறபடியே கேவலம் அநுக்ரஹமாத்திரத்திற்கு இருப்பிடம் என்று தாத்பர்யம். ஆக இத்தால் 6 'பாபாநாம் வா ஶுபாநாம் வா வதார்ஹாணாம் ப்லவங்கம । கார்யம் கருணமார்யேண ந கஶ்சிந்நாபராத்யதி', 7 'விதித: ஸ ஹி தர்மஜ்ஞ: ஶரணாகதவத்ஸல:' இத்யாதிகளாலே ஶரணாகதர்களை ரக்ஷிப்பதில் 8 'மாதர் மைதிலி ராக்ஷஸீஸ் த்வயி ததைவார்த்ராபராதாஸ் த்வயா ரக்ஷந்த்யா பவநாத்மஜால் லகுதரா ராமஸ்ய கோஷ்டீ க்ருதா' என்கிறபடியே பெருமாளைவிட முற்பட்டவளாகிய லக்ஷ்மியோடு ஐகரஸ்யம் எம்பெருமானுக்குண்டென்று 9 'ஶௌசஸ்ய ஜ

---

1 ஸ்தோத்திரரத்னம்   2 விஷ்ணுபுராணம்
3 ராமாயணம்-பாலகாண்டம்
4 ராமாயணம்-ஸுந்தரகாண்டம்   5 திருவாய்மொழி-6-10
6 ராமாயணம்-யுத்தகாண்டம்   7 ராமாயணம்-யுத்தகாண்டம்
8 ஸ்ரீகுணரத்னகோசம்   9 ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரம்

ஷாத்ருஷ்டிநம் வத்ராஸம் புகூலம்' என்றும், 1 'யஸ்யா வீக்ஷ்ய முகம் ததிங்கித பராதீநோ விதத்தேகிலம்' என்றும் அருளிச்செய்யப்பட்டிருப்பதினால் இந்தக்கீதையில் ஸகரமாய் ஸர்வாதிகாரமான ஸ்வதந்த்ர ப்ரபத்தியை எம்பெருமானருளிச் செய்யாவிடில் மேற்கூறிய பிராட்டியுடன் ஐகரஸ்யம் எம்பெருமானுக்கு ஸித்திக்காது என்று திருவுள்ளம். இந்தப் பெரியபிராட்டியாரின் அவயவபூதையாய் ஸ்தனபாஹு க்ருஷ்ணர் டிகல்வையான பூமிபிராட்டியாரும் 2 'ஏவம் ஸுகேந தேவேச பக்தாநாம் மோக்ஷஸாதநம் வத மே ஹரே' என்று கேழ்க்க 'ஸ்திதே மநஸி' இத்யாதியால் இவனும் உபதேசித்தானிறே. 'தீதற்ற நற்குண' என்பது மாயனுக்கு விசேஷணமாகும் பக்ஷத்திலும் விப்ரலம்பம், வைஷம்யம், நைர்க்ருண்யம் முதலிய தோஷங்கள் இவனுக்கும் ஸம்பவிக்குமென்று திருவுள்ளம். எப்படி என்னில் ஸ்ரீவராஹப்பெருமாளாயவதரித்திருக்கும் தசையில் பூமிப்பிராட்டிகேழ்க அந்திமப்ரத்யயம் தன்னுடைய ப்ரயத்தினத்தினாலே ஸாத்யமில்லாதபடியினாலே ஸலபமாய் ஸக்ருத்கர்த்தவ்யமான உபாய விசேஷத்தை 3 'ஸ்திதே மநஸி' என்கிற இரண்டு ச்லோகங்களினாலருளிச்செய்தான். ஸ்ரீராமாவதாரத்திலும் 'ஸக்ருதேவ ப்ரபந்நாய' என்றும், 'அபயம் ஸர்வபூதேப்யோ ததாம்யேதத் வ்ரதம் மம' என்றும், 'பத்தாஞ்ஜலிபுடம் தீநம் யாசந்தம் சரணாகதம் ந ஹந்யாதாந்ருசம்ஸ்யார்த்தமபி சத்ரும் பரந்தப' இத்யாதிகளான மஹருஷிவாக்யங்களை உதாஹரித்து சரணாகதர்களைத் தன்னுடைய சக்திக்கு அனுகுணமாக ரக்ஷிக்கவேண்டுமென்றும் அப்படிச் செய்யாவிட்டால் பாபம் என்றும் அருளிச்செய்தான். அஹிர்புத்ந்ய ஸம்ஹிதாதிகளிலும் 'ஸக்ருதேவ ஹி சாஸ்த்ரார்த்த: க்ருதோயம் தாரயேந்நரம் உபாயாபாய ஸம்யோகே நிஷ்டயா ஹீயதேऽநயா' இத்யாதிகளில் ப்ரபத்தி மோக்ஷஸாதனமென்று தானே பலவிடங்களில் அருளிச்செய்திருக்கிறான். அப்படி இருக்க இவ்விடத்தில் அங்கப்ரபத்தியைமாத்திரம் அருளிச்செய்ததாக இருந்தால் இது அர்ஜுநனை மாத்திரம்பற்றி இருந்தபோதிலும் எல்லா ஜீவர்களையும்பற்றி இருந்தபோதிலும் விப்ரலம்பகத்வம், வைஷம்யம், முதலிய தோஷங்கள் எம்பெருமானுக்கு ஸம்பவிக்கும். ஏனெனில் ஸுலபமாயும் ஸர்வாதிகாரமுமான உபாயமிருக்க அதை அருளிச்செய்யாமையினால். ஆகையினால் ஸ்ரிய: பதித்வம், ஸத்யஸங்கல்பத்வம், ஸர்வசக்தித்வம் முதலியவைகள் எம்பெருமானுக்கு ஸித்திப்பதற்காக இந்த சரமச்லோகத்தில் ஸ்வதந்த்ரப்ர

---

1 ஸ்ரீகுணரத்தின கோசம் 2 வராஹபுராணம்

3 வராஹசரமச்லோகம்

பத்தியும் விவக்ஷிதம் என்றவர்த்யம் ஒப்புக்கொள்ளவேண்டும் என்பது திருவுள்ளம். 'மருவ' என்பதற்கு அவன் திருவுள்ளமுகக்க என்றர்த்தமாகையினால் 1 'நவாஹா நவஸிஷம்வஷ்ஷுராஸ' இத்யாதிகளில் படியே கில்வான ப்ரயோஜனங்களைப்பற்றியாவது தன்னுடைய ஸாமர்த்யாதிகளை ப்ரகாசம்செய்யவாவது இந்தக்கிரந்தம் அருளிச்செய்யப்படவில்லை. 'தர்க்கபாண்டித்யத்தினாலே நினைத்ததெல்லாம் ஸாதிக்கலாயிருக்கச்செய்தேயிறே நாம் ப்ரமாணபரணராய்ப் போருகிறது' என்றருளிச்செய்தபடியே ப்ரமாணஸரணியை அநுஸரித்துப் பகவானுடைய திருவுள்ளமுகப்பதற்காகச்செய்தோம் என்று தாம் க்ரந்தம் அருளிச்செய்ததற்குப் பகவத் ப்ரீதியே ப்ரயோஜனமாக அநுஸந்தித்து ஸாத்விகத்யாகம் செய்தபடி. மற்ற கர்த்ருத்வ ஸங்கத்யாகங்களும் இதினால் அர்த்த ஸித்தங்களாகவுமாம். அவனுடைய ப்ரீதியாகிற பலத்திற்குக் காரணமாகையினாலே இது பகவானுக்குச் சேஷமென்னும் இரண்டினாலும் கர்த்ருத்வம் அவனுடையதென்பது மேற்பட்டது. மேலும் 'மாயன் மருவ (எம்பெருமான் திருவுள்ள முகக்க)' என்பதினால் தனக்குவைஷம்யம் முதலிய தோஷங்கள் வராதபடிக்கும், பெரிய பிராட்டியோடு ஐகரஸ்யம் உண்டாகும்படிக்கும் தன்னுடைய குணங்கள் தோஷபர்யவஸாநமாகாதபடிக்கும் சரமஶ்லோகத்தின் அர்த்தத்தை இவ்வாசாரியனருளிச் செய்தபடியினால் இவரிடத்தில் பகவானுடைய திருவுள்ளமுகந்தது என்று தாத்பர்யம். ஆகையினால் இப்படியே 'ராமாநுஜஷ்யாவாத்ரூ:' என்கிற தனியன் வ்யாக்யானத்தில் பலராமனுக்கு அநுஜனாகிய கண்ணனுடைய தயைக்குப் பாத்திரம் என்று அபியுக்தர்களினால் வ்யாக்யானம்செய்யப்பட்டு அதற்குக் காரணம் இவ்விதமாகவே நிரூபிக்கப்பட்டிருக்கிறது. 'வண்பொருளை' என்பதினால் இது விலக்ஷணமான அர்த்தம். கீதையின் உபக்ரமோப ஸம்ஹாராதிகளாலே கீதா ஶாஸ்த்ரத்திற்கே பரம தாத்பர்யமாக நிஶ்சயிக்கப்பட்ட விலக்ஷணமான அர்த்தத்தை என்றர்த்தம். இதற்கு வைலக்ஷண்யமாவது 'ஊதி ஶ்ரீதாய்ஞூஸம்ஹாஹ:' என்கிற இடத்தில் தாமருளிச்செய்திருக்கிறபடியே யோககதையில் நாதமுனிகளினால் ஸாக்ஷாத்கரிக்கப்பட்டு அந்தப் பரம்பராப்ராப்தமான அர்த்தத்தை என்றபடி. 'கோதற்ற' என்பது நான்மறைமௌலிக்கும், ஆசிரியனுக்கும் விசேஷணமாகவுமாம். வேதாந்தத்திற்கு விசேஷணமாகும்பொழுது 'ஆகையினால் பரந்யாஸத்தை கீழ்ச்சொல்லிய எல்லாவிதத் தபஸ்ஸுக்களைவிட மேல்பட்டதாகச் சொல்லுகிறார்கள்' என்றும், 'அப்படிப்பட்ட தேவனை மோக்ஷத்திலாசையுடைய நான் ஶரணமாக அடைகிறேன்' என்று அர்த்தமுள்ள உபநிஷத் வாக்யங்கள் வேறொருவிதமாக அர்த்தம் சொல்ல முடியாதாகையினால் ப்ரபலங்கள் என்பதும் திருவுள்ளம். 'ஆசிரியன்' என்பதற்கு விசேஷணமாகும் பொழுது

1 ராமாயணம்-யுத்தகாண்டம்

1 '[illegible]' என்கிறபடியே விப்ரலம்பம் முதலிய தோஷங்கள் ஒன்றுமில்லாதவர் என்றர்த்தம். இதுவும் ஸப்ததிரத்நமாலிகையில் ப்ரதிவாதிபயங்கரம் அண்ணாவினால் 2 '[illegible]' இத்யாதி '[illegible]' இத்யந்தம் அருளிச்செய்யப்பட்டது. காதலித்யாதி—3 'ஒண்டொடியாள் திருமகளும் தானுமாக ஒருநினைவாலீன்றவுயிரெல்லாமுய்ய' என்றும், 4 '[illegible]' என்றும் தாமருளிச் செய்தபடியே இப்படித் தாம் அர்த்தம் அருளிச் செய்தபடியினால் இந்தக்கீதாஶாஸ்த்ரம் ஸர்வஜநோபஜீவ்யமானது என்று திருவுள்ளம். 21

யஸ்ய ஶ்ரீவாஸராமாநுஜமுநே:
கருணாவாப்தவேதாந்தயுக்ம:
ஜ்ஞாதாஶேஷார்த்தஶாஸ்த்ரஸ்ஸவிது
ரவகத ஶ்ரீரஹஸ்யத்ரயார்த்த:|
[illegible]
[illegible]
[illegible]
[illegible] ||
ஶ்ரீமதே ஶ்ரீநிவாஸராமாநுஜாய நம:

ஸ்ரீநிவாஸராமாநுஜ மஹாதேசிகன் கருணையினால் அறியப்பட்ட உபய வேதாந்தார்த்தங்களை உடையவராயும், தன் தகப்பனாரிடத்திலிருந்து அறியப்பட்ட மற்றெல்லா ஶாஸ்த்ரங்களை யுடையவராயும், ரஹஸ்யத்ரயங்களின் ஸாரார்த்தங்களைத் தெரிந்து கொண்டவராயுமிருக்கிற திருவஹீந்த்ரபுரம் சேட்லூர் – வித்வான் பகவத் விஷயம் நரஸிம்மாசார்யரால் செய்யப்பட்ட கீதார்த்த ஸங்க்ரஹப்பாட்டின் வ்யாக்யானம் முற்றிற்று.

---

1 ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரம் 2 ஸப்ததரத்னமாலிகை
3 திருவாய்மொழி 4 தாத்பர்ய சந்த்ரிகை.